# திருச்செந்தூர்

# முருகன் கோயில் வரலாறு

பேராசிரியர்

டாக்டர் ந. கல்யாணசுந்தரம். எம்.ஏ.,பிஎச்.டி.,

**திருக்குமரன் பதிப்பகம்.**

66, சபாபதிபுரம் தெரு,

திருச்செந்தூர்

1 நூற்பெயர்: திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாறு

2 ஆசிரியர்: பேராசிரியர் டாக்டர்
ந. கல்யாணசுந்தரம், எம். ஏ., பிஎச்., டி
தமிழ்த் துறைத் தலைவர்,
ஆதித்தனர் கல்லூரி, திருச்செந்தூர்

3 மொழி: தமிழ்

4 பொருள்: திருச்செந்தூர்க் கோயிலின் நாள் வழி பாடு மற்றும் திருவிழாக்கள் பற்றிய ஆய்வு.

5 பதிப்பு: முதல்

6 வெளியிட்ட நாள்: ஆகஸ்டு, 1980

7 உரிமை: ஆசிரியர்க்கு

8 தாள்; 15.2 கிலோ

9 நூல் அளவு: 22.5 × 18.5 செ.மீ

10 அச்செழுத்தளவு: 10, 11, 12.

11 பக்கங்கள்: 202 + 8 + 22

12 படிகள்: 1000

13 அச்சகம்: சி.எம் எஸ் அச்சகப் பயிற்சிப் பள்ளி,
பாளையங்கோட்டை

14 விலை: ரூ25 (இருபத்தைந்து)

15 வெளியீடு: திருக்குமரன் பதிப்பகம்,
66, சபாபதிபுரம் தெரு,
628215.

# படையல்

மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத் தமிழியல் துறைப் பேராசிரியராய் விளங்கி இத்தலைப்பினைத் தேர்ந்தளித்து அல்லும் பகலும் உழைத்து இவ்வாய்வேடு சிறப்புற வழிகாட்டியாய்த் துணை நின்ற டாக்டர் முத்துச்சண்முகனாரவர்கள் பொன்னார் திருவடிகட்கு.

6 – 8 – 80. ந. கல்யாண சுந்தரம்.

# வாழ்த்துரை

டாக்டர் G. R. பாலகிருஷ்ணன்
தலைவர், அறங்காவலர் குழு
அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் திருச்செந்தூர்.

திருச்செந்தூர் ஆதித்தனார் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர் டாக்டர் திரு. ந. கல்யாணசுந்தரமவர்கள், திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாற்றைச் சரித்திர, பண்பாட்டு அடிப்படையில் ஆராய்ந்து விளக்கப் படங்களுடன் வெளியிட்டுள்ளார்கள்.

எதிர்காலத் தமிழ்ச் சமுதாயத்துக்கும் முருகன் அடியார்களுக்கும் பயன்படும் வகையில் தமிழகத்தில் முதன் முதலாக ஒரு கோயில் வரலாற்றைப் பண்பாட்டு அடிப்படையில் எழுதிப் பெருந் தொண்டாற்றியுள்ள அவர்கள் பல்லாண்டு புகழுடன் வாழவும் இது போன்று சமயத் தொண்டாற்றவும் வாழ்த்துகிறேன்.

(ஒப்பம்) G. R. பாலகிருஷ்ணன்.

6—8—80

# அணிந்துரை

பேராசிரியர் இரா. கனகசபாபதி, எம். ஏ.,
முதல்வர், ஆதித்தனர் கல்லூரி,
திருச்செந்தூர்,
ஆட்சிக்குழு உறுப்பினர், மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்,

எம் கல்லூரி ஆசிரியர் பலர் டாக்டர் பட்டத்திற்காக முயல்கின்றனர். சிலர் அப்பட்டம் பெற்றுள்ளனர். அவருள் திருச்செந்தூர் முருகன் கோயில் — நாள் வழிபாடும் திருவிழாக்களும் என்ற ஆய்வேடு முதலாவதாக அளிக்கப் பெற்றுப் பட்டம் பெற்றதைக் கண்டு பெருமகிழ்வடைகிறேன்.

திருச்செந்தூர் முருகன்பால் அசையாத பத்தி கொண்ட டாக்டர் திரு ந. கல்யாணசுந்தர மவர்கள் வழிபாட்டு முறைகள் பற்றி அனைவரும் புரியும் வண்ணம் எளிய நடையில் எழுதி நூலாக்கியுள்ளார்கள்.

திருக்கோயிலில் நடைபெறும் நாள் வழிபாடு, திருவிழாக்கள் ஆகியவற்றின் தத்துவங்களை விரிவாக ஆராய்ந்துள்ளார்.

இந்து மதத்தைப் பற்றியும், கோயில்களைப் பற்றியும் பல நூல்கள் வெளிவரவேண்டும். குறிப்பாக, மாணவர்உலகம் படித்து அறியும் படியாகத் தமிழில் நூல்கள் வெளிவரவேண்டுமென்பது எனது மிகுந்த அவா. இதனை ஓரளவு நிறைவேற்றிய டாக்டர் ந. கல்யாணசுந்தரமவர்களைப் பெரிதும் பாராட்டுகிறேன்.

அவர் தொடர்ந்து இத்தகைய நூல்கள் பல எழுதித் தமிழுக்கும் இந்து சமயத்திற்கும் தொண்டு செய்யச் செந்தில் முருகனை வேண்டுகின்றேன்.

திருச்செந்தூர்,
6 – 8 '80

இரா. கனகசபாபதி.

# பாயிரம்

திருக்கோயில் பற்றித் தமிழில் வெளிவரும் டாக்டர் பட்ட (Ph.D) முதல் ஆய்வுநூல் இது. ஆறுபடை வீடுகளுள் முதற்படை வீடாகிய திருச்செந்தூர் பற்றி ஆய்வு நிகழ்த்துமாறு தூண்டி வழிகாட்டிய பேராசிரியர் டாக்டர் திரு.முத்துச் சண்முகனார்க்கும் மற்றும் டாக்டர் திரு. தா. அ. ஞானமூர்த்தி அவர்கட்கும் முதற் கை கூப்பு. தோன்றாத் துணையாய் ஊக்கிய செந்திலாண்டவன் செய்துள்ள அருட் செயல்கள் அளவிடற்கரியன. அவற்றுள் சில வற்றைக் குறிப்பிடுகிறேன்.

1 ஆய்வுக்குத் துணைச்செய்யும் நூல்களை அருளுமாறு சங்கரன் கோயிலில் அன்னை கோமதியை வேண்டினேன். அங்குவந் திருந்த திருநெல்வேலித் திரு.சேதுராமலிங்கம் எனதுவேண்டு கோளைக் கேட்டுத் தம் அன்னை டாக்டர் கோமதியவர்கள் சேகரித்த அரியநூல்களைக் கொடுத்துதவினார்.

2 குலசேகரன பட்டினம் ஞானியார் ஏட்டுச்சுவடியை எங்குத் தேடியும் கிடைக்கவில்லை. நாசரேத் தமிழ்ப் பேராசிரியர் திரு. சுருளிவேல் வீட்டில் விருந்துக்குப் போன இடத்தில் மேசைமீது கிடக்கக்கண்டு வியந்தேன்.

3 திருச்செந்தூர்க் கோயிலில் எதைப் பற்றி ஆராய்வது என்று திகைத்து அஞ்சு முகம் தோன்றிய போது அமெரிக்க நாட்டுச் சமயத்துறைப் பேராசிரியர் டாக்டர் பிரட்டுகுளோத்தியை மதுரையில் கண்டு வினவும் வாய்ப்பினை ஆறுமுகன் வழங் கினான்.

4 செப்பேடுகளையும், ஏட்டுச்சுவடிகளையும், செய்திகளையும் இவ் வூர் முக்காணியர் கொடுத்துதவியமை.

5 திரு. மு. முத்தையாப்பட்டர் தனது குறிப்புக்களை எல்லாம் வலியத்தந்து படிக்குமாறு தூண்டிய தன்மை முத்துக்குமரன் திருவருளே

இதற்குமுன்பு திருக்கோயிலைப்பற்றி வரலாற்று ஆசிரியர் களே ஆராய்ந்துள்ளனர். அவருள் திருகே. கே. பிள்ளை(சுசீந்திரம் கோயில்) திரு. கே. வி. இராமன் (காஞ்சி வரதராசர் கோயில்) ஆகியோர் குறிப்பிடத்தக்கவர். இவர்களின் அடிச்சுவட்டில் எனக் கென ஒரு திட்டத்தை வகுத்துத் தமிழர் பண்பாட்டு முறையில் இந்நூலில் ஆராய்ந்துள்ளேன்.

இவ்வாய்வுநூல் மதுரைக் காமராசர் பல்கலைக்கழக டாக்டர் (Ph.D) பட்டத்திற்காக 1979 மார்ச்சுத் திங்களில் கொடுக்கப் பட்டது. பட்டம் வழங்கிய அப்பல்கலைக் கழகம் ஆய்வினை நூலாக வெளியிட அனுமதி வழங்கியமைக்கு நன்றி.

ஆய்வு நிகழ்த்துவதற்கு ஊதியத்தோடு விடுப்பு வழங்கிய திருச்செந்தூர்ஆதித்தனர்கல்லூரிஆட்சித் தலைவர்திரு பா.சிவந்தி ஆதித்தன் அவர்களுக்கும், செயலர் திரு. என் கிருஷ்ணய்யர் அவர்கட்கும், அணிந்துரை வழங்கிய முதல்வர் பேராசிரியர் திரு. இரா. கனகசபாபதி, எம்.ஏ, அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருச்செந்தூர்க் கோயிலிலுள்ள ஆவணங்களைக் காண்பதற்கு அனுமதி வழங்கிய ஆணையர் திரு. சீல பாலசுப்பிரமணியம் I.A.S துணை ஆணையர் திரு சு அருச்சுனன், கண்காணிப்பாளர் திரு இரா இராதா கிருஷ்ணன் மற்றும் கோயில் ஊழியர்கள் அனைவருக்கும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையேன்

வழிபாடு பற்றி விளக்கிய திரு முத்தையாப்பட்டர், திரு சண் முக சுந்தரசிவாசாரியார், திரு இராமானந்த சாஸ்திரி, விதாயகர் திரு வேம்பு சாஸ்திரி ஆகியோருக்கு என்றும் நன்றி நவில்வேன்

சென்னை மறைமலையடிகள் நூலகர், சென்னைப்பல்கலைக்கழக நூலகர், தஞ்சைச்சரசுவதி மஹால் செயலர், கேரளப்பல்கலைக் கழகப் பேராசிரியர்கள், அமெரிக்கநாட்டுச் சமயத்துறைப் பேரா சிரியர் டாக்டர் பிரட்டுகுளோதி, மைசூர்ப்பல்கலைக்கழகநாடோடி இயல் டாக்டர் சவகர்லால் ஹண்டு ஆகியோரது உதவிகளை என்றும் மறவேன். நன்றி

இந்நூல் வெளியீட்டிற்கு ஆசிவழங்கிய தவத்திரு பச்சை வேஷ்டிப் பால்சுவாமி அவர்கட்கு என் இதயம் நிறைந்த நன்றி.

இந்நூலினை உருவாக்க உறுதுணை நின்ற சேலம்வைரவாணிகர் திரு எல்லிசெட்டி (பாலு) அவர்கள் தாள் விலையில் ஒருபகுதியை உதவினர்கள். படங்களை உருவாக்கும் செலவில் ஒருபகுதியை மதுரை ஆடிட்டர் திரு என் மந்திரமூர்த்தி அவர்கள் உதவினர்கள் படங்கள் அச்சிடுவதற்குரிய தாளின் விலையைத் திருநெல்வேலி நோட்டுப்புத்தக வாணிகர் அருணா ஸ்டோர்ஸ் உரிமையாளர் அவர்கள் வழங்கினர்கள் இம்மூவருக்கும் என் நெஞ்சம் நிறைந்த நன்றி

நூலினைப் பாராட்டியவர்கட்கும், அணிந்துரை, வாழ்த்துரை வழங்கிய பெருமக்கட்கும் பெரிதும் நன்றி யுடையேன்

நூலின் அச்சுப் பிழைகளைத் திருத்தி யுதவிய எனது துணைவி புலவர் திருமதி. செகதாம்பாள், பி.ஏ. க்கும், நூலினை நன்முறை யில் அச்சிட்டு உதவிய பாளையங்கோட்டை சி. எம் எஸ். அச்சகப் பயிற்சிப் பள்ளியினருக்கும் எனது அகம் நிறைந்த நன்றி

66, சபாபதிபுரம்தெரு,
திருச்செந்தூர்.

ந. கல்யாண சுந்தரம்.

# இந்நூலில் பயன்படுத்தியுள்ள சுருக்க வடிவின் விரிவு

---

பொது:

அ. நூ — அதே நூல்

ப — பக்கம் ; பக் — பக்கங்கள்
ப. ஆ — பதிப்பாசிரியர்

மொ. பெ. ஆ — மொழி பெயர்ப் பாசிரியர்
நி. ப. எண் — நிழற் பட எண்

த. ப. எண் — தரைப் பட எண்
மு. ப. - முதற் பதிப்பு ; இ. ப — இரண்டாம் பதிப்பு
கழகம் — தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

சிறப்பு:

திருக்கோயில் — திருச்செந்தூர் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்

தி. தி - திருச்செந்தூர்த் திருப்புகழ்.
திரு. மு. ப — திரு. மு. முத்தையாப் பட்டர்

திரு. இ. சா — திரு. K. S. இராமானந்த சாஸ்திரி
திரு. ச. சி - திரு. எஸ். ஜி. சண்முக சுந்தர சிவாசாரியார்.

ம. வி — மகோற்சவ விளக்கம்.
ப. பூ. வி — பரார்த்த பூஜா விளக்கம்.

நி. பூ. ல. ச — நித்ய பூஜா லக்ஷண ஸங்கிரஹம்.
S. I. I - South Indian Inscriptions.

C. C F. C. M - Chronometry Cosmology and the Festival Calendar of the Tamil Cultus of Murukan.
J. M. S - J. M. Somasundaram.

# ஆய்வுப் பொருள் — அறிமுகம்

முன்னுரை:

திருச்செந்தூர் முருகன் கோயிலில் ஆராய்வதற்கு இலக்கியம், சிற்பம், ஓவியம், இசை, நடனம், நிர்வாகம், பொருளாதாரம் முதலிய பல்துறைப் பொருள்களுள. இந்நூலில் மூலவர் (பால சுப்பிரமணியர்) ஆறுமுகப் பெருமான் (ஸ்ரீ சண்முகர்) ஆகிய இரு திரு மூர்த்தங்களும் தனித்தனி மூலவரே என்னும் கருதுகோளினைக் (Hypothesis) கொண்டு அதனை நிறுவ முயன்றுள்ளேன்

சிக்கல்கள்:

ஆய்வு நூல் எழுதுவோர் சில சிக்கல்களை (Problems) உருவாக்கி அவற்றினுக்கு விடைகாண முயல்வர். இந்நூலில் எழுந்துள்ள சிக்கல்களாவன:

1 முருகன் கோயில்கள் ஏனையவிடங்களில் மலை மீதிருக்க இங்குக் கடற்கரையிலிருப்பானேன்?

2 சங்க இலக்கியம், நக்கீரர், அருணகிரிநாதர் முதலியோர் பாடிய முருகன் யார்?மூலவரா? சண்முகரா?

3 இக்கோயிலின் அமைப்பு ஆகம முறைக்கு மாறுபட்டு விளங்கக் காரணம் என்ன?

4 நாள் வழிபாடு மூலவருக்கும் அறுமுகப் பெருமானுக்கும் வேறு படக் காரணங்கள் எவை?

5 பெருவிழாக்கள் இவ்வூரில் ஒரே காலத்தில் இரண்டு (மூலவர் ஆறுமுகன்) சுவாமிகட்கும் நடைபெறக் காரணங்கள் எவை?

ஆய்வு எல்லை:

நாள் வழிபாடு, திருவிழாக்களுக்குத் தொடர்பான செய்திகள் மட்டுமே ஆய்வுக்குக் கொள்ளப் படுகின்றன.

அணுகு முறை:

பேட்டிகளின் அடிப்படையில் இன்று நடைமுறையிலுள்ள செய்திகள் ஆராயப் படுகின்றன.

## ஆய்வுப் பகுப்பு

முதலியல் — ஊரின் இருப்பிடம், கோயிலின் இருப்பிடம்

இரண்டாமியல் — வழிபாடு நடைபெறும் இடங்கள், மண்டபங்கள் பற்றிய செய்தி

மூன்றுமியல் — வழிபாட்டிற்குக் கொள்ளப் பெறும் கற்சிலைகள் உலோகப்படிமங்கள் பற்றிய செய்தி.

நான்காமியல் — நாள் வழிபாடுநடைபெறும் முறை, துணைநிற் போர் பற்றிய செய்திகள்.

ஐந்தாமியல் — திருவிழாவின் உறுப்புக்கள், நலம் பெறுதல், தூய்மைபெறுதல், கழுவாய், மங்கலப்பேறு என்னும் பிரிவில் ஆயப்பட்டுள்ளன.

ஆறுமியல் — வழிபாட்டிற்கு மன்னர், மடங்கள், மக்கள் உதவி வரும் செய்திகள்.

ஏழாமியல் — வழிபாட்டிற்குக் கொள்ளப்படும் அணிகள், கலன்கள் பற்றியவை.

எட்டாமியல் — மக்கள் வழங்கும் காணிக்கையின் வகைகள் ஆயப்பட்டுள்ளன.

ஒன்பதாமியல் — கி.பி. 1648 முதல் கி. பி. 1653ஆம் ஆண்டு வரை வழிபாடு இக்கோயிலில் தடைப்பட்ட தற்கான காரணங்கள்.

பத்தாமியல் — மூலவர், ஆறுமுகப் பெருமானின் தனித் தன்மை, சிறப்பு,

**பிற செய்திகள்:**

இத்திருக்கோயில் பற்றிய நாடோடிக் கதைகளை ஆங்காங்கே இணைத்துள்ளேன். இவ்வாறு இணைக்குமாறு கூறிய டாக்டர் சவகர் லால் ஹண்டு அவர்கட்கு நன்றி.

இத்திருக்கோயிலில் பின் பற்றப்படும் சனத்குமாரப்பிரசன்ன குமார தந்திரம் திரு. முத்தையாப் பட்டரிடம் கிரந்த எழுத்திலுள்ளது. இந்நூலினை மொழி பெயர்ப்போடு திருக் கோயிலார் வெளியிட்டால் நல்லது.

# பொருளடக்கம்


1 முதல் இயல் — இருப்பிடமும் பெயர்களும் 1—5

2 இரண்டாம் இயல் — ஆலய அமைப்பும் வளர்ச்சியும் 6—27

3 மூன்றாமியல் — வழிபடப் பெறும் திருவுருவங்கள் 28—46

4 நான்காமியல் — நாள் வழிபாடு 47—82

5 ஐந்தாமியல் — திரு விழாக்கள் 83—125

6 ஆறாமியல் — கட்டளைகள் 126—142

7 ஏழாமியல் — அணிகலன்கள் 143—157

8 எட்டாமியல் — காணிக்கை 158—168

9 ஒன்பதாமியல் — வழிபாடு தடைப்பட்ட ஆண்டுகள் 160—174

10 பத்தாமியல் — நிறைவுரை 175—178

குறிப்புகள் : 179—202


## பின்னிணைப்புகள்


1 நிழற் படங்கள்

2 தரைப் படங்கள்

3 ஆய்வாளர் தொகுத்தவை

4 துணை நூற் பட்டியல்

# முதல் இயல்

## இருப்பிடமும் பெயர்களும்

### இருப்பிடம்

திருச்செந்தூர், திருநெல்வேலி மாவட்டத்தில் திருநெல்வேலிக்குத் தென் கிழக்கில் ஐம்பத்தாறு கிலோ மீட்டர் தொலைவில் கடற்கரையில் அமைந்துள்ளது. கி.பி. 1911 ஆம் ஆண்டிலிருந்து இப்பெயர் கொண்ட வட்டாரத்தின் தலைநகராக விளங்கி வருகிறது.[1] துறைமுக நகராகிய தூத்துக்குடியிலிருந்து ஏறத்தாழ நாற்பது கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. திருநெல்வேலியிலிருந்து புகைவண்டி, பேருந்து வசதிகளும், தூத்துக்குடியிலிருந்து பேருந்து வசதியுமுண்டு. கன்னியாகுமரி, இங்கிருந்து கடற்கரைத் தடத்தின் வழியே சென்றால் 88 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

ஊருக்குக் கிழக்கேயுள்ள முத்துக் கொழிக்கும் கடலருகே முத்தமிழ் வித்தகன் முருகன் நித்தம் அருள் பொழிகிறான். கடற்கரையில் அமைந்துள்ள மலை 'சந்தன மலை' என வழங்கப் பெறுகிறது. 'செந்தின் மாமலை' என்றும் அதற்குப் பெயருண்டு. இது மருதமும் குறிஞ்சியும் மயங்கிய ஊர் என்பதைக் கடைச் சங்கப் புலவர் பரணர் பாடியுள்ளார்.[2]

### பெயர்கள்

#### கபாடபுரம்

தமிழ் இலக்கிய வரலாற்றாசிரியர் எம். எஸ். பூரணலிங்கம் இரண்டாம் தமிழ்ச்சங்கமிருந்த இடம் கபாடபுரம் எனக்குறித்துப் பிறைக்கோட்டுள் 'அலைவாய்' எனக் குறித்துள்ளார்.

வால்மீகி, இராமாயணத்தில் கபாடபுரத்தின் இருப்பிடத்தைச் சுட்டும் பொழுது,

> "தாம்பிரபருணி அழகிய சந்தனச் சோலைகளால்
> மூடப் பெற்ற திட்டுக்களையுடையதாய்க்
> கணவனிடத்தில் அன்புள்ள யுவதியானவள்
> புக்ககம் புகுமாறு போல சமுத்திரத்தில்
> சென்று விழும். பிறகு பொன்னிறைந்ததாயும்
> பாண்டியர்க்கு யோக்கியமாயுமுள்ள கபாடத்தைப்
> பார்க்கக் கடவீர்கள்"[4] எனக் குறித்துள்ளார்.

வால்மீகி கபாடபுரத்திற்குக் கூறியுள்ள குறிப்புக்கள் திருச்செந்தூருக்கு மிகவும் பொருந்தி வருகின்றன. தண் பொருநையாறு (தாம்பிரபரணி) கடலோடு கலக்குமிடத்திற்குத் தெற்கே சந்தனச் சோலைகளும் முத்துக்களும் காணப்பெற்ற இடம் திருச்செந்தூராகும்.

## சந்தனம்

'சந்தனக் காட்டுக்குள்ளே கந்தனை நான் கண்டு கொண்டேன்' என்பது இவ்வட்டாரத்து நாடோடிப் பாடலின் ஓரடி. திருச்செந்தூர் முருகன் குடியிருக்கும் மலைக்குச் சந்தன மலை எனப் பெயர். கந்தபுராணம் இம்மலையைக் 'கந்தமாதன பர்வதம்' எனப் புகழும். இன்று இம்மலையில் சந்தன மரங்கள் இல்லை. ஆயினும் அருணகிரி நாதர் காலத்தில் (கி.பி. 15ஆம் நூற்றாண்டு என்ப) இம்மலையில் சந்தன மரங்கள் அடர்ந்திருந்தன. செந்தில் கந்தனைப் பாடும்போது அருணகிரிநாதர்,

> "சந்தனத்தின் பைம் பொழில்தண் செந்திலில்
> தங்கும் பெருமாளே"

எனப் பாடியுள்ளார்[5]. இன்றும் இக்கோயிலில் வழங்கப்படுமளவு சந்தனம் ஏனைய முருகன் கோயில்களில் வழங்கப்படுவதில்லை. கால மாறுபாடுகளால் சந்தன மரங்கள் அழிந்து போயிருக்கலாம்,

## முத்து

சாணக்கியர் தம் பொருள் நூலில் பாண்டிய கவாடக என்ற முத்தைப் பற்றிக் கூறுகிறார்.[6] கபாடபுரத்தில் முத்துக்கள் கிடைத்தன. பதினைந்து ஆண்டுகட்கு முன் இப்பகுதியில் முத்தெடுத்தனர். அருணகிரி நாதரும்,[7] பகழிக் கூத்தரும்[8] இவ்வூரில் முத்துக்கள் கொழிப்பதைப் புகழ்ந்து பாடியுள்ளனர்.

## இடைச் சங்கம் இருந்த இடமா?

குன்றெறிந்த குமரவேள் சங்கத்திலிருந்ததை நக்கீரர் குறிப்பிடுகிறார்.[9] அருணகிரிநாதர்,

> "செஞ்சொற் புலவர்கள் சங்கத் தமிழ் தெரி
> செந்திற் பதிநகர் உறைவோனே" [10]

எனப் பாடியுள்ளார். சங்கத்திற்கு இலக்கண நூல் ஈந்த அகத்தியருக்கு இங்குக் கோயில்கள் உண்டு. கபாடபுரத்தின் பகுதியாக இவ்வூர் விளங்கியிருக்கலாம்.

## திருச்சீரலைவாய்

கலங்கள் வந்து தங்கும் வாயிலாக அமைந்ததால் கபாடபுரம் பின்பு அலைவாய் என அழைக்கப்பட்டிருக்கலாம்.[11] அகநானூறு,[12]

தொல்காப்பிய மேற்கோள் செய்யுள்,[13] திருமுருகாற்றுப்படை,[14] கந்த புராணம்[15] ஆகிய நூற்கள் இவ்வூரை 'அலைவாய்' எனக் குறிப்பிடுகின்றன.

முருகன் நிலை பெற்று இருப்பதால் 'திரு' என்ற அடைமொழி பெற்றுத் 'திருச்சீரலைவாய்' என்ற பெயர் நிலைத்தது. இக் கோயிலில் அலைவாயுகந்த பெருமான் எனப் பெயருள்ள எழுந் தருளும் மூர்த்தியுமுள்ளார். நாமனூர் அலைவாய் என்றும் வழங்கப்பட்டது.

## செந்தில்

செம்பொருளான முருகன் விழைந்து வீற்றிருப்பதால் இப் பெயர் வந்ததென்பார் திரு ந. சேது ரகுநாதன்[16]. அருணகிரிநாதர் இப்பெயரை 65 தடவை பயன்படுத்தியுள்ளார்,

''தமிழ் நாட்டில் தெய்வ நலம் பெற்ற ஊர்கள் பெரும்பாலும் 'திரு' என்னும் அடை பெற்று வழங்கும். 'இல்' என்பது பெரும் பாலும் மக்கள் வாழும் வீட்டைக் குறிப்பதாகும். ஆயினும் அச் சொல் சில பழமையான ஊர்ப் பெயர்களில் சேர்ந்திருக்கிறது'' எனக் கூறிய டாக்டர் இரா. பி சேதுப்பிள்ளை 'செந்தில்' என்ற பெயரை எடுத்துக்காட்டாக இயம்பியுள்ளார்.[17] சிவந்த நிற முடைய சேந்தனுக்கு இக்கோவில் இருத்தலினுல் சேந்தில் என்ற பெயர் ஏற்பட்டு மருவி செந்தில் எனப்பெற்றது'' என்கிறுர் இ. மு சுப்பிரமணியபிள்ளை.[18] செந்து என்பது உயிர். உயிர்களுக்கு அடைக்கலமாக விளங்குவதால் செந்தில் என்ற பெயர் வந்தது என்பாருமுளர்.[19] 'சீர்கெழு செந்தில்' எனச் சிலப்பதிகாரம் செப்புகிறது.[20]

## திருச்செந்திலூர்

திருச்செந்தூரின் நடுவில் அமைந்துள்ள சிவக்கொழுந்தீசுவரர் கோயில் கல்வெட்டில் 'திருச்செந்திலூர்' என்ற பெயர் காணப் படுகிறது.[21] அதே கல்வெட்டு இவ்வூரினைத் 'திரிபுவனமாதேவி சதுர்வேதி மங்கலம்' என்றும் குறிப்பிடுகிறது.

## திருச்செந்தூர்

'திருச்செந்திலூர்' மருவித்'திருச்செந்தூர்' ஆகியிருக்கலாம். அருணகிரிநாதர் திருச்செந்தூர்த் திருப்புகழ்ப் பாக்களில் இப் பெயரை எட்டு முறை பயன்படுத்தியுள்ளார். இப்பெயரே இன்று பெரு வழக்கிலுள்ளது.

## செயந்திபுரம்

'செயம்' என்னும் வடமொழிச் சொல் வெற்றியைக் குறிக்கும். முருகன் சூரனை வென்ற இடமாதலின் 'செயந்திபுரம்' என்ற பெயர் ஏற்பட்டதென்பர். 'செயந்திபுர மகாத்மியம்' என்ற நூலுமுள்ளது. இப்பெயர் இன்று வழக்கிலில்லை.

## இரண்டாம் படைவீடு

தமிழ் நாட்டில் முருகன் சிறப்பாகக் குடிகொண்டுள்ள இடங்கள் ஆறு என்பர்.[22] மனித உடலிலுள்ள ஆறு ஆதாரங்களையே ஆறு திருப்பதிகளாக உருவகித்துள்ளனர் என்பர் யோகிகள். [23] நக்கீரர் திருச்சீரலைவாயை இரண்டாவதாகப் பாடியுள்ளார். அரசன் படைகளோடு தங்குமிடமே 'படைவீடு' எனப்படும். முருகன் சூரனை வெல்லப்படைகளோடு தங்கிய இடம் இவ்வூரேயாகும். தெய்வயானை திருமணம் சூரனை வென்ற பிறகே திருப்பரங்குன்றில் நடை பெற்றது. திருச்செந்தூரே முதற்படை வீடு என்பாருமுளர் [24].

## கோயிலின் இருப்பிடம்

சங்ககாலத்திலேயே முருகன் கோயில் கடற்கரைக் குன்றில் அமைந்திருந்தது [25] எனக்கண்டோம். ஊர்நடுவிலுள்ள சிவக்கொழுந்தீசுவரர்கோயிலே பழைய முருகன் கோயில் எனக்கருதுவாருமுளர். அதற்கு அவர்கள் கூறும் சான்றுகளாவன:

1. குமரகுருபரர் முருகனைச் 'சைவக்கொழுந்தே' என அழைக்கிறார். [26] எனவே சிவக்கொழுந்தீசுவரர் என்னும் பெயர் முருகனையே குறிக்கும்.
2. கருவறை முன் மண்டப முகப்பில் முருகன், வள்ளி, தெய்வயானையோடு நிற்கும் சிற்பம் அமைந்துள்ளது.
3. பழைய கோயில் சிவன் கோயிலுக்குரிய அமைப்பில் இல்லை.
4. கி.பி. 1648 ஆம் ஆண்டில் கொள்ளையிட்ட உலாந்தர் பழைய கோயிலிலுள்ள சிலைகளையே உடைத்துள்ளனர்.
5. கடற்கரைக் கோயில் சிவன் கோயிலாக இருந்தது. அங்குச் சிவலிங்கங்கள், நந்திகள், அறுபத்து மூவர் சிலைகள் உள்ளன.
6. கடற்கரைக் கோயிலில் சிவனுக்குரிய திருவிழாக்கள் இன்றும் நடைபெறுகின்றன.

ஆய்வாளர் இக்கருத்துக்களைப் பற்றிப் பலரிடம் வினவியதில் கீழ்க்காணும் மறுப்புக்கள் கூறப்பெற்றன. அவை வருமாறு

1. திருச்செந்தூர் முருகன் பெயரைச் 'சிவக்கொழுந்து' என: ஏனைய இலக்கியங்கள் கூறவில்லை.

2. முன் மண்டபச் சிற்பங்களுக்கும் மூலவருக்கும் தொடர்பு கொள்ளுதல் கூடாது. கடற்கரைக் கோயிலில் மூலவர் முன் மண்டபத்தில் விநாயகர் திருவுருவும் ஆறுமுகப் பெருமான் கருவறை முன்மண்டபத்தில் கயலக்குமி உருவும் இடம் பெற்றுள்ளன.
3. கடற்கரைக் கோயிலும் சிவன் கோயிலுக்குரிய அமைப்பில் இல்லை.
4. கி.பி. 1648 ஆம் ஆண்டு உலாந்தர்கள், தம்எதிரிகள் சிவக் கொழுந்தீசுவரர் கோயிலில் அடைக்கலம் புகுந்ததால் அங் குத் தாக்குதல் நடத்தினர்.
5. ஏனைய முருகன் கோயில்களிலும் (திருப்பரங்குன்றம், திரு வாவினன்குடி) சிவலிங்கங்கள் இடம் பெற்றுள்ளன. இங்குச் சூரனை வென்ற பின் முருகனே தம் வழிபாட்டிற்காகச் சிவனை நிறுவினான் எனக் கந்தபுராணம் கூறுகிறது.
6. முருகனைச் சிவனாகவே கருதி வழிபடுவோர்களு முள்ளனர். இதனால் சிவனுக்குரிய திருவிழாக்கள் முருகன் கோயிலில் நடைபெறுகின்றன.

குலசேகரன் பட்டினத்துச் சரவணமுத்துஞானி[27] யாரது ஏடு கி.பி. 1648 இல் கடற்கரைக் கோயில் முருகன் கோயிலாக மாற்றப்பட்டது எனக் குறிப்பிடுகிறது.[28] இச்செய்திக்கு வேறு ஆதாரங்கள் கிடைக்கவில்லை. மேலும் கி.பி. 9ஆம் நூற்றாண்டுக்கல் வெட்டு கடற்கரைக் கோயிலில் சுப்பிரமணியர் கோயிலிருந்ததைக் குறிப்பிடுகிறது.[29]

# இரண்டாம் இயல்

## ஆலய அமைப்பும் வளர்ச்சியும்

திருச்செந்தூர் அருள் மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயி லில் திருவுருவங்கள் அமைந்துள்ள இடங்கள், பல்வேறு மண்டபங் கள் மற்றும் அமைப்புகள், அவை தோன்றிய வரலாறு, காலம் பற்றிப்பார்ப்போம். இக் கோயிலின் தரைப்படம் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது. இக்கோயில் ஒரே காலத்தில் கட்டப்பட்ட தல்ல. பல நூற்றுண்டுகளாக வளர்ச்சி பெற்று வந்துள்ளது.

### சங்ககாலம்

இக்காலத்தில் சந்தனமலையில் முருகன் கோயிலிருந்த செய்தி மட்டுமே கூறப்படுகிறது. கோயில் மலைக்கு மேலிருந்ததா, குகை யிலிருந்ததா வென்பதை அறிய முடியவில்லை. புறநானூறு, 'நெடு வேள் நிலை இய காமர் வியன்துறை"[1] என்று திருச்செந்தூரைக் குறிப்பிடுகிறது. அகநானூறு கூறும் செய்தியை முதலியலில் கண் டோம். முருகன் 'செருமிகு சேய்'[2] என அழைக்கப்படுகிருர். சிலப் பதிகாரம், 'சீர்கெழு செந்தில்' எனக்குறிப்பிடுவதோடு முருகன் சூர்மாத் தடிந்த செயலையும் குறிப்பிடுகிறது. நக்கீரரும் ஆறுமுகப் பெருமானின் ஆறுமுகங்கள், பன்னிரண்டு கைகள் ஆகியவற்றின் செயல்களையே குறிப்பிடுகிருர். இந்நூல்களுள் எதுவும் திருச்செந் தூர்க்கோயிலைப் பற்றிக் குறிப்பிட வில்லை.

### கி.பி. மூன்று முதல் ஆரும் நூற்றுண்டு முடிய

இக்காலத்தை வரலாற்றுசிரியர்கள் 'இருண்ட காலம்' என்றே குறிப்பிடுவர். 'சங்ககாலத்துக்குப்பின் ஏறக்குறைய கி.பி. 300—600 வரையில் தமிழகத்தைப் பற்றிய செய்தி எதுவுமே நமக் குத் தெரியா தென்று சொல்லலாம்"[3] என்ற கே.ஏ. நீலகண்ட சாஸ் திரியின் கூற்றை அப்படியே ஏற்றுக் கொள்ளலாம்.

### கி.பி. ஏழாம் நூற்றுண்டு

கி.பி. ஏழாம் நூற்றுண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசர் திரு மறைக்காட்டு இறைவனைப் பாடும்போது,

"நம் செந்தில் மேய வள்ளிமணுளற்குத் தாதை கண்டாய்"[4]

என்று திருச்செந்தூர் முருகனை வள்ளிமணுளனுகக் காட்டுகிருர். கோயில் பற்றி எதுவும் குறிப்பிடவில்லை.

ஏழாம் நூற்றுண்டில் பல்லவர்கள் ஏராளமான குகைக்கோயில்கள் அமைத்தனர். பாண்டியர்களும் குகைக் கோயில்கள் அமைத்தனர்.

> ''பாண்டிய நாட்டிலும் குடைவரைக்கோயில்கள் இருக்கின்றன . . . அவை பல்லவர்கள் காலத் திலேயே உருவாக்கப்பட்டவை என்பதிலும் பல்லவக்கலை மரபையே பின்பற்றியவை என்பதிலும் ஐயமில்லை''[5]

என்கிருர் கே. ஏ. நீலகண்டசாஸ்திரியார். அமெரிக்க நாட்டுப் பிட்ஸ்பர்க்குப் பல்கலைக்கழகச்சமயத் துறைப் பேராசிரியர் டாக்டர் பிரட்டு குளோதியும் இம்முடிவுக்கே வருகிருர்.[6]

## கி. பி எட்டாம் நூற்ருண்டு

கி. பி. எட்டாம் நூற்ருண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படும் ஆதிசங்கரர், திருச்செந்தூர்ச் சுப்பிரமணிய புஜங்கத்தில்,

> ''பெரிய கடலின் கரையினிலே, முனிவர்கள் போற்றிப் புகழ்கிறதாயும், பாவங்களைத் தீர்க்க வல்லதாயும் விளங்கும் கந்தமாதன மலையில் அருட்பெரும் சோதியாக குகப் பெருமான் ஒரு குகையில் அமர்ந்து அண்டினவர்களுக் கெல்லாம் ஆதரவு தரு கிருர். அவரது பொற்பாதங்களைப் பற்றி உய்வோம்[7]

என்கிருர். இதனுல் ஆதிசங்கரர் காலத்திற்கு முற்பட்டே இஃது ஒரு குகைக் கோயிலாக விளங்கியது என்பது புலனுகும்.

## கி பி. ஒன்பதாம் நூற்ருண்டில்

கி. பி. 875 ஆம் ஆண்டில் இரண்டாம் வரகுண பாண்டியன் இக்கோயிலிலுள்ள இறைவன் சுப்பிரமணிய பட்டா ரருக்கு வழிபாட்டிற்காக 1400 பொற்காசுகளை வட்டிக்கு விட்டு நாள் வழிபாட்டினையும் மற்றும் திருவிழாக்களையும் நடத்தி வந்த செய்தியை இக்கோயிலில் உள்ள கல்வெட்டினுல் அறிகிருேம்.[8] நாச்சிமார் சிலைகளைப் பற்றிய குறிப்பு இக்கல்வெட்டில் இல்லை. எனவே அவை பிற்காலத்திலேயே நிறுவப்பட்டிருத்தல் வேண்டும்.

## கி. பி. பதின்மூன்றும் நூற்ருண்டு

பாண்டியன் மாறவர்மன் (திரிபுவன சக்கரவர்த்தி கோனேர்மை கொண்டான் விக்கிரம பாண்டிய தேவன்) தனது பதின்மூன்ரும் ஆட்சிக் காலத்தில் மங்கலக்குறிச்சி என்னும் ஊரில் இரண்டு மா அளவு நிலங்களை ஒரு பிராமணனுக்குப் பூசைக்குக் கொடுத்ததாக இக்கோயிலிலுள்ள ஒரு கல்வெட்டு கூறுகிறது[9] இவன் கோயில் பூசைக்கு உதவிய செய்தி தவிர கோயில் திருக் பணிக்கு எதுவும் செய்ததாகத் தெரியவில்லை.

## கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டு

*கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டில் இக் கோயிலில் நிறுவப் பட்ட ஒரு கல்வெட்டு இக்கோயிலிலுள்ள நக்கீரர் சிலைக்குப் பூசை செய்வதற்காக ஒரு நிலத்தை 630 கலியுகராமன் பணத்திற்கு விற்றுக் கொடுத்ததாகக் குறிப்பிடுகிறது.*[10] *இதனால் திருச்செந் தூர்க் கோயிலில் நக்கீரர் சிலையிருந்ததை அறிகிறோம். இன்று அச்சிலை இல்லை.*

*இக்காலத்தில் இவ்வூருக்கு வந்த அருணகிரி நாதரும் கோயில் அமைப்பைப் பற்றிப் பாடவில்லை.*

## கி. பி. பதினாறும் நூற்றாண்டில்

*''இக்காலத்தில் பாண்டிய மன்னர்கள் அடையாளம் தெரியா மல் மறைந்து விட்டனர். நாயக்க மன்னரும் இப்பகுதியின் (தென் திருநெல்வேலி) ஆட்சியைக் கைப்பற்றவில்லை. அடுத் திருந்த திருவிதாங்கூர் மன்னர்கள் திருநெல்வேலிச் சீர்மையின் தென்பகுதியை ஆண்டனர். இதற்கான ஆவணம் திருச்செந்தூர்க் கோயிலில் உள்ளது'' எனக்குறிப்பிடுகிறார் கால்டுவெல்.*[11]*இக்காலத் தில் குலசேகர தேவரால் (மார்த்தாண்டவர்மா) இக்கோயிலுக்கு நன்கொடை வழங்கப் பட்டதாகவும் குறிப்பிடுகிறார்.*[12]

## கி. பி. பதினேழாம் நூற்றாண்டில்

*கி. பி. 1648 ஆம் ஆண்டில் டச்சுக் கொள்ளையர் கோயில் சிலைகளைக் கொள்ளையிட்ட நிகழ்ச்சி நடை பெற்றது. (இச்செய்தி யின் விளக்கத்தை 'வழிபாடு தடைப்பட்ட ஆண்டுகள்' என்ற இயலில் காண்க.)*

*இக்காலத்தில் நாயக்க மன்னர்கள் திருச்செந்தூருக்கு நடுவி லுள்ள சிவன் கோயில் கலை மண்டபத்தை அமைத்தனர். மேலக் கோபுரமும் இக்காலத்திலேயே கட்டப்பட்டிருக்கலாம். கோ புரத்தின் ஆறும் நிலையில் நாயக்கர் கால வண்ண ஓவியங்களைக் காணலாம். இக்காலத்தில் வாழ்ந்த குமரகுருபரரும் தம் கந்தர் கலிவெண்பாவில் கோயில் அமைப்பைப் பற்றிக் குறிப்பிட வில்லை. இக்காலத்திலேயே நாச்சிமார் (வள்ளி, தெய்வயானை) சிலைகள் நிறுவப்பட்டதாகத் திரு. மு. ப. குறிப்பு கூறுகிறது.*[13] *கி. பி. 1670 இல் போற்றிமார் மடைப்பள்ளி கட்டப்பட்ட செய்தியைக் கோ யிலிலுள்ள சிறிய கல் வெட்டால் அறிகிறோம்.*

## மேலக்கோபுரம்

*ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகளுக்கு முன் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த தேசிகமூர்த்திசுவாமிகள் என்னும் ஒடுக்கத்*

தம்பிரான் கனவில் திருச்செந்தூர் முருகன் தோன்றித் தம் கோயில் திருப்பணிக்காக அழைத்தார். அவர் கோயிலருகிலுள்ள திருவாவடுதுறை மடத்தில் தங்கிக் கோபுரம் கட்டினுர் என்பர்[14]

## கோபுரம கட்டிய கதை

அவர், கோபுரம் கட்டிய காலத்தில் சில அற்புதச் செயல்கள் நிகழ்ந்ததாக இவ்வட்டாரத்தில் கதைகள் வழங்குகின்றன. கோபுரம் கட்டுவதில் ஈடுபடுத்திய பணியாளர்களுக்குக் கூலி கொடுக்கக் கையில் காசில்லாமல் திண்டாடினுர். மாலையில் இலை விபூதியையே கூலியாகக் கொடுத்துத் தூண்டுகை விநாயகர் கோயிலைத் தாண்டிப் போனதும் இலையினைத் திறந்து பார்க்கு மாறு கூறினுர். அவர்களும் அவ்வாறே பார்க்கும் போது தங்கள் உழைப்பிற்கேற்ற ஊதியம் இலைவிபூதியினுள் இருக்கக் காண்டனர்.

கோபுரத்தின் ஆரும் நிலை வந்த போது இவ்வற்புதம் நின்று விட்டது. சுவாமிகள் மிக வருந்தினுர். முருகன் கனவில் தோன். றிக் காயல்பட்டினத்தில் வாழ்ந்த சீதக்காதி என்னும் வள்ளலிடம் செல்லுமாறு பணித்தார். சீதக்காதி ஒரு மூடை உப்பினை நன் கொடையாக அளித்தார். மறுநாள் காலையில் சுவாமிகள் மூடை யைத் திறந்த போது உள்ளே தங்கக் காசுகளிருப்பதைக் கண்டார் கோபுரம் கட்டி முடித்தபின் தண்பொருநைக்கரையிலுள்ள காந்தீ சுரத்தில் தங்க நேர்ந்தது. ஆயினும் குடமுழுக்கு நிகழ்ந்த காலத் தில் சுவாமிகள் மேலக்கோபுரவாயில் வழியாக நுழைந்து சென்ற தை மக்கள் கண்டனர்.[15]

## கோபுரத்தின் அமைப்பு

மேலக்கோபுரம் ஒன்பது நிலைகளையுடையது. யாழிமட்டத் திலிருந்து 137 அடி உயர முள்ளது. கீழ் மட்டத்தில் தென்வட லாகத்தொண்ணூறு அடி நீளமுடையது. கிழமேலாக அறுபத்தைந் தரை அடி அகலமுள்ளது. ஒன்பது நிலைகளிலும் புராண வரலாறு கள் சுதை உருவங்களாகப் பொருத்தப்பட்டுள்ளன. இந்நூற்ருண் டில் வாழ்ந்தவர் சிலைகளையும் புதுப்பித்த பிற்காலத்தில் பொருத் தியுள்ளனர். ஒன்பது நிலைகள் இருப்பதற்கடையாளமாக கோ புரத்தின் மேல் ஒன்பது செப்புக் கலசங்கள் வைக்கப்பட்டுள்ளன. ஒரு கலசத்தின் உயரம் ஏழரையடி. மேல் பகுதியில் கோபுரத்தின் அகலம் இருபதடி. நீளம் நாற்பத்தொன்பதடி. ஒன்பதாவது நிலை யில் 140 ஆண்டுகளுக்கு முன் கடிகார நாழிகை மணி யொன்று பொருத்தப்பட்டிருந்தது. இப்போது பழுதுபட்டு உள்ளூர்ச் சிவன் கோயிலில் உள்ளது .

### மேற்கே அமைத்ததேன ?

கோயிலின் நான்கு புறங்களிலும் கோபுரங்கள் அமைக்கலா மாயினும் பிரதான நுழை வாயிலைக் கிழக்குப் புறம் அமைப்பது மரபு. இங்கு கிழக்கே நுழைவாயிலில்லை. மேற்குப் புறம் கோபுரம் கட்டியதற்குக் காரணம் அடித்தளம் இப்பகுதியில் கடினமான பாறையாயிருப்பதாகும். ஊர் மேற்கே யிருப்பதால் மக்கள் நேராக நுழையலாம் எனவும் கருதியிருக்கலாம். கோபுரம் பற்றிக் கூறுகையில்,

> ''இறைவன் என்னும் விராட்புருடன்படுத்துக்
> கிடப்பதே ஆலயம், கர்ப்பக்கிரகம் முகமாகவும்
> ... குடைவரை வாயிற் கோபுரம் உயர்ந்து
> நிற்கும் பாதங்களாகவும் ஆகமங்களில்
> உருவகப் படுத்திக் கூறப்படுகின்றன.''

என்கிறுர் ஆ. சொக்கலிங்கம் [16] இங்கு முறை மாறியுள்ளது. இராச கோபுரத்தின் வாயில் வழியே நுழைந்தால் கருவறை தெரிய வேண்டும். இங்குக் கருவறையின் பின்புறம் தெரிகின்றது. இங்கு நுழை வாயிலின் எதிரே விநாயகர் சிலையை அமைத் துள்ளனர்.

### கதவு அடைபட்டதேன்?

மேலக் கோபுர வாயிலின் வழியாக நுழைந்தால் இருபத் தேழு படிகள் இறங்க வேண்டியுள்ளது. காவடி, பால்குடம் செலுத்துவோர் மெய்ம் மறந்த நிலையில் வருவதால் படிகளின் வழியே இறங்குவது அரிதான செயல் என்கிறுர் முத்தாண்டி ஐயர். [17] ஆண்டுக்கு ஒரு முறை தெய்வயானைதிருமணம் நிகழும் காலத்தில் மட்டும் இவ்வாயில் திறக்கப்படுகிறது.

### இக்கால வளர்ச்சி

கி. பி. பத்தொன்பது, இருபது ஆகிய நூற்றுண்டுகளிலேயே இக்கோயிலைச் சுற்றியுள்ள அமைப்புக்கள் பல ஏற்பட்டுள்ளன. மேலக் கோபுர வாயிலில் தொடங்கி கிரிவீதி, இரண்டாம் சுற்றுலை, முதல் சுற்றுலை ஆகிய இடங்களில் உள்ள அமைப்புக்களை வலம் வரும் முறையில் ஆராய்வோம்.

### திருக்கல்யாண மண்டபம் (தூ. ப. எண். 1)

மேலக் கோபுர நுழைவாயிலுக்கு எதிரே அமைந்துள்ளது திருக் கல்யாண மண்டபம். இம்மண்டபம் பரந்திருப்பதால் யானை கள் கட்டுமிடம் இங்கேயே அமைந்துள்ளது. தெய்வயானை திருக் கல்யாணம் இங்குத் தான் நடைபெறுகிறது. மண்டபத்தின் நடுவே அழகிய வேலைப் பாடமைந்த நான்கு தூண்களைக் கொண்ட மணமேடை உள்ளது.

### வசந்த மண்டபம் (த. ப. எண் 2)

இது, திருக் கல்யாண மண்டபத்திற்கு மேற்கில் அமைந்துள்ளது. கி. பி. 1882 இல்[18] காசி சுவாமிகளால்[19] தொடங்கப் பட்டது என்பர். சித்திரை, வைகாசித் திங்கள்களில் நடைபெறும் வசந்த விழாவின் போது செந்தில் நாயகர்[20] இங்கு எழுந்தருளுவார்.

இம்மண்டபத்தில் நூற்றிருபது தூண்கள் உள. மண்டபத்தின் நடுவே செந்தில் நாயகர் எழுந்தருளும் மேடை உள்ளது. மேடையைச் சுற்றி இரண்டடி அகலத்தில் அகழி உள்ளது. வசந்த விழாவின் போது இவ்வகழியில் தண்ணீர் நிரப்பப்படும். ஆவணி, மாசிப் பெரு விழாக்களின் போது எட்டாம் திருநாளன்று இரவில் ஆறுமுகப் பெருமான் இங்கு எழுந்தருளுவார். சிங்கப்பூர் கோவிந்த சாமிப் பிள்ளை கலையரங்கம் கட்டப்படுவதற்கு முன் இங்குத் தான் திரு விழாக் காலங்களில் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இதனைக் காசி சுவாமியின் துணைவரான மௌன சுவாமி[21] கட்டி முடித்தார்.

### கோவிந்தசுவாமிப்பிள்ளை கலையரங்கம் (த. ப எண்.3)

இது வசந்த மண்டபத்திற்கு வடக்கில் உள்ளது. சிங்கப்பூர் வாணிகர் கோவிந்த சுவாமிப் பிள்ளை ரூ 80,000 நன்கொடையளித்ததன் மூலம் இஃது அமைக்கப்பட்டது. திரு விழாக் காலங்களில் சொற் பொழிவு, இசையரங்கு மற்றும் கலை நிகழ்ச்சிகள் இங்கு நடைபெறும். இதன் நீளம் அறுபதடி, அகலம் நாற்பதடி. இது கி. பி. 1973 ஆம் ஆண்டில் கட்டப் பெற்றது. அரங்க மேடையில் கோயில் நூலகம் அமைந்துள்ளது.

### ஆனந்த விலாசம் (த. ப. எண் 4 நி. ப. எண். 4)

சிங்கப்பூர் கோவிந்தசாமிப் பிள்ளை கலையரங்கத்திற்கு எதிரே மணல் மேட்டில் இம்மண்டபம் அமைந்துள்ளது. முருகன் இதன் மீது நின்று தான் சூரபன்மனின் வீரமகேந்திர புரத்தைப் பார்த்தார் என்ப. ஆவணி, மாசிப் பெரு விழாக்களின் எட்டாம் நாளன்று இரவில் ஆறுமுகப் பெருமான் இங்கு எழுந்தருளுவார். இம்மண்டபத்தில் பதினாறு தூண்கள் உள. கருங்கற்களால் ஆனவை. நீளம் $28\frac{3}{4}$ அடி. அகலம் $24\frac{1}{2}$ அடி. இதற்குக் 'காற்று வாரிதிவி' மண்டபம்' என்ற பெயருமுண்டு.

### சண்முக விலாசம்

ஆறுமுகப் பெருமான் திரு முன் அமைந்துள்ளதால் இப்பெயர் பெற்றது. சிற்பங்கள் கொண்ட 124 தூண்களையுடையது. 120

அடி நீளமும் 86 அடி அகலமும் கொண்டது. கடற்காற்று வீசும் இவ்விடத்திலேயே நோய் நீக்கம் கருதி நோன்பிருப்பவர் தங்குவர். இதன் நடுவிலுள்ள மண்டபத்தில் திரு விழாக் காலத்தில் முருகன் எழுந்தருளுவார். கந்த சஷ்டியின் போது செந்தில் நாயகரும், பெரு விழாக் காலத்து ஆறுமுகப் பெருமானும் இங்குத் தங்குவர்.

உழவர் பெருமக்கள் தம் விளை பொருட்களை இம்மண்டபத்திலேயே காணிக்கையாகப் படைப்பர். மேடையின் வடக்கிலுள்ள தூணில் சுப்பிரமணியர் திருவுருவும், தெற்கிலுள்ள தூணில் சண்முகர் திருவுருவும் செதுக்கப் பட்டுள்ளன. வெள்ளைக் கற்களாலான இம்மண்டபமாயிருந்ததை மௌன சுவாமிகள் கருங்கல் மண்டபமாக்கினர். மண்டபத்தைக் சுற்றித் தூண்களில்லாத கூரை அமைத்துள்ள பொறியியல் நுட்பம் போற்றத் தக்கது.

## சஷ்டி மண்டபம் (த. ப. எண் 6)

சண்முக விலாசத்திற்குக் கிழக்கே அமைந்துள்ளது. கி. பி. 1971 ஆம் ஆண்டு திருவாவடுதுறை ஆதீனத்தாரால் கட்டப் பெற்றது. இதன் முகப்பில் முருகன் மாமர வடிவமான சூரபன்மனை வேலால் எறியும் சுதையுருவச் சிற்பமுள்ளது. கந்தர் சட்டியின போது இரவில் செந்தில் நாயகர் இங்கு எழுந்தருளுவார்.

## சீபலி மண்டபம் (த. ப எண்· 7)

சண்முக விலாசத்திலிருந்து சண்முகரை நோக்கிப் படிகளின் வழியே இறங்கினல் சீபலி மண்டபத்தையடையலாம். இம்மண்டபத்தின் நான்கு தூண்களிலும் அழகிய சிற்பங்களைக் காணலாம். மண்டபத்தின் தூண்களை யானைகள் தாங்குவதாக அமைத்துள்ளதால் 'ஐராவத மண்டபம்' என்ற பெயருமுண்டு.

## 108 மகாதேவர்

சீபலி மண்டபத்திலிருந்து மேற்கு நோக்கிச் செல்லும் போது இருபுறங்களிலுமுள்ள சுவர்களில் அழகிய ஓவியங்கள் மாட்டப் பட்டிருத்தலைக் காணலாம். வட புறமுள்ள சுவரில் சிறிய தக்கிணாமூர்த்தியின் உருவினைக் காணலாம். அதனையடுத்து நாற்பதாண்டு கட்கு முன் புதிதாக அமைத்த வாயில் காணப்படும். வாயில் முன் நின்றால் காலையில் விசுவ ரூப தரிசனம் காணலாம். (த. ப. எண்8)

நேராகச் சென்றால் 108 மகா தேவரைத் தரிசிக்கலாம். ஒரு பெரிய லிங்கத்தின் மேல் 108 லிங்கங்கள் செதுக்கப்பட்டுள்ளதால் இப்பெயர் ஏற்பட்டது. இவர் முன் திங்கள் தோறும் கார்த்திகை நாளன்று 108 திருவிளக்குப் பூசை நடைபெறும். இவ்விடத்தை அலங்கார மண்டபம் எனலாம். (த. ப. எண். 9)

### இரண்டாம் சுற்றுலே-மேற்குப்பகுதி

108 மகாதேவருக்குத்தெற்கே சித்திவிநாயகர் உள்ளார். 108 மகாதேவருக்கு வடக்கே சுவரில் முருகன் மயில் மீதமர்ந்து வேலால் சூரனை எறியும் காட்சியைக் காணலாம். இவ்வடிவம் உப்புசவடிவில் (Bas relief) அமைக்கப்பட்டுள்ளது.

அடுத்து அருணகிரிநாதர் திருவுருவைக் காணலாம். இவருக்கு எதிரே மேல வாசல் விநாயகரைக் காணலாம்

### மேலவாசல் விநாயகர் (த,ப எண். 11)

கோபுரம் அமைத்தகாலத்தில் இவரை அமைத்தனர். (கதையை மூன்றுமியலில் காண்க)

### இரண்டாம் சுற்றுலே-வடபகுதி

இருபுறங்களிலும் திண்ணைகளோடு கூடியது. அகலமான வடபகுதியில் அமைந்த அமைப்பினைக் காண்போம்

### வேங்கடாசலப் பெருமாள் கோயில் (த.ப.எண். 12)

இங்குள்ள குடவரைக்கோயில் மிகப்பழமையானது. இது பாண்டியர் குடைவரைக் கோயில்மணற்குன்றிலே அமைந்தது இத்தகைய அழகுச்சிலைகளைத் தமிழ் நாட்டில் வேறெங்கும் காணுதல் இயலாது.

நேராக, நின்ற கோலத்தில் காட்சிதரும் வேங்கடாசலப் பெருமாள் குருவாயூரப்பன் போலக் காட்சி தருகிறார். எதிரே 12 ஆழ்வார் சிலைகளுள.

அவருக்கு வடபுறம் கயலக்குமி, அரங்கநாதர் (இவரைச்செந்தில் கோவிந்தர் என்பர்), பிரமன், திருமகள், நீலாதேவி ஆகியோர் திருவுருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இக்கோயிலின் முன் சந்தனமலை நீட்டிக்கொண்டிருப்பதைக் காணலாம்.

### பெருமாள் மடைப்பள்ளி (த.ப.எண். 13)

இத்திருக் கோயிலில் மூன்று மடைப் பள்ளிகள் உள்ளன.[22] வேங்கடாசலப் பெருமாளுக்குச் சீவைணவ ஆச்சாரியரே நைவேத்தியம் ஆயத்தப்படுத்து கின்றனர்.

### போற்றிமார் தங்குமிடம் (த ப. எண். 14)

இச்சுற்றுலேயின் நடுவில் ஒருவாயிலைக் காணலாம். உள்ளே கிணறும் குழாயும் காணப்படும். இவ்விடம் முறைப் போற்றிமார் ஒய்வெடுப்பதற்கென அமைக்கப் பட்டுள்ளது. பூசைமுறைபார்க்கும் காலங்களில் போற்றிகள் கோயிலை விட்டு வெளியே செல்லுவதில்லை.

### சந்தன மரைக்குமிடம் (த ப எண். 15)

போற்றிமார் தங்குமிடத்தையடுத்து சில அறைகள் உள்ளன அவற்றுள் ஒன்று சந்தன மரைக்குமிடமாக அமைந்துள்ளது. இத்திருப்பணியையும் முக்காணியரே செய்கின்றனர்.

### சோற்றுக்கட்டி வழங்குமிடம் (த.ப எண். 16)

கோயில் முறை பார்ப்பவர்களுக்குரிய சோற்றுக்கட்டிகளை இவ் வறைகளில் வைத்தே வழங்குகின்றனர்.

### வடக்கு வாசல் (த.ப. எண். 17)

அறைகளை அடுத்து வடக்கு வாசல் அமைந்துள்ளது. திருவிழாக் காலங்களில் மக்கள் தரிசனம் முடித்தபின் வெளியேற அவ்வழி திறக்கப்படுகிறது.

### சிவாச்சாரியார் வேள்விக் கூடம் (த.ப எண். 18)

முறைப் போற்றிகட்குத் தங்குமிடமிருப்பதைப் போலவே முறைப்பட்டர் (சிவாச்சாரியார்) களுக்கும் தங்குமிடமாக இது பயன் படுத்தப்படுகிறது. ஆவணி, மாசித்திருவிழாக் காலங்களில் இங்கு வேள்வி நடைபெறுதலுண்டு.

### இரண்டாம் சுற்றுலை — கிழக்குப்பகுதி

இச்சுற்றுலைப் பகுதியில் கம்பத்தடி விநாயகரைக் கொடிமரத் தருகே காணலாம். திருவிழாக்காலத்தில் கொடியேற்றப்பெறும் செப்புக் கொடி மரம் நடுவிலுள்ளது.

### செப்புக் கொடிமரம் (த.ப எண். 19)

இக்கொடிமரம் அமைக்கப்பட்டதைப் பற்றி ஆறுமுகப் புலவர் ஒரு காப்பியம் பாடியுள்ளார். கதைச் சுருக்கம் வருமாறு:

மதுரைப் பாண்டியன் ஒருவன் (உக்கிரபாண்டியன் எனத்தல புராணம் கூறும்) தன் மகளுக்குக் குதிரை முகமாயிருக்கக் கண்டு வருந்தினன். பல தலங்கட்கும் சென்றபின் திருச்செந்தூருக்கு வந்தான். மூலவருக்கு நேராகக் கடலில் அமைந்த வதனாரம்ப தீர்த்தத்தில் அவன் மகள் மூழ்கி எழுந்ததும் அழகு முகம் பெற்றாள்[23] தன் நேர்ச்சையின்படி கொடிமரம் நட்டுத் திருவிழாக் கொண் டாடினன்[24].

இம்மரத்தை வெட்டிக் கொண்டுவந்த சர்வாங்காசாரி மரபினரே கொடிப்படம் எழுதும் உரிமை பெற்றிருந்தனர். அம் மரபினர் மறுத்ததால் கடந்த எட்டாண்டுகளாக அக்கினிமேஸ்திரி எழுதி வருகிறார்.

## இரண்டாம் சுற்றுலே — தென்பகுதி

இதன் இரு புறங்களிலுமுள்ள தூண்களே மறைத்து அறைகளாக்கியுள்ளனர். இதனை வடபகுதி, தென்பகுதி எனப்பிரிக்கலாம்

### வடபகுதி (த ப. எண் 20)

வடபாலுள்ள சுவரில் ஆதிசங்கரர் பாடிய சுப்பிரமணிய புஜங்கச் செய்யுட்கள் வடமொழியிலும் தமிழிலும் சலவைக்கற்களில் பொறிக்கப்பட்டுள்ளன. ஆதிசங்கரரை ஓவியத்தில் காணலாம்.சீபலி மண்டபத்தை யடுத்து திருக்கோயில் படவிற்பனை நிலேயம் உள்ளது.

### தென்பகுதி (த ப எண். 21)

தென்பகுதியின் கிழக்குப்புறம் வாயிலுள்ளது. திருவிழாக்காலத்தில் மக்கள் வெளியேறப்பயன்படுகிறது. வாயிலருகே கல்வெட்டுக்கள் உள்ளன.

வாயிலுக்கு மேற்கே அபிடேக அறை (துணிகளேப் பேணுமிடம்) உள்ளது. அதனையடுத்து திருக்கோயில் ஒலி பெருக்கி நிலேயமுள்ளது.

அதனையடுத்து உள்துறை அலுவலர் அறை உள்ளது. அவ்வறையில் கண்ணுடிப் பேழைகளில் கட்டபொம்மன் வழிபட்ட சிலேகளுள (நி.ப எண் 8)

### அணு அறை

சீபலி மண்டத்தினருகே தென் மேற்குத் திண்ணை வழிச் சென்றால் அணுஅறை (அரிசி, பருப்பு முதலிய பொருட்கள் வைக்குமிடம்) உள்ளது. அணுஅறைக்கு எதிர்ப்புறமுள்ள சுவரில் கந்தர் கலிவெண்பாக் கண்ணிகள் சலவைக் கற்களில் பொறிக்கப்பட்டுள்ளன. குமரகுருபரர் வரலாற்றைக் குறிக்கும் ஓவியங்களுமுள்ளன.

## முதற் சுற்றுலே

சீபலி மண்டபத்திலிருந்து சண்முகரை நோக்கி இரண்டு படிகள் இறங்கி நின்று மேற்கே நோக்கினுல் குமரவிடங்கர் இருப்பிடமும், கிழக்கே நோக்கினுல் போற்றி மடைப்பள்ளியும் தென்படும்.

ஆறுபடிகளும் இறங்கி மேற்கே நோக்கினுல் வள்ளியம்மன் கோயிலேக் காணலாம். அதை நோக்கிச் செல்லும் வழியில் இடப்புறம் அறுபத்துமூன்று நாயன்மார் திருவுருவங்களேக் காணலாம். வலப்புறம் தக்கிணு மூர்த்தி கோயிலேத் தரிசிக்கலாம்,

வள்ளியம்மன் கோயில் முன்புள்ள தூண்களில் திருக்கோயில் திருப்பணி செய்த காசி சுவாமி, மௌன சுவாமி, தேசிகமூர்த்தி சுவாமி ஆகியோர் திருவுருவங்களைக் காணலாம். (நி.ப. 22,23)

இச்சுற்றுலையிலேயே பரிவார தேவதைகளுக்குரிய பீடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. பீடங்களின் மேல் அத்தேவதைகள் இறங்கிவர வழியமைத்துள்ளனர்.[25]

## வள்ளியம்மன் கோயில் (த ப எண். 22)

இக்கோயிலைப் புதுப்பித்துச் சலவைக் கற்கள் பதிப்பித்து அழகு செய்தவர் ஆறுமுக சுவாமிகளே.[26] (நி. ப. எண் 24)

## வேள்விக் கூடம் (த ப. எண் 23)

வள்ளியம்மை கோயிலுக்கும் தெய்வயானை கோயிலுக்கும் இடையிலுள்ளது. சிறப்பு வேள்வி (தாராஹோமம்) களும் கந்தர் சட்டி நாட்களில் நடைபெறும் வேள்வியும் இங்குத்தான் நடைபெறுகின்றன. இவ்வேள்விக் கூடத்தை அழகு படுத்திய பெருமை புகழுடல் பெற்ற திரைப்பட அதிபர் சாண்டோ எம் எம். சின்னப்பாத்தே வரையே சாரும். கி.பி. 1970 ஆம் ஆண்டு இம்மண்டபம் கட்டப் பெற்றது. வேள்விக் கூடத்தைச் சுற்றிலும் இரும்புக் கம்பிகளாலாகிய வேலியுள்ளது.

வேள்விக் கூடத்திற்கு எதிரிலுள்ள சுவரில் பாலசுப்பிரமணியர் சிலையமைந்துள்ளது.

## தெய்வயானையம்மன் கோயில் (த.ப. எண். 24)

வேள்விக் கூடத்தின் வடபுறம் அமைந்துள்ள இக்கோயிலைப் புதுப்பித்தவரும் ஆறுமுகசுவாமிகளே

## முதற் சுற்றுலை வடபகுதி

இதன் கிழக்குப் புறத்தில் மயூரநாதர் சிலையுள்ளது. அடுத்து சண்டிகேசுரர் கோயில் உள்ளது அக்கோயிலுக்கு எதிரில் போற்றி மார் தங்குமிடம் செல்ல ஒருவாயில் அமைந்துள்ளது.
(த. ப. எண் 25)

வாயிலை அடுத்துக் கம்பிகளால் தடுக்கப் பெற்ற அறையில் காயல்பட்டினம் பெருமாள் கோயில் சிலைகள் காட்சிக்காக வைக்கப்பெற்றுள்ளன.

## நடராசர் கோயில் (த ப. எண் 26)

கி.பி. 1653 ஆம் ஆண்டில் டச்சுக் கொள்ளையரிடமிருந்து திரும்பப் பெற்ற சிலைகளோடு நடராசர் சிலை கிடைத்தது. இச்சிலை

யைத் திருநள்ளாற்றிலிருந்து டச்சுக்காரர் கவர்ந்து சென்றனர்[27] இவரருகில் சிவகாமியம்மன், காரைக் காலம்மையார், மாணிக்க வாசகர் திருவுருவங்களுள்ளன.

### சனீசுவரர் கோயில்

இக்கோயிலில் நவக்கிரகங்கட்குச் சிலைகள் இல்லை. ஆயினும் சனீசுவரருக்குக் கோயில். நடராசருக்கு இடப்புறமுள்ளது.

சனீசுவரரை யடுத்துப் பைரவர் கோயில் அமைந்துள்ளது.

### முதற் சுற்றலை-கிழக்குப் பகுதி

இச்சுற்றலையின் நடுவில் தங்கத்தகடுகளால் பொதியப்பட்ட கொடி மரமும் மகாபலி பீடமும் அமைந்துள்ளன. கொடி மரத் திற்குக் கிழக்கே வாயில் உள்ளது. வாயிலின் இருபுறங்களிலும் குடமுழுக்கு விவரம் பற்றிய கல்வெட்டுக்கள் உள்ளன.

### தங்கக் கொடிமரம் (த ப. எண் 27)

கொடிமரங்களை உலோகத் தகடுகளால் பொதியும் வழக்கம் நாயக்கர்கள் காலத்தில் ஏற்பட்டது.[28] இதில் கொடியேற்றித் திரு விழாக் கொண்டாட அண்மையில் முயன்ற போது எதிர்ப்பிருந் ததால் அம்முயற்சி கைவிடப்பட்டது.[29] ஏறத்தாழ ஐம்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன் இதில் தங்கத்தகடுகள் பொதியப்பட்டதென் கிறார் விநாயகர் [30]

இக்கொடிமரம் பற்றி வழங்கும் நாடோடிக் கதை வருமாறு:

ஒரு காலத்தில் திருச்செந்தூர்க் கோயில் கொடிமரம் முறிந்து விழுந்தது. அடியார்கள் வருந்தினர். அப்போது ஓர் எருமை கடலை நோக்கி ஓடியது. கடலில் விழுந்து நீந்திச் சென்றது திரும்ப வரும் போது சந்தன மரத் தடியினைத் தள்ளிக் கொண்டுவந்தது. அனை வரும் வியப்பில் ஆழ்ந்தனர். அந்த மரத்தைக் கொடிமரமாக நட் டனர். எருமை கல்லாக மாறியது. அதற்குப் பூசை செய்துவந்தனர். இப்போது எருமையின் சிலை இல்லை. திருப்பணி செய்த காலத்தில் மறைந்திருக்கலாம்.

### கடலில் சந்தன மரம் வந்தவிதம்

இலங்கை மன்னன் கண்டியரசன் கனவில் திருச்செந்தூர் முருகன் தோன்றிச் சந்தன மரமொன்றை வெட்டிக் கடலில் மிதக்க விடச் சொன்னார். அவ்வாறு அம்மன்னன் வெட்டித் தள்ளிய மரமே மிதந்துவந்து திருச்செந்தூர்க் கரையையடைந்தது என்பர். கொடிமரம் பற்றிய இச்செய்தி திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழிலும் இடம் பெற்றுள்ளது.[31] எனவே இந்நிகழ்ச்சி பகழிக் கூத்தர் காலத்திற்கு முன் (கி.பி. 17 ஆம் நூற்றாண்டுக்கு முன்) நடைபெற்றிருக்கலாம்.

**மகா மண்டபம்** (த. ப. எண் 30)

*மகா பலி பீடத்திலிருந்து மூலவரை நோக்கிச் சென்ருல் மகா மண்டபத்தையடையலாம். மூலவர் முன்புள்ள இரும்புக் கம்பி களால் தடுக்கப் பெற்ற இடம் 'மணியடி' எனப்படும். மணியடியில் பார்வதி அம்மன், கரியமாணிக்க விநாயகர், வீரபாகு, வீரமகேந் திரர், விளக்கேந்திய பூதம் ஆகியோர் திருவுருவங்களைக் காணலாம். கி. பி. 1803 ஆம் ஆண்டில் வீரபாகு, வீரமகேந்திரர் சிலேகளை நிறு வியதாகத் திரு. மு. ப. கூறுகிருர்.*

**பாம்பறை** (த. ப. எண் 31)

*வீர மகேந்திரருக்கு இடப்புறம் ஒரு சிறிய வாயில் தென்படும். அதன் வழியே நுழைந்து சென்ருல் மூலவருக்கு வலப்புறம் பஞ்ச லிங்கங்கள் உள்ள அறை காணப்படும். பஞ்சலிங்கங்களைக் காண நுழைவுக் கட்டணமாக ஒரு ரூபா வாங்குகின்றனர்.*

**செந்தில் நாயகர் அறை** (த. ப. எண் 32)

*வீர மகேந்திரருக்கு முன்புள்ள வாயில் வழியே வெளியேறி இடப்புறம் திரும்பிளுல் செந்தில் நாயகர் அறை தெரியும். இவ ருக்கு வலப்புறம் கருவூல அறை அமைந்துள்ளது.*

**ஆறுமுகநயினுர் அறை** (த. ப. எண் 33)

*செந்தில் நாயகரை அடுத்துள்ள மண்டபத்தில் ஆறுமுகப் பெருமான் பக்க நாச்சிமாரோடு காட்சி தருகிருர். சிவன் கோயில் களில் இடப்புறம் நடராசரிருப்பது போல் இங்கு நடராசர் அமிச மான ஆறுமுகப் பெருமான் விளங்குகிருர், வடமொழியில் சண் முகர் என அழைக்கப் பெறுகிருர்.*

**அலைவாயுகந்த பெருமான் அறை** (த. ப. எண் 34)

*ஆறுமுகப் பெருமான் கோயிலே யடுத்துள்ள சிறிய அறையில் எழுந்தருளும் மூர்த்திகளான அத்திர தேவர், நடராசர், விநா யகர், சேரமான் பெருமாள் நாயஞர், அப்பர், சுந்தரர், சம்பந்தர் அலைவாயுகந்தபெருமான் ஆகியோர் சிலேகள் உள்ளன.*

**மணியடி** (த. ப. எண் 35)

*பெரிய மணியொன்று தொங்கவிடப்பட்டிருப்பதால் இப் பெயர் பெற்றது. இங்கு நின்று தரிசிக்க ஒரு ரூபா கட்டணம். இங்கு அமர்ந்து திருமுழுக்குக் காண மூன்று ரூபா கட்டணம்.*

### சுற்றுக் கோயில்கள்

இத்திருக் கோயிலின் ஆளுகைக்குட்பட்ட சுற்றுக் கோயில்கள் இருபத்திரண்டு.[32] அவற்றுள் இக்கோயிலைச் சுற்றியுள்ள தூண்டுகை விநாயகர், வள்ளியம்மன் குகை, இடும்பன் கோயில் ஆகியவற்றைக் காண்போம்.

### 1. தூண்டுகை விநாயகர் கோயில் (த. ப. எண் 36)

சந்நிதித்தெரு வழியாக வருபவர் முதலில் இவரைத் தொழுது, பின் மணல் மேட்டில் ஏறி முருகன் கோயிலையடைவர். இக்கோயிலிலிருந்து சண்முக விலாசம் இருநூறு மீட்டர் தொலைவில் உள்ளது. தூண்டுகை விநாயகர் கோயில் 1) விடலை போடுமிடம் 2) மகா மண்டபம் 3) அர்த்த மண்டபம் 4) கருவறை என நான்கு பிரிவுகளாக அமைந்துள்ளது.

அர்த்த மண்டபத்திலுள்ள ஒரு கல்லில் மயில் மீது முருகன் ஒரு பெண்ணுக்குக் காட்சி தருவதைக் காணலாம். (கதை விவரம் மூன்றும் இயலில் காண்க) விநாயகர் சிலை கோபுர அமைப்போடு விளங்குகிறது. தமிழர் கந்திலை நட்டு வணங்கியதை இச்சிலை நினைவூட்டுகிறது.

### வள்ளியம்மன் குகை (த. ப. எண் 37)

கிரி வீதியின் வடபுறம் கடலை நோக்கி இறங்கினால் தேவர் குடிலையடுத்து இக்குகைக்குச் செல்லும் வழி காணப்படும். கிரி வீதியிலிருந்து இது 15 மீட்டர் தொலைவில் உள்ளது.

### அமைப்பு

இக்குகையின் முன்மண்டபம், பதினாறு கல்தூண்களாலானது. மண்டபத்தின் நீளம் இருபத்து நாலே காலடி. அகலம் இருபத்தொன்றே காலடி. இக் குகை கடலை நோக்கியுள்ளது.

மண்டபத்தில் பிள்ளையார், சிவன், வள்ளியம்மன், மூன்று தலைகளுள்ள பிரும்மா (இவரைத் திருமால் அமிசமான தாத்தாத்ரேயர் என்பர்) நாகர்கள் மற்றும் சூரியன் சிலைகளுள்ளன. தென்புறமுள்ள சுவரில் வள்ளி திருமணக் காட்சியுள்ளது. யானையைக் கண்டஞ்சிய வள்ளி முருகனைத் தழுவும் காட்சியினைக் காணலாம்.

மண்டபத்தின் பின்புறமுள்ள மணற்பாறையில் வள்ளி குகை அமைந்துள்ளது. குகைக்குள் நுழையும் வாயில் நான்கடி உயரமுள்ளது. குனிந்து மூன்று படிகள் ஏறி இடப்புறம் திரும்பி மூன்று படிகள் இறங்கினால் பதினாறு சதுர அடிப்பரப்புடைய குகையில் நிற்கலாம். வள்ளியம்மன் சிலை சுவரையொட்டி அமைந்துள்ளது. குகைக்குள் எண்ணெய் விளக்கு எரிந்து கொண்டிருக்கிறது.

## காலம்

இதே போன்ற குகை தெற்கே ஒன்பது கல் தொலைவுக்கப்பால் மணப்பாடு என்னுமிடத்தில் உள்ளது. இவற்றை ஆராய்ந்த சர்க்கார் என்பவர் இவை பாண்டியர் காலத்துக் குகைகள் எனவும், இவற்றில் துறவிகள் வாழ்ந்ததாகவும் குறிப்பிடுகிறார்.[33] அதே நூலில் திருச்செந்தூர்க் கோயிலையும் பாண்டியர் குகைக் கோயிலெனக் கூறி இவை கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டுக்குள் அமைக்கப் பட்டிருக்கலாம் என்கிறார்.

## வள்ளி ஒளிந்த கதை

இக்குகை பற்றித் திரு. இராமானந்த சாஸ்திரி கூறுவதாவது:

''முருகன் வள்ளியைச் சிறையெடுக்க (தூக்கிச் செல்ல) வரும் போது நம்பிராசன் (வள்ளியின் தந்தை) முருகனைத் துரத்தினான். முருகன் இக்குகையில் வள்ளியை ஒளிந்திருக்கச் சொல்லிப் பிள்ளையாரைக் காவல் வைத்துவிட்டுப் போருக்குச் சென்றான்'' [34]

## பரதவர் கூறும் கதை

''தெய்வயானை, எங்கள் (பரதவர்) குலத்தில் பிறந்தவள். அவள் கன்னியாகுமரியை யாண்ட மச்சேந்திரன் மகள். அவளது அழகைக் கண்ட முருகன் அவளை இரவில் கடத்திக்கொண்டு வரும் போது ஓரிடத்தில் பொழுது விடிந்துவிட்டது. அவ்விடம் விடிந்த கரை (இப்போது இடிந்தகரை யென வழங்கப் படுகிறது) எனப் படும். தெய்வயானையைத் திருமணம் முடித்து வருவதைக் கண்ட முருகனின் முதல் மனைவியான வள்ளியம்மை ஊடல் கொண்டு இக்குகையில் ஒளிந்து கொண்டாள்.[35]

இதற்குச் சான்று பரதகுல பாண்டிய வம்ச சரித்திரத்தில் உள்ளது.[36] இவ்வட்டாரப்பரதவர் செந்தில்முருகனை 'மச்சான் (மைத்துனன்) சாமி' என உறவு கொண்டாடுகின்றனர். கோயிலுக்கு நேராக படகில் கடக்கும்போது தேங்காய் உடைப்பதை மரபாகக் கொண்டுள்ளனர். இக்கதை உளவியல் அடிப்படையில் எழுந்ததென்பர் சவகர்லால் ஹண்டு.[37]

## இடும்பன் கோயில் (த ப. எண் 38)

இது வேத பாடசாலைக்கும் வேலவன் விடுதிக்கும் இடையிலுள்ளது. கி.பி. 1959 இல் காவடி எடுப்பவர் வழிபடுவதற்கு வசதியாகக் கட்டப் பெற்றது.

## தீர்த்தங்கள்

ஆறுமுகப் பெருமானுக்கு இனிய காயத்திரி மந்திர எழுத்துக் கள் இருபத்துநான்கும் இங்குத் தீர்த்தங்களா யுள்ளன என்கிறது தலபுராணம்.[38] இவற்றுள் வதனாரம்ப தீர்த்தமும் நாழிக்கிண றும் (கந்தபுட்கரணி) மிகு சிறப்புப் பெற்றவை. தீர்த்தங்களின் பெயர் பொறித்த கற்கள் கடற்கரையில் ஆங்காங்கு நடப்பெற் றுள்ளன.

### 1 வதனாரம்ப தீர்த்தம் (த. ப. எண். 39)

மூலவர் திருமுன் நேராகக் கடலில் அமைந்துள்ளது. உக்கிர பாண்டியன் மகள் (கனகசுந்தரி) இங்கு நீராடியவுடன் குதிரை முகம் நீங்கப் பெற்றாள் என்கிறது தலபுராணம்.[39] கொடிமரக் காப்பியமும் இச்செய்தியைக் குறிப்பிடுகிறது.[40] கடற்கரை யிலுள்ள கல்வெட்டும் இந்நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறது. கடலரிப்புத் தடுப்புச்சுவர் அமைக்கப் பட்டிருப்பதால் இப்போது இங்கு நீராடுவார் இலர், இங்குப் பதினாறு கற்றூண் களைக் கொண்ட மண்டபமிருந்தது என்பர்.[41] பதினாறும் கம்ப மெனவும் வழங்கப் படுகிறது.

### 2 நாழிக்கிணறு (த.ப எண் 40)

சண்முக விலாசத்திற்குத் தெற்கே 100 மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. இஃது இயற்கை நீரூற்றாகும். இதனை அடைய நடைபாதை அமைக்கப் பட்டிருப்பதால் எளிதில் செல்லலாம்.

பெருங் கிணற்றின் கிழக்குப் புறமும் மேற்குப் புறமும் இறங் குவதற்கான படிகள் உள்ளன. 34 படிகள் இறங்கிச் சென்றால் (24 அடி ஆழம்) இதனை அடையலாம். உள்கிணறு பதினன்கு சதுர அடிப்பரப்பில் அமைந்துள்ளது. நீண்ட சதுரக் கிணற் றருகே ஒரு சதுர அடிப்பரப்பும் ஏழு அடிகள் ஆழமும் கொண்டு நாழிக்கிணறு விளங்குகிறது.

### புரியாத புதிர்

பெரிய கிணற்று நீர் கந்தக நாற்றத்துடன் கலங்கலாய்க் காணப்படுகிறது. நாழிக் கிணற்று நீர் தெளிவாகச் சிறிது உவர்ப் புடன் உள்ளது. இது நிலத்தடி நீர் ஆய்வாளர்கட்குப் புரியாத புதிராயுள்ளது.

கி.பி. 1959-ஆம் ஆண்டு முதல் இக்கிணற்று நீரை மேலே குழாய் வழியே ஏற்றித் தொட்டியில் நிரப்பி மேலேயே குளிக்க ஏற்பாடு செய்துள்ளனர்.

### வரலாறு

திரு முருகன் சூரனை வென்றபின் தன் படைகளின் தாகம் தணிக்கக் கைவேலால் இவ்விடத்தில் குத்தினார். தாகம் தணித்த பின் குளித்து எழுந்தார் என்பர்.[42] பெருவிழாக் காலத்துத் 'தீர்த்தவாரி' இங்கு நடைபெறும்.

கடலில் மூழ்கி எழுந்தவர் உடலிலுள்ள உவர் நீங்க இங்கு வந்து நீராடுகின்றனர். இவ்வாறு நீராடும் வழக்கத்தைப் பட்டினப்பாலை பகரும்.[43] நாழிக்கிணற்றில் நீராடிய பின் கடலில் நீராடல் மரபு என்பர் முத்துகுமாரசாமி.[44] நாழிக்கிணற்று நீர் மொள்ள மொள்ள அளவு குறையாமல் ஊறி வருவதை இறை யருள் என்றே கருதுகின்றனர்.

மூலவர் முன்பு ஒரு தீர்த்தக்கட்டம் இருப்பது போல் சண் முகர் முன் நாழிக் கிணறு அமைந்திருப்பது குறிப்பிடத் தக்கது.

### கவுண்டர் மடம் (ந.ப எண் 41)

இம்மடம் பல ஊர்களையும் சார்ந்த கவுண்டர்களுக்குரியது. மணல் மேட்டிலிருந்து இறங்குமிடத்தில் அமைந்துள்ளது. சித்திர சபை போன்று இம்மடத்தின் உட்சுவரில் நடராசர் வண்ணப் படம் வரையப் பட்டுள்ளது. மாதக்கடைசி வெள்ளியன்று செந் தில் நாயகர் இங்கிருந்து எழுந்தருளுகிறார்.

### மடம் பற்றிய கதை

இவ்வூர் முக்காணியரான அனந்த சுப்பையா தீட்சிதர் பாம் பன் சுவாமிகள் இயற்றிய பஞ்சாமிர்த வண்ணப் பாடல்களைப் பண்ணோடு பாடினார். முருகப் பெருமான் ஓர் இளைஞன் கோலத் தில் இம்மடத்திற்கு எழுந்தருளி மறைந்திருந்து பாடல்களைக் கேட்டு மகிழ்ந்தார். எதிரே அமர்ந்திருந்த முத்தம்மை ஆச்சி என் னும் மூதாட்டிக்கு மட்டும் முருகன் காட்சி கொடுத்தருளினார். அவரழகில் ஈடுபட்ட ஆச்சி அவர் செல்ல அவரைப் பின் தொடர்ந்தார். வசந்த மண்டபத் தருகே சென்றதும் முருகன் மறைந்துவிட்டார். என்கிறார் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்[45].

### கடைகள் (ந ப எண் 42)

மணல் மேட்டிலிருந்து இறங்குகையில் இடப்புறம் பதினான்கு கடைகளைக் காணலாம். பன்னீர், பூ, புத்தகம் விற்கும் கடைகளே முன்பிருந்தன. இன்று பாசி, பவள மாலைகள் முதலியன விற்கும் கடைகள் முளைத்துள்ளன. இவை கி. பி. 1978 ஆம் ஆண்டில் கட்டப் பெற்றன.

### தங்கத் தேர் நிலையம் (த. ப. எண் 43)

இது வெள்ளைக் கல் மண்டப முகப்பில் அமைந்துள்ளது. இரும்புக் கதவுகளோடு கூடிய அறையில் தங்கத் தேர் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. கி. பி. 1973 ஆம் ஆண்டில் இஃது அமைக்கப் பட்டது.

### தண்ணீர்ப் பந்தல் (த. ப. எண் 44)

தேவதான அலுவலகத்திற்கு எதிரே அமைந்துள்ளது. திருக் கோயிலார் குடி தண்ணீர் வழங்க ஏற்பாடு செய்துள்ளனர்.

### குளிர் பானக் கடை (த. ப எண் 45)

தண்ணீர்ப் பந்தலுக்கு மேற்கே சோடா முதலிய குளிர் பானங்கள் விற்கும் கடை அமைந்துள்ளது.

### விடுதிகள்

அன்பர் தங்கிச் சமையல் செய்து உண்ண வசதியாக ஊரினுள் சாதி வாரியாக மடங்கள் உள்ளன. ஆயினும் கோயிலருகே தங்கு மிடங்களிருந்தால் கடற்காட்சியை நன்கு சுவைக்கலாம் என்னும் எண்ணம் மக்களிடையே பெருகி வருவதால் திருக்கோயிலார் கோயிலருகே பல விடுதிகள் அமைத்துள்ளனர்.

### 1 வெள்ளைக் கல் மண்டபம் (த ப. எண் 46)

சண்முக விலாசத்திற்கு எதிரே அமைந்துள்ளது. பழைய மண் டபங்களிலிருந்து இடித்து அகற்றப்பட்ட 96 வெள்ளைக் கற்களைக் கொண்டு கி. பி. 1938 இல் ஆறுமுக சுவாமியவர்களால் அமைக்கப் பட்ட தென்பர். இதற்குத் தத்துவப் பிரகாச மண்டபம் என்ற பெயருமுண்டு[46]. நீளம் $118\frac{1}{2}$ அடி. அகலம் $46\frac{3}{4}$ அடி. இப்போது சண்முக விலாச விடுதி என அழைக்கப்படுகிறது. தூண்களுக் கிடையே சுவரெழுப்பி இருபத்திரண்டு அறைகளாக்கிக் குறைந்த வாடகையில் அன்பர் தங்குவதற்கு இங்கு வசதி செய்துள்ளனர்.

### 2. மூன்று மண்டபங்கள் (த. ப. எண் 47)

வெள்ளைக் கல் மண்டபத்தை யடுத்துள்ள மண்டபத்தில் திருக் கோயிலாரது கூட்டுறவுப் பண்ட சாலை அமைக்கப்பட்டுள்ளது. பண்ட சாலையை அடுத்துள்ள இரு மண்டபங்கள் நீண்ட தோற்ற முடையன. இவை திருவிழாக் காலத்தில் மக்கள் தங்கப் பயன்படு கின்றன. இவை கி. பி. 1959 ஆம் ஆண்டில் அன்பர்கள் இலவச மாகத் தங்குவதற்காக ஏற்படுத்தப் பெற்றன.

### 3 கோவிந்தம்மாள் ஆதித்தனூர் திருமண மண்டபம் (த ப, எண் 48)

இது திரு. சி. பா. ஆதித்தனூர் மகன் திரு. சிவந்தி ஆதித்தனூரால் கி. பி. 1970 ஆம் ஆண்டு கட்டி முடிக்கப் பட்டு எவர் சில்வர் பாத்திரங்களோடு) திருக்கோயிலுக்கு அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டது. இம்மண்டபத்தில் திருமணம் நடத்துவதற்குரிய வசதிகள் அனைத்தும் உள்ளன.

திருவிழாக் காலங்களில் அன்பர் தங்கவும் பயன்படுகிறது.

### 4 செந்திலாண்டவன் விடுதி (த. ப. எண் 49)

இது சிங்கப்பூர் கோவிந்தசாமிப் பிள்ளை கலையரங்கத்தை அடுத்துள்ளது. எழுபத்திரண்டு அறைகளைக் கொண்டது. ஏ. வகுப்பறைகள் 4 , பி-1 வகுப்பறைகள் 28., பி-2 வகுப்பறைகள் 25 சி. வகுப்பறைகள் 15. மற்றும் பொருட் பாதுகாப்பு அறைகள் (லாக்கர்கள்) ஐம்பது உள்ளன. கி. பி. 1953 இல் திறக்கப்பட்டது இவ்விடுதி.

### 5 ஆறுமுக விலாச விடுதிகள் (த. ப. எண் 50)

ஆனந்த விலாச மண்டபத்திற்கு அருகே அமைந்துள்ளது. ஆறு குடில்கள் மட்டுமே அமைந்துள்ளதால் இப்பெயர் பெற்றது. இவை கி. பி. 1962 இல் நிறுவப்பட்டன. உயர் அலுவலர் இவ் விடுதிகளிலேயே தங்குகின்றனர்.

### 6. தேவர் குடில் (த ப எண் 51)

பாதி நன்கொடைத் திட்டத்தின் கீழ் அமைக்கப்பட்ட குடில்களில் குறிப்பிடத்தக்கது தேவர் குடில். புகழுடல் பெற்ற திரைப்பட அதிபர் சாண்டோ எம். எம். சின்னப்பாத் தேவரது நன்கொடையால் கி. பி. 1973 இல் கட்டப் பட்டது. குளிர் சாதன (A. C.) வசதிகளுடையது.

### நன்கொடைக் குடில்கள்:

பாதி நன்கொடைத் திட்டத்தின் கீழ் 63 குடில்கள் உள்ளன.

நன்கொடையார் ஓர் ஆண்டில் தாம் விரும்பும் அறுபது நாட்கள் வாடகையின்றித் தங்கலாம்.[47]. இரண்டு குடில்களில் குளிர்சாதன வசதியுண்டு.

### 8. வாங்கப்பட்ட விடுதி

அரசினர் சுற்றுலா மாளிகைக்குத் தென் மேற்கேயுள்ள தங்குமிடங்கள் விலைக்கு வாங்கப்பட்டவை யாகும்.

**9 வீரபாகு தேவ விலாசம் (த. ப. எண் 52)**

*சித்த மருத்துவமனைக்கு மேற்குப் புறம் உள்ளது.*

**10. வேலவன் விடுதி (த. ப. எண் 53)**

*கி. பி. 1972 இல் அமைக்கப்பட்டது. வசந்த மண்டபத்திற்குத் கிழக்கே அமைந்துள்ளது. 73 அறைகள் வசதிகளோடு உள்ளன*

**11. செயந்தி நாதர் விடுதி (த. ப. எண் 54)**

*மணல் மேட்டின் தென்பகுதியில் அமைந்துள்ளது. 108 அறைகள் கட்டுதற்குத் திட்டம் தீட்டி 36 அறைகள் கட்டி முடிக்கப் பட்டுள்ளன.*

**பிற நிலையங்கள்:**

**1. செந்தில் முருகன் சிறுவர் இல்லம்**

*ஊரினுள் கீழைத் தேர் வீதியில் உள்ளது. இதில் தங்கிப் பயிலும் மாணவர் எண் 55. அன்பு இல்லமும் இங்கேயே 25 மாணவரோடு உள்ளது. இங்குத் தங்கிப் பயில்வோர் இலவசமாக உணவு, உடை, இருப்பிடம், மருத்துவ வசதிகள் பெறுகின்றனர்,*

**2. முதியோர் இல்லம்**

*அறுபத்தைந்து வயதிற்கு மேற்பட்ட ஆதரவற்ற பன்னிரண்டு முதியவர் தங்குமிடம் நாழிக்கிணற்றுக்கு மேற்கே நாவற்பழச்சாலையருகே அமைந்துள்ளது. இவர்கட்கு இலவச உணவு, உடை, தங்குமிடம், மருத்துவ வசதிகள் திருக்கோயிலாரால் வழங்கப்படுகின்றன.*

**3. சித்த மருத்துவமனை**

*கோவிந்தசாமிப் பிள்ளை கலையரங்கிற்குப் பின்புறம் அமைந்துள்ளது. இவ்விடம் முன்பு 'ஓட்டுப்புரை என அழைக்கப்பட்டது, ஆறுமுக சுவாமிகள் இங்குத் தங்கித் தான் கோயில் திருப்பணி செய்தார். இன்று' இங்கு உடற் பிணியாளர்க்கு இலவசமாக மருந்துகள் வழங்குகின்றனர். இரு மருத்துவர் பணி செய்கின்றனர்.*

**4 வேத பாடசாலை (த. ப எண் 56)**

*இது வேலவன் விடுதிக்குக் கிழக்கே உள்ளது. இவ்வூர் முக்காணியச் சிறுவர் பதினைந்து பேர் இங்கு வேதம் பயில்கின்றனர் பயில்வோருக்குத் திருக்கோயிலார் திங்களுக்கு (ஆளுக்கு) 30/-ரூபா வீதம் வழங்குகின்றனர்.*

## 5. யானை கட்டுமிடம் (த. ப எண் 57)

கி. பி. 1967 ஆம் ஆண்டில் தூத்துக்குடி திரு கே. எஸ்.பி. சண்முக வேல்நாடார் யானைக்குட்டி யொன்று நன்கொடையாக அளித்தார் அவ்வாண்டிலேயே அக் குட்டி நோய்வாய்ப்பட்டு மீளவில்லை. சுற்றிலும் சுவரமைத்து இத்திருக்கோயில் சிப்பந்திகள் சங்கத்திற்கு இவ்விடத்தை அளித்துள்ளனர்.

## 6. திருக்கோயில் அலுவலகம்

கோவிந்தம்மாள் ஆதித்தனார் கல்யாண மண்டபத்திற்கெதிரே யுள்ள தேங்காய் பழக் கடைக்கு மேற்கே அமைந்துள்ளது.

## 7. நுழைவாயில் (த. ப. எண் 60)

கி. பி 1973 இல் கரூர் அமர் சோதி நிறுவனத்தாரால் கட்டிக் கொடுக்கப்பட்டது. இவ்வாயில் வழியாக வண்டிகள் செல்லக் கட்டணம் உண்டு.

## 8. புறக் காவல் நிலையம்

கி. பி. 1975 இல் நுழைவாயிலுக்கு மேற்கே அமைக்கப் பட்டது.

## 9. தேவதான அஞ்சல் நிலையம்

புறக்காவல் நிலையத்தையடுத்து அமைந்துள்ளது. இதனை யும் திருக்கோயிலாரே கட்டியுள்ளனர்.

### சமாதிகள்

## 1. வள்ளிநாயக சுவாமி சமாதி (த. ப எண் 68)

இது நுழைவாயிலை யடுத்து அமைந்துள்ளது. தரிசனத் திற்கு வரும் அன்பர் வெயில், மழையால் துன்புறாமல் நடக்கத் தூண்டுகை விநாயகர் கோயிலில் தொடங்கி, கிரி வீதி முழுவதும் நடைபாதை அமைத்தார் சுவாமிகள் கி.பி. 1974 ஆம் ஆண்டில் இந் நடைபாதையின் மேற்கூரை அகற்றப்பட்டு எம்.எம். சின்னப்பாத்தேவரது நன்கொடையால் சிமிண்டுக் கூரை அமைக்கப் பட்டது.

## 2. மூவர் சமாதி

நாழிக் கிணற்றுக்குத் தெற்கே மூலவர் திருமுழுக்குத் தண்ணீர் மொண்டுவரும் கிணற்றருகே வளைவினுள் கோயில் திருப்பணிக் கெனத் தம்மை அர்ப்பணித்த மௌன சுவாமி, காசி சுவாமி, ஆறுமுக சுவாமி சமாதிகள் உள்ளன.

## தண்ணீர்த் தாங்கிகள்

திருக்கோயில் அலுவலகத்திற்கு எதிரே யொன்றும், ஆனந்த விலாச மண்டபத்திற்கு அருகிலொன்று மாக அமைந்துள்ளது. முந்தியது தண் பொருநையாற்றுத் தண்ணீரைத் தாங்குவதாகும் ஏனையது கிணற்றுத் தண்ணீர் (கிணறு ஊருக்கு மேற்கே ஆவுடையார் குளத்தருகிலுள்ளது) தாங்குவதாகும்.

## தேவதான உணவு விடுதி

இது நுழைவாயிலருகே வள்ளிநாயக சுவாமி சமாதிக்குக் கிழக்கேயுள்ளது. கி. பி. 1977 ஆம் ஆண்டிலிருந்து குத்தகைதார் நடத்திவருகிறார்.

## தேவதான மின் நிலையம்

தமிழ் நாடு மின்வாரியம் வழங்கும் மின்னோட்டம் தடைப் படும் போது தேவையான மின்சாரம் வழங்க இஃது அமைக்கப் பட்டுள்ளது.

## பேருந்து நிலையம் (த. ப. எண் 65]

கடந்த இரண்டாண்டுகளாக வேலவன் விடுதிக்கு முன்புள்ள வெற்றிடத்தில் கட்டபொம்மன் மற்றும் திருவள்ளுவர் கழகப் போக்குவரவுப் பேருந்து வண்டிகள் வந்து செல்கின்றன. நகரப் பேருந்துகளும் (Town Bus) இப்போது இங்கு வந்து செல்கின்றன.

# மூன்றும் இயல்

## வழிபடப் பெறும் திருவுருவங்கள்

திருச்செந்தூர்க் கோயிலில் வழிபாட்டிற்காகக் கொள்ளப் படும் கற்சிலைகளின் எண்ணிக்கை முப்பது எனத் திருக்கோயிலின் சொத்தின் விவரப் பதிவேடு விளம்புகிறது. அவ்வட்டவணைப் படியே திருவுருவங்களின் அமைப்பினை ஆராய்வோம்.

### ஸ்ரீ விநாயகர்

பதிவேட்டில் இரண்டு விநாயகர் திருவுருவங்கள் (மேல வாசல் விநாயகர், கரிய மாணிக்கப் பிள்ளையார்) மட்டுமே குறிக்கப் பட்டுள்ளன. ஆனால் இங்கு ஐந்து விநாயகர் திருவுருவங்கள் சிறப் பாக வழிபடப் பெறுகின்றன.

### அ) தூண்டுகை விநாயகர்

இவரைத் தூண்டி விநாயகர் என்று அழைக்கின்றனர். டுண்டி விநாயகர் என்ற பெயர் மருவித் 'துண்டி விநாயக'ராகிப் பின்னர் 'தூண்டி விநாயக'ராகி விட்டார் என்றும், காசியில் இப்பெய ருடைய விநாயகர் உள்ளாரென்றும் உரைக்கிறார் திரு மு. ப. தன் தம்பியாகிய முருகனிடம் செல்லுமாறு தூண்டிக் காட்டுவதால் இப்பெயர் பெற்றார் என்கிறார் திரு. இ. சா. இவரது துதிக்கை தூண்டிக் காட்டும் நிலையில் அமைக்கப்படவில்லையாயினும் இப் பெயர் வந்ததற்கான கதையை இக் கோயிலின் அர்த்த மண்டபத் தில் அமைந்துள்ள சிற்பம் செப்புகிறது. அச் சிற்பத்தின் தலையில் கூடையுடன் ஒரு பெண், அவள் காலடியில் பாம்பு, அவளெதிரே மயில் மீதமர்ந்த முருகன் காட்சியளிக்கின்றனர். இனி, கதையைப் பார்ப்போம்.

ஒரு காலத்தில் திருச்செந்தூர் ஒரு சிற்றூராக விளங்கியது. ஊரைச் சுற்றிலும் அடர்ந்த காடு காணப்பட்டது. ஊருக்கு வட மேற்கில் சண்முகபுரம் என்ற ஊரில் (தற்போது வீரபாண்டியன் பட்டினம் புகை வண்டி நிலையமுள்ள இடம்) முருகன் கோயில் பூசாரிகளும் அவர்களுக்கு உதவும் தேவதாசிகளும் வாழ்ந்து வந் தனர். ஒரு நாள் காலையில் உதயமுறைக்காரி யான சுந்தரி என்னும் தாசி சிவாச்சாரியாரிடமிருந்து அரிசி, எண்ணெய் முதலியன பெற்று காட்டு வழியே நடந்து வந்தாள். வழியில் அவளை நச்சுப் பாம்பு தீண்டிவிட்டது. அவள் மயங்கி விழுந்தாள். வேறொரு வழியாகத் திருச்செந்தூர்க் கோயிலையடைந்த சரவண நம்பியார் என்னும் பூசாரியார் தாசி வந்து சேராததைக் கண்டு வருந்

தினர். தூண்டி விநாயகரிடம் போய் முறையிட்டார். உடனே ஒரு மயில் பறந்து வந்து நம்பியாருக்கு வழிகாட்டியது. நம்பியார் தாசியின் நிலையைக் கண்டு வருந்தினர். முருகப் பெருமான் மயில் மீது காட்சி தந்தார். ''முற்பிறப்பில் சுந்தரி ஒரு பாம்பிற்குத் தீங்கிழைத்ததால் இப்போது இந்நிலை அடைந்தாள். இவளுக்கு நம் உலகில் இடமளித்தோம் ''என முருகப் பிரான் மொழிந்தார். இக்கதையைத் திரு. மு. ப. எழுதியுள்ளார்.[1]

சுந்தரியைப் பாம்பு தீண்டிய இடத்தில் இப்போதும் காவடி யெடுப்போர் வழிபாடு செய்கின்றனர். அவ்விடம் 'மயில் கல்' என வழங்கப் படுகிறது.

## 2. மேலக் கோபுர வாசல் விநாயகர்

மேலக் கோபுரவாசல் வழியாக இருபத்தேழு படிகள் இறங் கினல் எதிரே இவரைக் காணலாம். இவர் பத்தடி உயரமுள்ளவர். மடியில் வல்லபை (சூரனின் தாய்) யைக் கொண்டு விளங்குகிறார்.

மேலக் கோபுர வாசல் திறக்கப்பட்டிருந்த காலத்தில் இவ் வழியே இறங்கிய மக்களுக்கு வெறும் சுவர் தென்பட்டது. வழி படும் திருவுருவம் தென்பட்டால் நன்று எனக் கருதி இவர் திரு வுருவை இங்கு அமைத்திருக்கலாம்.

இவரைப் பற்றி வழங்கும் நாடோடிக் கதையினைக் காண் போம்.[2]

தேசிக மூர்த்தி சுவாமிகள் மேலக் கோபுரம் கட்டிய காலத்தில் விநாயகருக்குப் பூசை நடத்த மறந்து சாரம் (வேலை செய்யும் ஆட் கள் நிற்பதற்காகக் கம்புகளால் அமைக்கப் படுவது) கட்டினாராம். சாரம் சரிந்து விழுந்து விட்டது. மீண்டும் மீண்டும் கட்டினர். விழுந்து கொண்டேயிருந்தது. அப்போது வெறியாடும் ஒருவர் ''விநாயகரை வழிபடாமல் தொடங்கியதால்தான் இவ்வாறு நேரு கிறது'' என்று கூறினர். விநாயகர் திருவுருவை அமைத்து வழி பட்டனர். பின் சாரம் சரிந்து விழவில்லை.

விநாயகர் திருவுருவின் மடியில் அமைந்துள்ள வல்லபையைப் பற்றிப் பாமரர் கூறும் கதை வருமாறு:[3] ''முருகப் பெருமான் சூர னோடு போரிட்ட போது சூரனது சேனைகள் அழிக்கப்படும் போதெல்லாம் மீண்டும் மீண்டும் தோன்றின. முருகன் தன் அண் ணனை வேண்டினர். சூரன் தாய் மேலும் மேலும் அசுரர்களை ஈன்று கொண்டிருந்ததைக் கண்ட விநாயகர் தம் துதிக்கையால் அவளது கருப்பாதையைச் சாத்தி விட்டார். அதன் பின்னர் தான் முருகனல் சூரனை வெல்ல முடிந்தது''.

## 3. சித்தி விநாயகர்

குடைவரை வாயிலில் இறங்கியதும் இடப்புறம் திரும்பினால் தொலைவில் இவர் திருவுருவைக் காணலாம். இவரைக் கன்னிமூலை கணபதியாக வழிபடுகின்றனர்.

## 4. கரிய மாணிக்கப் பிள்ளையார்

இவர் மகா மண்டபத்தில் பார்வதியம்மனுக்கும் வீரபாகுதேவருக்கும் இடையே காட்சி தருகிறார். இவருக்கு இப்பெயர் வந்ததற்கான காரணம் புலப்படவில்லை. சிறப்பு நாட்களில் வெள்ளியங்கி யணிந்து காட்சி தருகிறார்.

## 5. கொடிமரத்தடி விநாயகர்

இவரைக் 'கம்பத்தடி விநாயகர்' என்பர். செப்புக்கொடி மரத்தருகே காட்சி தருகிறார். இவரைச் சாட்சியாக வைத்து இவர் முன் இத் திருக்கோயிலாரால் இலவசத் திருமணங்கள் நடத்தப் பெறுகின்றன.

## மூலவர் (பாலசுப்பிரமணியர்)

வரகுணபாண்டியனின் கல்வெட்டு இவரைச் சுப்பிரமணிய படாரர் எனக் குறிப்பிடுகிறது, இவரே இக்கோயிலின் சிறப்பு மூர்த்தி, தவக்கோலத்தில் சடைமுடி தரித்து 'கடற்கரையாண்டி யாகக் காட்சி தருகிறார். கருவறையில் கிழக்கு நோக்கி நின்று அருள் வழங்கும் இவர் நான்கடி உயரமுள்ளார். இவரது அழகைக் காண 'நாலாயிரம் கண் படைத்திலனே அந்த நான்முகனே' என அன்பர் உள்ளம் நெகிழ்வர்

## அமைப்பு

மூலவர் ஒரு திருமுகமும் நான்கு கைகளும் கொண்டு திகழ்கிறார். நான்கு கைகளின் தோற்றம் :

வலக்கை (மேல்) - சக்தி வேல் ஏந்திய நிலை
வலக்கை (கீழ்) - வரத முத்திரை போன்ற அமைப்பு
உள்ளங்கையில் - தாமரைப் பூ தாங்கிய நிலை.
இடக்கை (மேல்) - செபமாலை ஏந்திய நிலை
இடக்கை (கீழ்) - இடுப்பில் வைத்த நிலை

தவக்கோலத்திலிருப்பதால் இருபுறங்களிலும் தேவியர் சிலைகள் இல்லை. வலத்திருவடியின் அருகில் வெள்ளிச்சீபலியும் இடத்திருவடியின் அருகில் தங்கச்சீபலியும் காட்சி தருகின்றன. சிங்கமுகனைவென்ற குலிசப்படை கொண்டு விளங்குகிறார். வேலும் சிலநேரங்களில் சாத்தப்படுகிறது.

இவருக்குப் பின்புறமுள்ள சுவரில் இவருக்கு இடப்புறம் மாடக்குழியொன்றில் செகந்நாதர் (சிறியலிங்கம்) காட்சி தருகிறார். செகந்நாதரை வழிபடும் நிலையிலேயே மூலவர் அமைக்கப்பட்டுள்ளார். மூலவருக்குப் பின்புறமுள்ள சுவரில் வலப்புறம் கயலட்சுமி காட்சி தருகிறார்.

### காலம்

இப்பொழுது நாம் வழிபடும் மூலவர் திருவுருவம் கொல்லம் 1084 ஆம் ஆண்டில் (கி. பி. 1909) அமைக்கப்பட்டதாகும்.[4]

கி. பி. 1909 இல் வண்ணார்பேட்டையைச் சேர்ந்த ஆறுமுகம் என்பவர் தம் வயிற்றுநோவு தீர்வதற்காகக் கடற்கரையாண்டியின் முன் தவம் கிடந்தார். பல நாட்களாகியும் நோவு தீராமை கண்டு ஆத்திரம் கொண்டு கருவறையில் நுழைந்து முன்பிருந்த சுப்பிரமணியர் சிலையைக் கட்டிப்பிடித்து இழுத்தார். அச்சிலை விழுந்து இரண்டு துண்டுகளாயிற்று. பழுதுபட்ட சிலையை வள்ளியம்மன் கோயிலுக்கும் வேள்விக்கூடத்திற்கும் இடையே சுருங்கை அமைத்து வைத்துள்ளனர் என்கிறார்' திரு வென்றிமாலை.

கி. பி. 1909 ஆம் ஆண்டிற்கு முன்பிருந்த சிலை கி. பி. 1648 ஆம் ஆண்டிற்கும் கி.பி. 1653 ஆம் ஆண்டிற்கும் இடையில் செய்யப்பெற்றது. திருநெல்வேலியைச்சார்ந்த குறுக்குத்துறையிலிருந்து கல்லெடுத்துஅச்சிலையை வட மலையப்ப பிள்ளையன் செய்துவைத்தார் என்பார் திருமுருக கிருபானந்தவாரியார். கி.பி. 1648 ஆம் ஆண்டில் உலாந்தர்கள் அதற்கு முன்பிருந்த சிலையை உடைத்து விட்டனர்.

வீரசெந்திக்காத்தான் செட்டி என்னும் குறுநில மன்னர் கி.பி. 1648இல் மூலவர் சிலையை அமைத்ததாகக் குலசேகரன்பட்டினத்து ஏடு இயம்புகிறது [5]

### திருவுருவ அமைப்பு

இவ்வூரில் திகழும் மூலவர் திருவுருவ அமைப்பு ஏனைய முருகன் கோயில்களில் காணப்படாத தனி அமைப்பினைக் கொண்டது. நான்கு கைகளைக் கொண்ட சுப்பிரமணிய மூர்த்திகளின் ஏழு வகைகளைக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார் திரு. ச. தண்டபாணி தேசிகர்.[6]

| எண் | வலக்கைகள் | | இடக்கைகள் | |
|---|---|---|---|---|
| | 1 | 2 | 1 | 2 |
| 1 | அபயம் | சக்தி | வரதம் | வச்சிரம் |
| 2 | அபயம் | அட்சமாலை | வரதம் | கமண்டலம் |
| 3 | அபயம் | அட்சமாலை | இடுப்பில்கை | கமண்டலம் |
| 4 | அபயம் | சக்தி | இடுப்பில் கை | குக்குடம் |
| 5 | அபயம் | சக்தி | இடுப்பில் கை | கமண்டலம் |
| 6 | அபயம் | சக்தி | அட்சமாலை | குக்குடம் |
| 7 | கட்கம் | சக்தி | கேடகம் | குக்குடம் |

திருச்செந்தூர் மூலவர் திருவுருவம் மேற்கண்ட அமைப்புகளுள் அடங்கவில்லையே எனத் திரு. ச. தண்டபாணி தேசிகரிடம் வினவிய போது, "தாம் கண்ட அமைப்புகளையே வகைப்படுத்திக் காட்டியுள்ளதாகவும், திருச்செந்தூர் மூலவர் தம் தந்தையை வழிபடும் நிலையில் உள்ளதால் வலக்கை வரத முத்திரையோடு தாமரைப் பூவையும் தாங்கியுள்ளது" என்றார்.

அடுத்து, டி. ஏ. கோபிநாதராவ், சுப்பிரமணியருக்கு ஏழு வகை அமைப்புகளை விவரிக்கிறார். அவை வருமாறு:[7]

| எண் | வலக்கைகள் | | இடக்கைகள் | |
|---|---|---|---|---|
| | 1 | 2 | 1 | 2 |
| 1 | அபயம் | சக்தி | வரதம் | வச்சிரம் |
| 2 | அபயம் | அட்சமாலை | வரதம் | கமண்டலம் |
| 3 | அபயம் | அட்சமாலை | இடுப்பில் கை | கமண்டலம் |
| 4 | அபயம் | சக்தி | இடுப்பில் கை | குக்குடம் |
| 5 | அபயம் | சக்தி | அட்சமாலை | குக்குடம் |
| 6 | அபயம் | சக்தி | கட்கம் | கமண்டலம் |
| 7 | கட்கம் | சக்தி | கேடகம் | குக்குடம் |

மேற்கண்ட பட்டியலிலும் திருச்செந்தூர் மூலவர் சிலையமைப்பு அடங்கவில்லை. வலக்கைகளில் கீழுள்ள கை அபயகரமாக அமையாது வரதகரமாக அமைந்து தாமரைப் பூவினைத் தாங்கியுள்ளது தனி அமைப்பாகும்.

பழநி கீழ்த்திசைப் பண்பாட்டுக் கல்லூரி மாணவர் திருச்செந்தூர்த் தூண்சிற்பமொன்றைப் படம் பிடித்து வலக்கைகளில் கீழுள்ளதை அபயகரமாகக் காட்டி மேற்கண்ட பட்டியலில் அடக்க முயன்றுள்ளார்.[8] (நி. ப. எண். 6)

இனி, மூலவரின் தனி அமைப்புக்குரிய காரணங்களை ஆராய்வோம்.

### போதி சத்துவரா?

''சக்தி ஆயுதத்தைத் தாமரை மொட்டு எனவும் செபமாலை ஏந்திய காரணத்தினால் இது (மூலவர் திருவுருவம்) போதி சத்துவர் திருவுருவம் என்று கூறுவாரும் உளர் என்கிறார் ம. அ. முருகேசன்.[9] காவிரிப்பூம்பட்டின மைத்திரேய போதி சத்துவர் படம் இடுப்பில் கையையும், வலக்கை ஏந்திய நிலையிலும் உள்ளது என்கிறார் ஜே. எம். சோம சுந்தரம்[10].

சிலையமைப்பவர்கள் தியான சுலோகங்களையும் புராண வரலாறுகளையும் அடிப்படையாகக் கொண்டே சிலை வடிப்பர். சுப்பிரமணியர் சிலையமைப்புப் பற்றித் தியான சுலோகங்கள் கூறுவதைக் காண்போம்.

### சாசியப சில்ப சாஸ்திரம

சுப்பிரமணியர் இலக்கணம் பற்றி ''நான்கு கைகளுடன் இருந்தால் வலக்கைகளில் அபயமும் சக்தியும் இடக்கைகளில் கோழியும் மாலையுமிருப்பதாகும்'' எனக் கூறுகிறார் காசியபர்[11].

### சிற்ப ரத்தினம்

''சக்தி (வேல்) அபயதான முத்திரை இவற்றை இருகைகளில் தரித்திருப்பவர்'' என்றும், வேறு என்னும் தலைப்பில் ''இரண்டு கைகளிலும் முறையே சக்தி வேல்) யையும் வச்சிராயுதத்தையும் தரித்தவர் அல்லது இடக்கையை இடுப்பில் வைத்து (வலக்கையை) வரதான முத்திரையைத் தரித்திருப்பவர்''[12] என்றும் சிற்ப ரத்தினம் செப்புகிறது.

சிற்ப ரத்தினம் வேறு என்னும் தலைப்பில் கூறுவது திருச்செந்தூர் மூலவருக்கு ஓரளவு பொருந்தியுள்ளது. இடக்கையை இடுப்பில் வைத்துள்ளார். வலக்கை வரதான முத்திரையிலுள்ளது. ஆயினும் வரதான முத்திரை கொண்ட கையில் தாமரைப் பூ உள்ளது. அதற்கான காரணத்தை ஆராய்வோம்.

### கந்த புராணச் செய்தி

சூரனை வென்ற பின் செந்தூர் மீண்ட கந்தவேள் தேவ தச்சனைக் கொண்டு கோயிலமைத்துச் சிவபெருமானையும் வருவித்தார். தம் தந்தைக்குப் பஞ்ச கவ்வியம், சந்தனம், மாமலர், திருமஞ்சனம், பால், துகில், மணிவிளக்கு, தூபம், முதலியவற்றை எடுத்துத் தேவர்கள் தந்திட முருகன் ஆகம முறைப்படி அகம் நிறை காதலால் வழிபாடு செய்தார். இது கந்தபுராணத்திலுள்ளது[13].

இதைப் போன்றதொரு சிலையமைப்பு கேரளாவில் ஊரில் இருப்பதாகக் கூறுகின்றனர்.

## குலிசப் படை

இங்குள்ள மூலவருக்கு வேற்படையோடு குலிசப்படையும் சாத்தப்படுகிறது. இதற்கும் கந்தபுராணச் செய்தியே பதில் தரு கிறது.

சிங்கமுகாசுரன் செவ்வேளை நோக்கிப், ''பாலனே, நீ பகைவர் களை வேலினால் எறியவும் வில்லை வளைத்து அம்பினாலடிக்கவும் மட்டுமே கற்றிருக்கிறாய். வேறு படைகள் பயின்றதில்லையோ''? என வினவிக் கதையை எறிந்தான். முருகன் தன் கையிலுள்ள குலி சத்தை எறிந்து அவனை மாய்த்தார். இந்நிகழ்ச்சியை நினை வூட்டவே குலிசப்படை சாத்தப்படுகிறது[14].

எனவே, மூலவர் சிலையமைப்பிற்குத் தியான சுலோகங்களும் கந்தபுராணச் செய்திகளும் துணைச் செய்துள்ளமை புலனாகும்.

## செகந்நாதர்

இத்திருக்கோயில் சொத்து விவரப் பதிவேட்டில் இரண்டிடங் களில் இப்பெயர் காணப்படுகிறது. ஆனால் மூன்று செகந்நாதர் இருப்பதாகத் திரு சி. ச. மகாராசபட்டர் கூறுகிறார். மூலவருக்கு இடப்புறம் உள்ள செகந்நாதர் உட்குழிந்த யோனி லிங்கமாகும். இவரைச் 'சூரிய லிங்கம்' என்பர். அடுத்து, செந்தில் நாயகர் அறை யிலுள்ள மாடக் குழியில் உள்ள லிங்கம் 'சோம நாதராகும்' இவரைச் 'சந்திர லிங்கம்' என்பர். இவருக்கு எதிரேயுள்ள மாடத் தில் மூளைப் பாலிகைகள் வைக்கப்படும். ஆறுமுகப் பெருமானுக்கு வலப்புறம் உள்ள மாடக் குழியில் அமைந்துள்ள லிங்கம் 'ஆன்ம லிங்க'மாகும். பஞ்சலிங்கங்களையும் சேர்த்து மகாமண்டபத்தில் எட்டு லிங்கங்கள் உள்ளன. இறைவன் பஞ்ச பூதங்களாகவும், ஞாயிறு, திங்கள், உயிர்களாகவும் விளங்கும் தத்துவத்தை இவை குறிக்குமென்பர்.

மூலவருக்கு இடப்புறமுள்ள செகந்நாதருக்கு ஒத்தக்கட்டளை தவிர ஏனைய திருக்காலங்களில் பூசை நடைபெறுகிறது. ஆறுமுகப் பெருமானருகிலுள்ள ஆன்மலிங்கத்திற்குச் சாயரட்சையில் மட்டும் பூசை நடைபெறுகிறது.

## வீரபாகு

மூலவருக்கு முன்புறமுள்ள மணியடியின் வாயிலில் வலப்புறம் வீரபாகு தேவர் திருவுருவம் நிற்கும் நிலையில் அமைக்கப்பட்டுள் ளது.

இவர், நவமணிகளில் மாணிக்கவல்லியிடம் தோன்றியவர். சூரபன்மனிடம் தூது சென்றவரும் இவரே. இவருக்காக முருகன் விசுவரூப தரிசனம் அருளியதாகத் தலபுராணம் கூறுகிறது[15] இவருக்குப் பூக்களாலாகிய அங்கிசாத்திப் பிட்டமுது படைத்து வழிபடுவோர் எண்ணியதைத் திண்ணமாய் அடைவர் என்பது இவ் வட்டாரத்து மக்கள் நம்பிக்கை.

## வீரமகேந்திரர்

இவர் திருவுருவம் மணியடி வாயிலின் இடப்புறம் நிற்கும் நிலையில் அமைக்கப்பட்டுள்ளது. நவவீரர்களில் புட்பராகவல்லியிடம் பிறந்தவர் இவர்.

## நந்தீசுவரர்

மூலவருக்குப் பின்புறம் செகந்நாதர் என்னும் சிவலிங்கமிருப்பதால் அவருக்குரிய நந்தி, மூலவர்திருமுன் மயில்சிலைகளையொட்டி அமைக்கப்பட்டுள்ளது. நந்தீஸ்வரர் இருப்பதால் இது முன்பு சிவன் கோயிலாக இருந்ததுண்டு என்பர் சிவசூரிய நாராயணன்.[16]

## மயில்

மயில் என்று சொத்து விவரப் பதிவேட்டில் ஒருமையில் குறிக்கப்பட்டுள்ள போதிலும் மூலவர்முன் இருமயில்கள் உள்ளன. சூரன் மயிலாகி முருகனைச் சுமக்குமுன் தேவேந்திரன் மயிலாகி முருகனைச் சுமந்தான் எனக் கந்தபுராணம் கூறுகிறது.[17] இரண்டு மயில்களில் அணிகலன்கள் பூட்டப்பெற்ற மயில் இந்திரன் எனவும் ஏனைய மயில் சூரன் என்றும் கூறுகிறார் திரு கிருட்டின பாகவதர்.

ஆறுமுகப்பெருமான் முன் ஒரு மயில் இருந்ததென்றும் அஃது உருகு சட்ட சேவை (விளக்கம் திருவிழாப் பகுதியிலுள்ளது) க்கு இடையூறாக இருந்தமையால் மூலவர் முன் வைக்கம்பட்டுள்ளது. என்றும் சங்கரநாரயண தீட்சிதர் கூறினார். ஆறுமுகப் பெருமான் முன்புள்ள பீடத்தைப் 'போகர் சமாதி' எனக் கருதி பத்து ஆண்டுகளுக்குமுன் வேலியமைத்து விளக்கேற்றி வழிபட்டனர். வியாழ பகவான் இப்பீடத்திலமர்ந்துதான் ஆறுமுகப் பெருமானுக்கு சூரபன்மன் வரலாறு கூறினார் என்கிறார் திரு. மு. ப.

## பஞ்சலிங்கம்

மணியடியில் வீரமகேந்திரருக்கு இடப்புறம் ஒருவாயில் உள்ளது. அதன் வழியே பாம்பறையின் (மூலவரை இடப்புறமாகச் சுற்றிச்செல்லும் வழ்) வழியாகச் சென்றால் மூலவருக்கு வலப்புறம் ஒரு குகையில் ஒரே பீடத்தில் ஐந்து லிங்கங்களைக் காணலாம். இந்த லிங்கங்களை முருகப் பெருமானே பூசிப்பதால் இவற்றிற்கு மானிடர் பூசையில்லை.

இதைப் பற்றிய நாடோடிக் கதை வருமாறு:

குலசேகரன்பட்டினத்தையாண்ட குறுநிலமன்னன்வீரசெந்திக் காத்தான் செட்டி வீட்டுக் காராம்பசு சீவசங்க வருடம் 4849 இல் ஆவணி மாதம் இரவில் நாழிகை 23க்கு மேல் கட்டுக் கயிறை அறுத்துக்கொண்டு வெளியே சென்றது. காலையில் 7 மணிக்குத் திரும்பி வந்தது. பசுவில் பால் கறக்கும் போது பால் கறவை யில்லை. அடுத்தநாள் இரும்புச் சங்கிலியில் பசுவைக் கட்டினான். அன்றிரவில் இரும்புச் சங்கிலியையும் அறுத்துக் கொண்டு போய்விட்டது. இதையறிந்த வீரசெந்திக்காத்தான் செட்டி மறுநாள் வேலையாட்களை ஏவிப்பசு எங்குச் செல்கிறது எனப் பார்க்கச் சொன்னார். வேலையாட்கள் பசு வெகுதூரம் சென்று கற்றாழைக் காட்டுக்குள் நுழைந்து விட்டது என்றனர். அடுத்த நாள் கற்றாழைகளை வெட்டிப் பல்லக்கில் ஏறி பசு சென்ற வழியே சென்றார். திருச்செந்தூர் சந்தனார்மலை அடித்துவாரத்தில் பஞ்ச லிங்கத்திற்குப் பால் சொரிவதைக் கண்டார். செட்டி புரட்டாசி மாதம் அனுடநாளில் பஞ்சலிங்கத்திற்கு ஆலயம் கட்டினார். இச்செய்தி குலசேகரன் பட்டினத்து ஏட்டில் உள்ளது.[18] கரிய மாணிக்கப் பிள்ளையார் முன்புள்ள தூணில் ஒரு பசு லிங்கத்திற்குப் பால் சொரியும் காட்சி செதுக்கப் பட்டுள்ளது.

## வள்ளியம்மன்

முதல் சுற்றலையில் வேள்விக்கூடத்திற்குத் தென்புறம் வள்ளி யம்மன் கோயிலுள்ளது. கி. பி. 1686 குரோதன ஆண்டு ஆவணித் திங்கள் இரண்டாம் நாள் நாச்சிமார் பிரதிட்டை நடைபெற்றது என்கிறது மு. ப. குறிப்பு.

வள்ளியம்மை திருவுருவம் ஏறத்தாழ மூன்றடி உயரமுள்ளது. இடக்கையில் தாமரைப் பூவினை ஏந்திய நிலையில் நிற்கிறார். முருகனின் வலக்கண் ஞாயிறு. எனவே ஞாயிற்றைக் கண்டு மலரும் தாமரையைத் தாங்கி வலப்புறம் நிற்கிறார் என்பர்.

## தெய்வயானை

வேள்விக்கூடத்தின் வடபுறம் தெய்வயானையம்மன் கோயிலுள் ளது. இச்சிலையும் வள்ளியம்மன் சிலையளவே அமைந்துள்ளது. இத்திருவுருவம் வலக்கையில் குமுதமலரைப் பிடித்த நிலையில் உள்ளது. முருகனது இடக்கண் திங்கள். எனவே' திங்களைக் கண்டு மலரும் குமுதத்தை அமைத்துள்ளனர் என்பர்.

## தக்கிணாமூர்த்தி

தக்கிணாமூர்த்தி திருவுருவங்கள் இக்கோயிலில் இரண்டிடங்களில் உள்ளன. வள்ளியம்மன் கோயிலருகேயுள்ள திருவுருவமே சிறப்பாக வழிபடப் பெறுகிறது. இரண்டாம் சுற்றாலையில் உள்ள திருவுருவம் திருப்பணி செய்த ஆறுமுக சுவாமிகளால் அமைக்கப் பட்டதென்பர்.

## அறுபத்துமூவர்

வள்ளியம்மன் கோயிலுக்கு வலப்புறம் அறுபத்துமூவர் சிலைகள் அமைக்கப் பெற்றுள்ளன. இக்குகைக் கோயில் சிவன் கோயிலாக இருந்தது என்பதை இவை நினைவூட்டுகின்றன என்பர். ஏனைய முருகன் கோயில்களில் இல்லாத அமைப்பு இது.

## நாகப்பன் முதலியோர்

வள்ளியம்மன் கோயிலுக்குப் பின்புறம் நாகப்பன் சிவன் நந்தி விநாயகர்' அம்பாள், காசிவிசுவநாதர், விசாலாட்சி, சங்கர நாராயணர், நந்தீசுவரர், வேதபுரீசுவரர், வாதபுரீசுவரர், நாக நாதேசுவரர் ஆகிய திருவுருவங்கள் உள. பெருஞ்சிறப்புடைய தேவர்கட்கு ஒரு பெரிய கோயிலில் இடம் ஒதுக்குதல் ஏனைய முருகன் கோயில்களிலும் காணப்படுகிறது.

## பாலசுப்பிரமணியர்

வேள்விக்கூடத்திற்கு எதிரேயுள்ள சுவரில் இத்திருவுருவம் அமைக்கப் பெற்றுள்ளது. கோட்ட தேவதையாக பாலசுப்பிர மணியரை அமைக்கும் வழக்கம் உண்டு என்பர். திரு. ச. தண்ட பாணி தேசிகர். மூலவர் போன்ற அமைப்பில் ஏறத்தாழ 2 அடி உயரமுடையவராய்ச் செதுக்கியுள்ளனர்.

## மயூரநாதர்

இத்திருவுருவம் முதற் சுற்றாலையில் வடபுறமுள்ளது. இவருப் கோட்ட தேவதைகளுள் ஒருவரே. கீழே மயிலுருவம் விளங்குவ தால் 'மயூரநாதர்' எனப் பெயர் பெற்றுள்ளார்.

## சண்டிகேசுவரர்

பொதுவாகச் சிவன் கோயில்களில் மட்டுமே இவரது திரு வுருவை அமைப்பர். முருகனுக்குச் சாத்திக்கழித்த பூமாலைகளை இவருக்கு அணிவிப்பர். 'சாத்திக்கழித்தது சண்டேசுவரருக்கு' என்பது இவ்வட்டார வழக்கு.

இவர் உருத்திரமூர்த்தியின் கோபாக்கினியில் உதித்தவர் பயங்கரமுடையவர். இடப வாகனமுடைபவர். இவர் சண்டீ

நாயனார் அல்லர். இவர் முன் கைகளைத் தட்டி வழிபாடு செய்கின்றனர். இவர் யோகி என்றும் இவரது யோகத்தைக் கலைப்பதற்காகக் கை தட்டுகிறோம் என்றும் கூறுதல் தவறு. வழிபாட்டில் முத்திரை காட்டுதல் உண்டு. அத்திர மந்திரம் சொல்லித் தாளத்திரயம் (இடது உள்ளங்கையில் வலது கை விரல்களால் தட்டுதல்) செய்யும் முத்திரையே கைதட்டுதலாகக் கருதப் படுகிறது.[19] இவரைக் கோயில் கணக்கர் என்றும் ஆலயச் சொத்தில் எதையும் எடுத்துச் செல்லவில்லை என்பதைக் காட்டவே கை தட்டுகிறோம். என்கிறார் டாக்டர் முத்துச்சண்முகனார். கோயிலுக்குக் கொண்டு செல்லும் எண்ணெய், திரி முதலியவற்றை இவர் முன் வைத்தல் வழக்கம். ஆடையின் நூலை இவர் முன் போடுதல் தவறு.

### சனீசுவரர்

நடராசப் பெருமானுக்கும் பைரவருக்கும் இடையே அமைக்கப்பட்டுள்ளார். காக்கை வாகனத்தில் காட்சி தருகிறார். நவக்கிரகங்களுக்குச் சிலைகள் இல்லாத இக்கோயிலில் இச்சிலை மட்டும் பிற்காலத்தில் இடம் பெற்றுவிட்டது.

### பைரவர்

கி. பி. 1803-ஆம் ஆண்டில் இவர் பிரதிட்டை செய்யப்பட்டதாகத் திரு. மு. ப. குறிப்பு கூறுகிறது. நாய் வாகனத்தில் காட்சி தருகிறார். இவரே கோயிலின் காவலர். 'சேத்திரபாலர்' என்றும் அழைக்கப்படுகிறார். இரவில் கோயில் திறவுகோல் இவரிடமே ஒப்படைக்கப்படும். காலையில் அங்குச முத்திரையால் முத்திரைக்கோலைப் பட்டர் பெற்றுக் கொள்ளவேண்டும். பைரவர் கோயிலிலுள்ள தீபத்திலிருந்து வேறொரு தீபம் ஏற்றி அவ்வக்கினியைக் கொண்டுதான் மடைப்பள்ளி அடுப்பைப் பற்றவைக்க வேண்டும். அப்போது அகோரமந்திரம், வக்திரமந்திரம் கூறுவோம் என்கிறார் திரு. மு. ப.

### பலிபீடம்

மூலவர் திருமுன் தங்கக்கொடி மரத்தருகில் அமைந்துள்ளது, பலிபீடம் மனிதன் தன் இச்சைகளாகிய விலங்குகளைப் பலி கொடுக்குமிடமென்பர் அ. சொக்கலிங்கம்.[20]

### அருணகிரி நாதர்

இவரது திருவுருவம் மேலக் கோபுர வாசல் விநாயகருக்கு எதிரே அமைக்கப்பட்டுள்ளது. இவர் திருச்செந்தூர் முருகனைக் குறித்து எண்பத்து மூன்று திருப்புகழ்ப் பாக்கள் பாடியுள்ளார்.

## (ஆ) விடுபட்ட சிலைகள்

சொத்து விவரப் பதிவேட்டில் பதிவு பெறாத சிலைகள் சில வழிபடப் பெறுகின்றன. அவை வேங்கடாசலப் பெருமாள் கோயிலிலுள்ளன. இவற்றைச் சுற்றுக் கோயில்களில் அடக்கியிருக்கலாம்.

### வேங்கடாசலப் பெருமாள்

நின்ற கோலத்தில் காட்சி தரும் வேங்கடாசலப் பெருமாள் இடக்கையை இடுப்பில் வைத்து மருகனைப்போலவே காட்சி தருகிறார். வலக்கைகளில் கீழுள்ள கை வரதமுத்திரை தரித்துள்ளது. உள்ளங் கையில் சக்கரப் படை தாங்கி நிற்கிறார். முருகனுக்குப் படைக்கலம் அருளும் நிலை இதுவென திரு. ஆதிமூல ஐயங்கார் கூறுகிறார். தம் மருகனின் விசுவ ரூபக் காட்சி காண நாரதரோடு இங்கு எழுந்தருளியதாகத் தல புராணம் கூறுகிறது.

### மகப் பேறு அருளும் கண்ணன்

இவர், சந்தான கிருஷ்ணன் என்று அழைக்கப் பெறுகிறார். பட்டர்புரம் பண்ணையார் திரு. திருவேங்கடம் பிள்ளை பிள்ளைப் பேறு வேண்டி இச்சிலையை அமைத்து உதவினார் என்கிறார் திரு. ஆதிமூல ஐயங்கார். நாகம் குடை பிடிக்கும் சிறிய சிலை இது

### கய லக்குமி

இரு புறங்களிலும் யானைகள் குடத்து நீரைக் கொட்டி நிற்க இடையே திருமகள் செந்தாமரையில் வீற்றிருக்கும் தோற்றத்தில் காட்சி தருகிறார். பாண்டியர் காலத்துக் குடைவரைச் சிற்பம் இது.

### அரங்க நாதர்

சிதம்பரத்தில் தில்லைக் கோவிந்தர் கிடந்த கோலம் தருவது போல இங்குள்ள அரங்க நாதர் 'செந்தில் கோவிந்தர்' என்றே அழைக்கப் பெற்றார். கய லக்குமியை யடுத்து அரங்க நாதர் கிடந்த கோலத்தில் காட்சி தருகிறார். அவர் கால் அருகில் சீதேவி, பூதேவி அமர்ந்துள்ளனர். இவர் கொப்பூழ்க் கொடியிலிருந்து எழுந்த தாமரை மலரில் பிரமன்காட்சி தருகிறார். மணற் குன்றில் இத்தகைய சிற்பங்கள் அமைத்ததிறம் வியத்தற் குரியது. இன்று சிமிண்டால் பூசப்பட்டுள்ளன.

## (இ) மறைந்த சிலைகள்

### எருமையின் சிலை

இக்கோயிலில் ஒரு காலத்தில் வழிபாடு செய்யப்பட்டு பின் மறைந்த சிலைகள் பற்றிக் காண்போம். ஒரு காலத்தில் திருச்செந்தூர்க் கொடி மரம் இற்று விழுந்ததைக் கேட்டு அன்பர்கள் வருந்

தினர். அப்போது ஓர் எருமை கடலில் சென்று அங்கே மிதந்த சந்தன மரத்தினை முட்டித் தள்ளிக் கொண்டு கரை சேர்த்தது. இவ்வருஞ்செயல் புரிந்த எருமைக்குச் சிலை வைத்து வழிபாடு செய்து வந்தனர். இச்செய்தி திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழில் இடம் பெற்றுள்ளது[21]. இவ்வெருமையின் சிலை இன்று காணப்பட்டிலது. கோயில் திருப்பணி செய்த காலத்தில் மறைந் திருக்கலாம்.

## நக்கீரர் சிலை

நக்கீரரைக் கன்முகி என்னும் பூதம் சிறை வைத்த இடம் திருச் செந்தூர் என்று டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை கூறியதாகத் திரு. கிருட்டின பாகவதர் கூறுகிறார். ஆறு படை வீடுகளிலுமுள்ள முரு கனைப் பாடியும் நக்கீரருக்கு விடுதலை கிடைக்கவில்லை. 'உன்னையொ ழிய ஒருவரையும் நம்புகிலேன்' என்று திருச்செந்தூர் முருகனைப் பாடிய பின்பே விடுதலை கிடைத்தது. இக்கோயிலிலிருந்த நக்கீரர் சிலைக்கு வழிபாடு நடைபெற்று வந்த செய்தியை இங்குள்ள கல் வெட்டு ஒன்றினால் அறிகிறோம்[22].

## உலோகச் சிலைகள்

இத்திருக் கோயிலின் சொத்து விவரப் பதிவேடு குறிப்பிடும் உலோகச் சிலைகளின் எண்ணிக்கை நாற்பத்து மூன்றாகும். இச்சிலை களில் பெரும்பாலானவை திருவிழாக் காலத்தில் எழுந்தருளும் மூர்த்திகளே ஆகும்.

## சீபலி நாதர்கள்

நாள் விழாவில் கோயிலிலுள்ள ஆவரண தேவதைகட்குப் பலியுணவு வழங்கும் இறைவனது பிரதி பிம்பம் சீபலி எனப்படும். இக்கோயிலில் நாள் வழிபாட்டில் தங்கச் சீபலி, வெள்ளிச் சீபலி கள் எந்ழுதருளுகின்றன. திருவிழாக் காலத்தில் ஊரிலுள்ள சந்தித் தேவதைகட்குப் பலியுணவு வழங்கும் சீபலி செப்புச் சீபலி யாகும்.

## தங்கச் சீபலி

மூலவரின் இடத்திருவடி யினருகே வைக்கப்பட்டுள்ளது. மூலவரின் உருவத்தைக் கொண்டது. இத்திருமேனி நாள்வழி பாட்டில் உச்சிக் கால தீபாராதனைக்குப் பின்னும் இரவு ஏகாந்த தீபாராதனைக்குப் பின்னும் எழுந்தருளிப் பலி வழங்குகிறார். இதன் எடை 403 — 10 — 0 தோலாவாகும். இப்பொற் சிலையைக் கேரள மன்னர் மார்த்தாண்டவர்மா (கி. பி. 1729 — 58) இக் கோயிலுக்கு வழங்கினார் என்ப[23]; உயரம் ஏறத்தாழ ஒன்றரையடி.

## வெள்ளிச் சீபலி

இது மூலவரின் வலத்திருவடி யினருகே வைக்கப்பட்டுள்ளது. இவ்வுருவம் மூலவர் உருவத்தைக் கொண்டதே. ஒத்தக் கட்டளை என்னும் திருக் காலத்தின் பின் நாள் வழிபாட்டில் பலி வழங்க எடுத்துச் செல்கின்றனர். இதன் எடை 332 தோலா, இதனைத் திருக்கோயில் நிர்வாகத்தினரே செய்து வைத்ததாகத் திரு. கண பதி சாஸ்திரி கூறுகிறார்[24]. உயரம் தங்கச் சீபலி அளவே.

## செப்புச் சீபலி

முன் குறிப்பிட்ட இரண்டு சீபலிகளும் போற்றிமாரால் கை யாளப்படுகின்றன. செப்புச் சீபலி திருவிழாக் காலங்களில் பட்டர் களால் கையாளப்படுகிறது. இதுவும் மூலவர் போன்ற அமைப் புடையது. உயரம் ஓரடி.

## பார்வதிஅம்பாள் (நி. ப. எண் 12)

இத்திருவுருவம் கரியமாணிக்கப் பிள்ளையாருக்கு வலப்புறம் உள்ளது. இஃது ஐம்பொன்னாலாகியது. இதன் தோற்றம் தெய்வயானையம்மை தோற்றம் போலுள்ளது. விநாயகருக்கு வலப்புறம் சக்திக்கு முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது.

## செந்தில்நாயகர் (நி. ப எண் 11)

இத்திருமேனியும் ஐம்பொன்னால் செய்யப்பட்டது. மூலவரின் தோற்றம் கொண்டு விளங்கும் இத்திருவுருவுக்கு வள்ளி தெய்வ யானை திருவுருவங்கள் உள்ளன. இவரைச் 'செயந்திநாதர்' என வழங்கு கின்றனர். கோயிலுள் நடைபெறும் விழாக்களில் இவரே எழுந் தருளுகிறார். திருவிழாக் காலத்தில் சந்திகளின் வழியே உலா வருவதால் 'சந்திச்சாமி' என்று பாமரரால் வழங்கப்ப டுகிறார். இவரே மூலவரின் பிரதிபிம்பமான எழுந்தருளும் மூர்த்தி.

## ஆறுமுகப்பெருமான்

இவரை, 'ஸ்ரீ சண்முகர்' எனச் சொத்து விவரப் பதிவேடு குறிப்பிடுகிறது. நக்கீரர், குமரகுருபரர், அருணகிரிநாதர் முதலி யோர் இவர் தோற்றத்தை வருணித்துப் பாடியுள்ளனர். இவரும் மூலவரே என்று கூறுமளவு தமக்கெனக் குமரவிடங்கர் என்ற எழுந்தருளும் மூர்த்தியையும் கொண்டு விளங்குகிறார். மூலவர் (பாலசுப்பிரமணியர்) தவக்கோலத்தில் காட்சிதர, இவரோ இரு புறம் பக்கநாச்சிமார் (வள்ளி, தெய்வயானை) விளங்க இல்லறக் கோலத்தில் செந்திலாண்டவனாகக் காட்சி தருகிறார். தெற்கு வாயில் வழியாக நுழையும்போதே இவர் திருவுருவைக்காணலாம்.

ஏறத்தாழ மூன்றடி உயரமுள்ளார். குமார தந்திரம்[25] கூறும் விதிகட்கு உட்பட்டு இத்திருமேனி அமைந்துள்ளது. பன்னிரண்டு கைகளையுடைய மூர்த்திகளின் ஆறு வகைகளைக் காண்போம்.

| எண் | வலக்கைகள் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 1 | சக்தி | பாணம் | கட்கம் | துவசம் | கதை | அபயம் |
| 2 | சக்தி | பாணம் | கட்கம் | சக்கரம் | பாசம் | நீட்டியகை |
| 3 | சக்தி | துவசம் | கட்கம் | சக்கரம் | பாசம் | அபயம் |
| 4 | சக்தி | துவசம் | கட்கம் | பதுமம் | அபயம் | பாணம் |
| 5 | சக்தி | வச்சிரம் | சக்கரம் | பாசம் | அங்குசம் | கதை |
| 6 | சக்தி | பாணம் | கட்கம் | அபயம் | தனுசு | கேடகம் |

| எண் | இடக்கரங்கள் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 1 | வச்சிரம் | தனுசு | கேடகம் | தாமரை | சூலம் | வரதம் |
| 2 | சக்கரம் | சங்கம் | குக்குடம் | தனுசு | தண்டம் | கலப்பை |
| 3 | வச்சிரம் | தனுசு | கேடகம் | குக்குடம் | அங்குசம் | வரதம் |
| 4 | வச்சிரம் | பாசம் | கேடகம் | கமண்டலம் | அங்குசம் | வரதம் |
| 5 | சூலம் | அபயம் | பதுமம் | தண்டம் | அங்குசம் | வரதம் |
| 6 | சூலம் | குக்குடம் | சக்கரம் | பாசம் | சங்கம் | வரதம் |

மேற்குறித்த பட்டியலில் மூன்றும்வகை திருச்செந்தூரிலுள்ள ஆறுமுகப் பெருமான் திருவுருவத்திற்குப் பெரிதும் ஒத்துள்ளது. ஆயினும் வலக்கரங்களில் இரண்டாம் கையில் துவசத்திற்குப்பதில் அம்பு இடம் பெற்றிருக்கிறது. இடக்கைகளில் (மூன்றும் வகை) இரண்டாம் கையிலுள்ள தனுசு (வில்) க்குப் பொருத்தமாக வலக்கைகளில் இரண்டாம் கையில் அம்பினை வடித்திருக்கலாம்.

இனி, இப்போதுள்ள திருவுருவம் நக்கீரர், குமரகுருபரர் கண்ட காட்சிகளிலிருந்து வேறுபட்டுள்ள விதத்தைக் காண்போம். பன்னிரண்டு கைகளிலுமுள்ள படைக்கலங்கள் வேறுபட்டுள்ளன.[26]

| கை | நக்கீரர் | குமரகுருபரர் | இன்றைய சிலை |
|---|---|---|---|
| 1 | ஐயர்க்கு ஏந்தியது | அமுதம் உதவியது | சக்தி |
| 2 | உக்கம் சேர்த்தியது | வாமமருங்கில் | அம்பு |
| 3 | குறங்கின்மிசை | குறங்கில் | கத்தி |
| 4 | அங்குசம் | அங்குசம் | சக்கரம் |

| | | | |
|---|---|---|---|
| 5 | கேடயம் | கேடயம் | பாசம் |
| 6 | வேல் | வேல் | அபயம் |
| 7 | மார்பில் | மார்பில் | வச்சிரம் |
| 8 | தார் | தொடையல் | வில் |
| 9 | கொடி | துடி | கேடகம் |
| 10 | மணி | மணி | குக்குடம் (சேவல்) |
| 11 | விசும்பில்துளி பொழிந்தது | மாரி பொழிந்தது | அங்குசம் |
| 12 | அரமகளிர்க்கு வதுவை சூட்டுவது | சூர்மகளிர் மேவக்குழைந்தது | வரதம் |

நக்கீரரும், குமரகுருபரரும் கண்ட திருச்சீரலைவாய் ஆறுமுகப் பெருமானது பன்னிரு கைகளில் மூன்று மட்டுமே படைக்கலங் களைத் தாங்கியுள்ளன. அவை யாவன: அங்குசம், கேடயம், வேல் (வாள்).

இன்று காணப்படும் திருமேனியில் ஒன்பது படைக்கலங்கள் காணப்படுகின்றன. குமரகுருபரர் காலத்திற்குப் பின் ஆறுமுகப் பெருமான் சிலைமாற்றப்பட்டிருக்கலாம் என ஊகிக்க இடமுள்ளது.

ஆறுமுகப் பெருமான் திருவுருவம் திருவனந்தபுரத்திலிருந்து திருச்செந்தூருக்குக் கொண்டுவரப் பெற்றதாகவும், திருச்செந்தூரி லிருந்து சேரநாட்டிற்குக் கடத்தப்பட்டதாகவும் கதைகள் வழங்கு கின்றன.

ஜே. எம். சோமசுந்தரம் கூறும் சுவையான கதையினைக் காண்போம்.[27]

அழகிய ஆறுமுகப் பெருமான் திருவுருவைக்கண்டு மயங்கிய மலையாள நாட்டினர் சில நூற்றாண்டுகட்குமுன் தங்கள் நாட்டிற்கு கடத்த எண்ணினர். நாகர்கோயிலருகேயுள்ள பறக்கையில் ஒரு கோயிலில் கொண்டுவைத்து வழிபாடு செய்தனர். திருச்செந்தூர்த் தீட்சிதர்கள் திரும்பக் கொண்டுவர முயன்றும் முடியவில்லை. திருச்செந்தூர் ஆறுவீட்டுப் பிள்ளைமார் பறக்கைச் செட்டியார் களோடு பேசி சிலையைத் திரும்பவும் திருச்செந்தூருக்குக் கொண்டு வரமுயன்றனர். ஆறுமுகப் பெருமானை ஒரு தொட்டிலில் கிடத்தி மேலே வேப்பங்குழைகளால் மூடினர். தடுத்த காவலரிடம் அம்மைநோய் கண்ட குழந்தையைத் தூக்கிச் செல்வதாக கூறினர்.

ஆனால் மலையாளிகள் இதைக் கண்டுபிடித்துத் துரத்தினர். செட்டிமார் தமது தேவதையான சுடலைமாடனை ஏவினர். மலையாளிகள் மறைந்தனர். சிலை திருச்செந்தூருக்குக் கொண்டு வரப் பெற்றது. திருச்செந்தூர் ஆவுடையார் குளக்கரையில் உதவி செய்த சுடலைமாடனை நிறுவி மக்கள் வழிபட்டு வருகின்றனர்.

திரு. வென்றிமாலை ஐயர் கூறிய கதை வருமாறு: திருவனந்தபுரத்திலிருந்து அறுமுகன் சிலையைத் திருச்செந்தூருக்குக் கொண்டு வரவிரும்பிய திரிசுதந்திரர் பறக்கைச் செட்டிமார் உதவி பெற்றுக் கொண்டு வந்தனர். இதன் நினைவாக இன்றும் ஏழாம் பெருவிழா வன்று அறுமுகன் எழுந்தருளும்போது பறக்கைச் செட்டிமார் சப்பரத்தின் ஒரு பகுதியைத் தம் தோளில் சுமக்கின்றனர்.

பறக்கைச் செட்டிமார் தோசையும் சிறு பருப்புக் கஞ்சியும் அறுமுகன் பூசைக்கு வழங்கினர். இன்றும் ஆறுமுகப் பெருமானின் உதயமார்த்தாண்ட நைவேத்தியத்தில் தோசையும் கஞ்சியும் இடம் பெறுகின்றன.

## அலைவாயுகந்த பெருமான் (நி. ப. எண் 10)

ஆதியில் அமைந்த மூலவரின் பிரதிபிம்பமான இவர் உருவம் ஐம்பொன்னாலானது. இவர் எழுந்தருளும் மூர்த்திகளுள் ஒருவர். தற்போதுள்ள மூலவரின் மாறுபட்ட அமைப்புடையவர். வலக் கைகளில் முன் கை அபயமுத்திரை தாங்கியுள்ளது. பின்கை சக்தி தாங்கியுள்ளது. இடக்கைகளில் முன்கை வரத முத்திரையும் பின் கை வச்சிரப்படையும் தாங்கியுள்ளன. கி. பி. 1648 ஆம் ஆண்டு உலாந்தர் உடைத்த மூலவரின் தோற்றம் இவர் போன்று அமைந் திருக்கலாம். மூலவருக்குப் பக்கம் நாச்சிமார் இல்லாதது போலவே இவருக்கும் பக்க நாச்சிமார்களில்லை. இவரைத் 'தோழன்சுவாமி' என அழைக்கின்றனர்.

கந்த புராண அடிப்படையில் இப்போதுள்ள மூலவர் சிலை புதிதாகச் செய்யப்பெற்ற பின்பே அலைவாயுகந்த பெருமான் சிலை உலாந்தரிடமிருந்து மீட்கப்பட்டிருக்கலாம். இவரது தோற்றம் மூலவர் சிலையிலிருந்து வேறுபட்டு விளங்கியதால் செயந்திநாதர் சிலை செய்யப்பட்டிருக்கலாம்.

அலைவாயுகந்த பெருமான் நவராத்திரி விழாவில் நாளொரு கோலம் கொள்கிறார். பரிவேட்டை, சிறுத்தொண்டர்நாள், தைப் புனர்பூசம், பூசம் ஆகிய நாட்களிலும் எழுந்தருளுகிறார்.

அருணகிரிநாதரது திருப்புகழ்ப் பாக்களில் இடம் பெற்றுள்ளார்.[28]

## குமரவிடங்கப்பெருமான் (நி ப. எண்கள் 13, 14)

இவரை, ஆறுமுகப்பெருமானின் பிரதிபிம்பம் எனலாம். இவரை 'வில்லேந்தியவேலன்' என அழைப்பாருமுளர்.[29] ஆறுமுகப் பெருமானின் படைக்கலங்களில் (இவ்வூரில் சிறப்பாக) இடம் பெற்றுள்ள வில்லும் அம்பும் இவர் திருவுருவில் தோன்றுகின்றன. வலக்கைகளில் முன்கை அம்பேந்திய தோற்றத்துடன் உள்ளது. பின்கை சக்தி வேலினைத் தாங்கியுள்ளது. இடக்கைகளில் முன்கை வில்லேந்திய தோற்றத்தில் உள்ளது. பின்கை வச்சிரப்படை தாங்கியுள்ளது.

வள்ளி, தெய்வயானையம்மை திருக்கல்யாணங்கட்கு எழுந்தருளுவதால் இவரை 'மாப்பிள்ளைச்சாமி' என்றழைக்கின்றனர்.

இத்திருவுருவம் கி. பி. 1653 ஆம் ஆண்டிற்குப் பின்னரே அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். முன்பிருந்த குமரவிடங்கர் சிலையை கி. பி. 1648 ஆம் ஆண்டில் கொள்ளையிட்ட உலாந்தர்கள் பூம்புகார்க் கடற்கரையில் போட்டுவிட்டனர். காவிரிப்பூம்பட்டினத்திற்கருகிலுள்ள சாய்க்காடு என்னுமூரில் அச்சிலை 'திருச்செந்திலாண்டவன் என்ற பெயரோடு இன்று விளங்குகிறது.[30] திருச்செந்தூரார் சிலையைத் திருப்பியளிக்குமாறு கேட்டனர். சாய்க்காட்டினர் தர மறுத்தனர். அதனால் புதிய குமரவிடங்கர் சிலை செய்யப்பெற்றது. இரண்டு சிலைகளில் சாய்க்க்காட்டுச் சிலை உயரத்தால் சற்றுப் பெரியது. இரண்டு திருவுருவங்களின் நிழற்படங்களும் ஒப்பீட்டுக்காகத் தரப்பெற்றுள்ளன.

## வள்ளியம்மன்

விழாக்காலங்களில் குமரவிடங்கர் சப்பரத்தின்பின் எழுந்தருளும் திருவுருவம் வள்ளியம்மன் கோவிலில் உள்ளது. ஏறத்தாழ இரண்டடி உயரமுள்ளது. வள்ளி திருமணம் நடைபெறும் பங்குனி உத்திரநாள் தொடங்கித் தெய்வயானை திருமணம் நடைபெறும் கந்தர் சட்டிக்கு மறுநாள்வரை இத்திருவுருவம் விழாக்காலத்து எழுந்தருளுதல் இக்கோயில் வழக்கம். ஆவணிப் பெருவிழாவில் எழுந்தருளுவார்.

## தெய்வயானையம்மை

இத்திருவுரு தெய்வயானை கோயிலில் உள்ளது. இத்திருவுருவும் இரண்டடி உயரமுடையதே. மாசிப் பெருவிழாவில் எழுந்தருளுவார். கந்தர் சட்டிக்கு மறுநாளிலிருந்து பங்குனி உத்திரம் வரை இக்கோயிலில் நடைபெறும் விழாக்களில் தெய்வயானை எழுந்தருளுதல் வழக்கம்.

## நடராசர் (நி: ப எண் 16)

ஏறத்தாழ நான்கடி உயரமுள்ளவர். கி. பி. 1653-ல் டச்சுக் கொள்ளையரிடமிருந்து திரும்பப் பெற்ற சிலைகளோடு வந்த திரு வுருவம்இது. வெள்ளியம்பலம் அமைத்து அதனுள்வைத்துள்ளனர். இவரது பீடத்தில் 'திருநள்ளாறு' என்று எழுதப்பட்டிருப்பதாகக் குறிப்பிடுகிறார் ஜே. எம். சோமசுந்தரம்.[31] இவரருகே சிவகாமி யம்மன், மணிவாசகர், காரைக்காலம்மையார் திருவுருவங்கள் உள்ளன. சிலர் 'கண்டிநடராசர்' என்பர்.

## பிறசிலைகள்

வழிபாட்டிற்குக் கொள்ளப்படாத கீழ்க்குறிப்பிடும் சிலைகள் இத்திருக்கோயிலில் உள்ளன. அவை: கிருஷ்ணசாமி, இராச கோபாலன், கட்டபொம்மன் வழிபட்ட சண்முகர், வள்ளி, தெய்வயானை, நடராசர், சுப்பிரமணியர் (இவைபொருட்காட்சிக்கு கொண்டு செல்லப்படுகின்றன) மற்றும் இராமர், இலக்குவன், சீதை முதலிய சிலைகள்

## பள்ளியறையம்மன்

இத்திருவுரு வள்ளியம்மன் கோயிலில் உள்ளது. வெள்ளி யினால் செய்யப்பட்ட பீடத்தின் மேல் அம்மன் ஒருக்கணித்துப் (ஒரு புறம் திரும்பி) படுத்திருப்பது போன்ற தோற்றம் கொண்டது. நாள்தோறும் பள்ளியறைச் சொக்கர் அருகில் வைக்கப்படும் திரு வுருவம் இது.

## பள்ளியறைச்சொக்கர்

ஆறுமுகப் பெருமானின் கோயிலில் உள்ள திருவுருவம் இது. வெள்ளிப்பீடத்தின் மேல் திருவடிகளின் உருவம் பொறிக்கப்பட் டுள்ளது. இரவில் பள்ளியறைக்கு எடுத்துச் செல்லப்படும் திரு வுருவம் இதுவே. காலையில் தீபாராதனையின்பின் பல்லக்கில் வைத்து அடியார் 'அன்பருக்கு அன்பனே வா வா சண்முகா' என்று பாடிக்கொண்டு வந்து இத்திருவுருவை ஆறுமுகப் பெருமான் திரு வடியில் வைப்பர்.

# நான்காம் இயல்

## நாள் வழிபாடு

### அ. திருக்காலங்கள்

ஆலயங்களில் நடைபெறும் வழிபாட்டினை நித்தியம், நைமித்திகம், காமியம் என மூன்றாகப் பகுத்து ஆகமம் கூறுகிறது.[1] நாடோறும் செய்யப்படும் பூசை நித்தியம். திருவிழா, பிரதிட்டை முதலியன நைமித்திகம். பேற்றினை அவாவிச் செய்யப்படுவது காமியம் என்கிறார் திரு மு. ப.

#### பன்னிரண்டு காலங்கள்

நாள் வழிபாட்டில் இடம்பெறும் காலங்களைப் பன்னிரண்டாகப் பகுப்பர். இரவு, காலை, மாலை எனப்பிரித்துப் பிரட்டுகுளோதி ஆராய்ந்துள்ளார்.[2]

1 பூதராத்திரி
2 காலராத்திரி
3 மகாநிசி
4 உஷத்காலம் (காலை 4—6)
5 பிராதக்காலம் (காலை 6—30 — 7—15)
6 காலமத்தியசந்தி (காலை 7—30 — 9—00)
7 திவிதீயகாலசந்தி (காலை 9—00 — 9—30)
8 மத்தியசந்தி (காலை 10 மணி)
9 மத்தியானம் (உச்சிப்பொழுது)
10 சாயுங்காலம் (மாலை 4—30 — 6—00)
11 இராக்காலம் (இரவு 7—30/9—30)
12 அர்த்தசாமம் (இரவு 9—45 - 10 - 30)

''இவற்றுள் முதல் மூன்றுகாலங்களும் பெரும்பாலான சிவன் கோயில்களில் கொண்டாடப்படுவதில்லை. உலகம் இருளில் ஆழ்ந்திருப்பதும் செயலாற்றும் நிலையில் இல்லாமையுமே காரணம்.''[3]

மேற்கண்ட அட்டவணையிலுள்ள முதல் மூன்று காலங்கள் தவிர ஏனைய ஒன்பது காலங்களும் பெயர் வேறுபாடுகளோடு திருச்செந்தூரில் நடைபெறுகின்றன.

| மூலவர் | சண்முகர் |
|---|---|
| 1 உதயமார்த்தாண்டம் (6—45 — 7 - 15) | 1 விசுவரூபம் (காலை 5 - 30)[4] |
| 2 முதல் காலைசந்தி } காலை 7-45 | 2 உதய மார்த்தாண்டம் |
| 3 இரண்டாம் ,, } முதல் | 3 இரண்டாம் காலைசந்தி |
| 4 மூன்றும் ,, } 8 - 15 | 4 மூன்றும் காலைசந்தி |
| 5 ஒத்தக்கட்டளை (8—20) | 5 உச்சிக்காலம் |
| 6 உச்சிக்காலம் (12-30 - 12-45) | 6 சாயுங்காலம் |
| 7 சாயுங்காலம் (5·00 - 6-00) | 7 இராக்காலம் |
| 8 இராக்காலம் (9-15 - 9-30) | 8 ஏகாந்தம் |
| 9 ஏகாந்தம் (9— 35) | 9 இரகசியம் (9— 45) |

திருக்கோயில் நாட்குறிப்பில் கண்ட காலங்கள் அடைப்பினுள் தரப்பட்டுள்ளன.

## மூலவர் பூசையும் சண்முகர் பூசையும்

முதல் காலைசந்தியும் ஒத்தக்கட்டளையும் மூலவர்க்கு மட்டுமே உரியன. அவருக்கு மட்டுமே தீபாராதனை நடைபெறுகிறது. ஏனைய காலங்களில் மூலவருக்குத் தீபாராதனை முடிந்தபின் சண்முகர் தீபாராதனை நடைபெறுகிறது. அதனால் சண்முகர் பூசைக்காலங்களின் நேரத்தை அடைப்பினுள் தரவில்லை.
சண்முகருக்கு விசுவரூபம், இரகசியம் ஆகிய தீபாராதனையின் முன் மூலவருக்கு கற்பூர தீபாராதனை மட்டும் நடைபெறுகிறது.[4]

## மார்கழித்திங்கள்

மார்கழித் திங்களில் திருப்பள்ளியெழுச்சியை முன்னிட்டுப் பூசைநேரங்களில் மாறுதல் காணப்படுகிறது.

| மூலவர் | சண்முகர் |
|---|---|
| 1 உதயமார்த்தாண்டம் (4-30) | 1 விசுவரூபம் (3—30) |
| 2 திருப்பள்ளி எழுச்சி (5-6) | 2 உதயமார்த்தாண்டம் |
| 3 முதல் காலைசந்தி } 6—7 | 3 திருப்பள்ளி எழுச்சி |
| 4 இரண்டாம் ,, } | 4 இரண்டாம் காலைசந்தி |
| 5 மூன்றும் ,, } | 5 மூன்றும் ,, |
| 6 ஒத்தக்கட்டளை (7— 30) | 6 உச்சிக்காலம் |
| 7 உச்சிக்காலம் (8-30 - 9-00) | 7 சாயுங்காலம் |
| 8 சாயுங்காலம் (3-30 - 4-30) | 8 இராக்காலம் |
| 9 இராக்காலம் (7-00) | 9 ஏகாந்தம் |
| 10 ஏகாந்தம் (8-00 - 8-30) | 10 இரகசியம் (8-35) |

மார்கழித் திங்களில் திருப்பள்ளி எழுச்சி என்னும் புதியகாலம் சேருவதால் பத்துக்காலங்கள் நடைபெறுகின்றன.

திருப்பள்ளி எழுச்சி, உதயமார்த்தாண்டத்தின்பின் இடம் பெறுகிறது. நித்திய காலங்கட்கு உட்பட்டே சிறப்புக்காலங்கள் கொண்டாடப்படவேண்டும் என்கிறார் திரு ச.சி.

திருப்பரங்குன்றம், பழநி முதலிய திருத்தலங்களில் ஏழு காலங்களில் மட்டுமே பூசை நடைபெற, இங்கு ஒன்பது காலங்களில் பூசை நடைபெறுவது சிறப்பாகும். இனி, காலங்கள் பற்றிக் காண்போம்.

## 1. விசுவரூபம்

இவ்வூரில் இத்திருக்காலம் தனிச்சிறப்பு வாய்ந்தது. இது, சகல ஆன்மாக்களுக்கும் உணர்வு அளிக்கும் 'போகாங்க பூசை' எனப்படும்.

முருகன் குழந்தை வடிவில் இருந்தபோது தேவர்களுக்கு விசுவரூபக் காட்சியருளியதைக் கச்சியப்பர் பலபாக்களில் புகழ்கிறார்.[5] முருகன் சூரபன்மனுக்குப் போர்க்களத்தில்விசுவரூபம் காட்டினார்.[6] வீரபாகுதேவர் [illegible]க்கு விசுவரூபம் காட்டியபோது அவர், ''உமது உடலில் பதினன்கு உலகுகளையும் காண்கிறேன்'' என்றார்.[7]

திருச்செந்தூர் ஆலயத்தில் வைகறை 4-30 மணிக்கு ஆயத்தச் சங்கு ஒலித்ததும் அடியார்கள் குளித்துவிட்டு விசுவரூபம் காண ஆயத்தமாவர். ஐந்து மணிக்குக் கதவு திறந்ததும் வள்ளியம்மன் கோயில்முன் அமர்ந்து திருச்செந்திலாதிபன் சுப்பிரபாதம் பாடுகின்றனர். பின் திருச்செந்தூர்த் திருப்பள்ளியெழுச்சி(மணிவாசகர் பாடல்களைத் தழுவியது) பாடுகின்றனர்.[8]

பின், பள்ளியறையில் தீபாராதனை நடைபெறும். சக்தி பிம்பத்தைப்பட்டர் ஊஞ்சலிலிருந்து எடுத்து மூலாலயம் சேர்ப்பர் பள்ளியறைச் சொக்கரை வெள்ளிப் பல்லக்கில் அமர்த்திப் பாடிக் கொண்டே முதற்சுற்றுலை வழியே வலம்வந்து ஆறுமுகப்பிரான் திருப்பாதங்களினடியில் வைப்பர். பின்பு மூலவருக்கும் சண்முகருக்கும் தீபாராதனை நடைபெறும்.

இப்பூசை முடிவில் கொடிமரத்தடியில் பள்வியறைப்பால், தேங்காய், கற்கண்டு ஆகியன வழங்கப்படுகின்றன.

### கொடிமர வணக்கம்

பின்னர் கொடிமரத்தின் முன் நின்று பன்னிரண்டு வணக்க மந்திரங்களைப் பாடுகின்றனர்.[9] ஒவ்வொரு மந்திரமும் பாடிமுடிந்த

பின் கீழே வீழ்ந்து வணங்குகின்றனர். பின்னர் சண்முக விலாசம் சென்று குறிப்பிட்ட நாட்களில் மட்டும்[10] கடலை நோக்கி நின்று சூரிய வணக்கம் செய்கின்றனர்.

## உதயமார்த்தாண்டம்

உஷக் காலத்தில்[11] "நடைபெறும் இப்பூசை ஏனையகோயில் களில் 'விளா பூசை' என வழங்கப்படுகிறது. உதய மார்த்தாண்ட அபிடேகம் (மூலவருக்கு) காலை 6 மணிக்குத் தொடங்குகிறது. கேரளமன்னர் மார்த்தாண்டவர்மா (கிபி. 1729-58) இப்பூசைக்கு வேண்டிய பொருளுதவி செய்தார்.[12] கி. பி. 1940 ஆம் ஆண்டில் இவ்வுதவி நின்றுவிட்டது. ('கட்டளைகள்' என்னும் இயலில் காரணங்களைக் காண்க).

## காலைசந்தி

இதனை முதற்காலை சந்தி, சிறுகாலை சந்தி, பெரியகாலை சந்தி என்று மூன்றாக வழங்குவர். இம்மூன்றினையும் ஒரே காலமாகக் கணக்கிட்டு இவ்வூர்க் கோயிலில் ஏழு காலங்களே பூசை நடை பெறுகிறதென்பர். ஜே. எம். சோமசுந்தரம். ஆனால் இத்திருக் கோயிலின் திட்டம் ஒன்பது காலங்களுக்குப் பொருட்கள் வழங்கு வதால் அவர் கூற்றினை ஏற்றுக் கொள்வதற்கில்லை.

முதற்காலை சந்தி மூலவருக்கு மட்டுமே நடைபெறுகிறது. இப்பூசையின்போது ஏனைய கோயில்களில் ஞாயிறு வழிபாடு இடம் பெறும். இங்கு முருகனே 'பலர்புகழ் ஞாயிறு' ஆக விளங்குவதா லும், சூரியனுக்குச் சிலையில்லாததாலும் இப்பூசை இடம்பெற வில்லை.

இரண்டாம் காலைசந்தி, மூன்றாம் காலை சந்திப் பூசைகள் மூலவர், சண்முகர் ஆகிய இருவருக்கும் நடைபெறுகின்றன. மூன்றாம்காலை சந்திப்பூசை முடிந்தவுடன் வெள்ளிச்சீபலி எழுந் தருளி ஆவரண தேவதைகளுக்குப் பலிபோடுதல் நிகழ்கிறது.

## ஒத்தக்கட்டளை

இது கேரள மன்னர் ஒருவரால் ஏற்படுத்தப்பட்டது என்பர் திரு. மு. ப. இப்பூசையின்போது மட்டும் மூலவருக்கு இடப்புற முள்ள செகந்நாதருக்கு தீபாராதனைத் காட்டப்படுவதில்லை.

## உச்சிக்காலம்

இப்பூசை நண்பகலில் நிகழ்வதால் இப்பெயர் பெற்றது. ஆயினும் மாதக் கடைசி வெள்ளி போன்ற சிறப்பு நாட்களில் பிற்பகல் 1-30 மணி வரை இப்பூசை நடைபெறும். காலை 10-30

மணிக்கு உச்சிக்கால அபிடேகம் நடைபெறும். இப்பூசை முடிந்த வுடன் தங்கச்சீபலி எழுந்தருளி ஆவரண தேவதைகளுக்குப் பலி போடுதல் நிகழும்.

உச்சிக் காலத்திற்குப்பின் திருக்காப்பிடுதல் (கதவு சாத்தப் படுதல்) இங்குள்ள வழக்கம்.[14]

**சாயுங்காலம்**

இதனைச் 'சாயரட்சை' என்பர். கி. பி. 1972 ஆம் ஆண்டிற்கு முன் மாலை 5 மணிக்கே நடை திறக்கப்பட்டது. அவ்வாண்டு முதல் மாலை 4 மணிக்கு நடை திறக்கப்படுகிறது. கோயில் கதவு திறக்கப்படும்போது பஞ்சமகாசப்தம்[15] முழங்க வேண்டுமென்பர்.

இரவின் தொடக்கமான இப்பொழுது 'பிரதோடம்' எனப் படும். இக்காலத்தின் போது பதினாறு தீபாராதனைகள் இடம் பெறுகின்றன.

**அர்த்தசாமம்**

இதனை இராக் காலமென்றும் இரண்டாம் கால மென்றும் கூறுகின்றனர்.

**ஏகாந்தம்**

அர்த்தசாம தீபாராதனைக்குப் பின் இரவு 9.35 மணிக்கு ஏகாந்த தீபாராதனை நடைபெறுகிறது. தங்கச்சீபலி இதன் பின் எழுந்தருளுதல் நிகழ்கிறது. ஏகாந்தத்தின் பின் சீபலி எழுந் தருளுதல் கேரள முறை என்கிறார் திரு. மு. ப.

**இரகசியம்**

இரவு 9.45 மணியளவில் இரகசிய தீபாராதனை சண்முகருக்கு நடைபெறுகிறது. சுவாமிக்குத் திரையிட்டுத் தீபாராதனை காட் டுவதால் இதனை 'இரகசியத் தீபாராதனை' என அழைக்கின்றனர். ஆறுமுகப்பெருமான் முன் பள்ளியறைச் சொக்கரை வைத்து இத் தீபாராதனை நடைபெறுகிறது.

இதன்பின் பள்ளியறைச் சொக்கர் பல்லக்கில் முதற்சுற்றாலை யின் வழியே சுற்றிப் பள்ளியறையை யடைகிறார். சுற்றிச் செல் லுதல் கேரள முறை என்கிறார் திரு. மு. ப.

**பள்ளியறைப் பூசை**

இதனைக் காலங்களில் ஒன்றாகக் கருதுவதில்லை. ஏனைய திருக் காலங்களில் இறைவனையும் இறைவியையும் வெவ்வேறாகப் பிரித்து வழிபாடியற்றப் பெற்றது. இப்பூசையில் இறைவனின் இடப்

பாகத்தில் இறைவியைச் சேர்த்து இலயப்படுத்தி வணங்குவர். இப் பூசையின் போது ஊஞ்சல் பாட்டுக்கள் பாடப்படும். ஆறு அறைக் கணக்கர் அன்றாடச் செலவு கணக்கைப் (மஞ்சள் முதல் கற்பூரம் வரை- பின்னிணைப்பில் காண்க) படித்தல் வழக்கம்.

வள்ளியம்மை இச்சாசக்தி. அவளே சிருஷ்டிக்குக் காரணம் அதனால் தான் பள்ளியறை வள்ளியம்மன் கோயிலில் உள்ளது என் கிறார் கோயில் விதாயகர் திரு.எஸ். வேம்புசாஸ்திரி.

## கல்வெட்டுச் செய்தி

இரண்டாம் வரகுணவர்மன் (கி.பி. 862) காலத்தில் இத்திருக் கோயிலில் நான்கு காலப் பூசையே நடைபெற்று வந்தது என்பதை அவன் கல்வெட்டால் அறிகிறோம்.[16]

## ஆ. வழிபாட்டு முறை

ஆகம வழிபாட்டினை, ஆன்மார்த்த பூசை எனவும், பரார்த்த பூசை எனவும் பிரிப்பர். அன்பர்கள் ஆலயங்களுக்குச் சென்று தாங் களே மூர்த்தி கட்குத் திருமுழுக்காட்டி மலரிட்டுப் பாட்டுப் பாடிப் போற்றி வழிபடுவதை 'ஆன்மார்த்த பூசை' என்கிறார் குன்றக்குடி அடிகளார். [17]திருநாவுக்கரசர், தாமே போதொடு நீர் சுமந்தேத்தி வழிபட்டார் என்கிறார் அடிகளார்.

'பரார்த்த பூசை' எனப்படுவது ஒரு திருமேனியில் (சிலையில்) இறைவனை எழுந்தருளச் செய்து மற்றவர் வழிபாடு செய்து கொள்ளத் தருதல் என்கிறார். கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிற்குப் பின்னரே இத்தகைய பூசை பெருவழக்குப் பெற்றது என்கிறார் செல்லப்பா நவரத்தினம்.[18]

## மூலவர் பூசை

மூலவருக்குப் போற்றிமார் கேரள முறைப் படி 'தந்திர சமுச் சயம்' என்னும் நூலில் கூறப்பட்டுள்ள படியும், வைதீக தாந்திரீக முறைப்படியும் குமார தந்திர விதிப்படியும் பூசை செய்வதாக இக்கோயில் தலைமைப் போற்றி (திரு.விட்டலம் போற்றி) கூறு கிறார்.

போற்றிமார் நிகழ்த்தும் பூசை மானசீகமான பூசை, மந்திரங் களை வாயால் கூறுவதில்லை, போற்றிமார் வேதாந்திகளாக உள் ளனர்.

## சண்முகர் வழிபாட்டு முறை

சண்முகருக்குச் சிவாச்சாரியார்கள் சிவபெருமானால் சனத்குமா ரருக்கு உபதேசிக்கப்பட்ட (லலிதாகம பேதமான) சனத்குமாரப்

பிரசன்ன குமாரதந்திர விதிப்படி பூசை நடத்துவதாகக் குறிப்பிடு கிறார் திரு.மு.ப. சிவாச்சாரியார்கள் சித்தாந்திகளாக உள்ளனர்.

## பதினாறு உபசார முறைகள்

ஆகமங்களின் அடிப்படைத் தத்துவம் ஒன்றே. "மனிதன் தான் உடுப்பதும், உண்பதும், கேட்பதும், காண்பதும், களிப்பதும் ஆண்டவனின் அருளால் என்று கருதினான். எனவே அவையனைத் தையுமே கடவுளுக்குப் படைத்துப் பின்னரே தான் கொண்டான்"[18] அரசனுக்குச் செய்யப்பட்ட உபசார முறைகளே ஆண்டவனுக்கும் செய்யப்பட்டன என்பாருமுளர். அவை பதினாறு வகைப்படும்.

1. அன்புடன் எதிர்முகமாக இருத்துதல்(ஆவாஹனம்)
2. குறிப்பிட்ட விடத்தில் நிறுத்துதல் (ஸ்தாபனம்)
3. திருவடி கழுவுதல் (பாத்தியம்)
4. பருகக் கொடுத்தல் (ஆசமனம்)
5. தலையில் நீர் தெளித்தல் (அர்க்கியம்)
6. திருமுழுக்கு (அபிஷேகம்)
7. ஆடை அணிவித்தல் மணம் (வஸ்திரம், கந்தம்)
8. நறும்புகை, ஒளிகாட்டுதல் (தூபதீபம்)
9. உணவு படைத்தல் (நிவேதனம்)
10. மலரிடல் (புஷ்பம்)
11. பலிதானம்
12. வேள்வி (ஹோமம்)
13. பலி
14. பாட்டு, இசைக் கருவிகள் இசைத்தல்
15. ஆடல் (நர்த்தனம்)
16. வாழ்த்து (உத்வாசனம்)

ஆகம பேதத்தால் இவை வேறு படும்.

## எதிர்முகமாக இருத்துதல் (ஆவாஹனம்)

இக்கோயிலில் மூலவர் தாமே செகந்நாதரை இருத்தி வழிபாடு செய்ய எழுந்துள்ளதாகக் கந்தபுராணம் கூறுகிறது. சண்முகப் பெருமானருகிலும் இவ்வாறே ஆன்மலிங்கம் அமைந்துள்ளது. எனவே இங்கு மூர்த்திகள் தாமே எழுந்தருளியுள்ளனர்.

மூர்த்தியின் மூல மந்திரத்தை ஓதி அழைக்கும் போது அந்த மூர்த்தி பேரொளிப் பிழம்பினராய்ச் சிலையில் தோன்றுவார். பின் மந்திரம், முத்திரைகளால் பூசாரி வித்தியாதேகம் மற்றும் உறுப்

புக்களை நியாச முறையில் வகுப்பார். அந்தந்த மூர்த்திக்குரிய வடிவம், நிறம், ஆடை, அணி, ஆயுதங்கள், உறுப்புக்கள் பாவனை செய்யப்படும். இறைவனை அகத்தில் தியானித்துப் புறத்தில் திரு மேனியில் (பிம்பத்தில்) நிறுவுதல் இருத்துதல் எனப்படும்.

### ஸ்தாபனம் (நிறுத்துதல்)

சில நூல்களில் இருக்கையளித்தல் (ஆசனம்) நிறுத்துதலுக்குப் பதில் இடம் பெறுகிறது.

### திருவடி சமுவுதல் (பாத்தியம்)

திரு முழுக்கின் தொடக்கம், முடிவு, நிவேதனத்தின் தொடக்கம், முடிவு மற்றும் தூபதீப காலங்களில் பாத்தியம் நிகழ வேண்டு மென்கிறார் திரு மு. ப.

இங்கு மூலவர் சண்முகர் ஆகிய இருவருக்கும் பன்னீரால் திரு வடி கழுவுதல் எல்லாக்காலங்களிலும் நிகழ்கின்றது.

### பருகக் கொடுத்தல் (ஆசமனம்)

திருவடி கழுவும் காலங்களில் இதுவும் இடம் பெறல் வேண்டும் ஏலக்காய், சந்தனம், பச்சைக்கற்பூரம், நெய்தல்பூ அகியவற்றோடு கூடிய நன்னீரைக் கொடுத்தல் வேண்டும்.

### தலையில் நீர் தெளித்தல் (அர்க்கியம்)

பூசையின் தொடக்கம், முடிவு, திருமுழுக்கின் முடிவு ஆகிய காலங்களில் நீர் தெளிக்கப்படல் வேண்டுமென்பர்.

### திருமுழுக்கு அபிடேகம்)

மூலவருக்கு உதயமார்த்தாண்டம், உச்சிக்காலம், அர்த்த சாமம் ஆகிய காலங்களில் திருமுழுக்கு நடைபெறுகிறது. திரு முழுக்குக்குக் கொள்ளப்படும் பொருட்களாவன: எண்ணெய், தேன் பால், பழம், இளநீர், பஞசாமிர்தம், சந்தனம், திருநீறு.

திருநீற்றுத் (விபூதி) திரு முழுக்கில் மூலவரைக் காணக் கண் கோடி வேண்டும். இதனைக் காண்டலைப் பெரும் பேருகக்கருது கின்றனர்.

மூலவருக்கு அணி புனையுமுன் திருவுருவினைச் சிறு பருப்பு மாவினுல் முழுக்காட்டி வெற்றிவேர்க் கட்டினுல் தேய்ப்பர்.

சண்முகர் உலோகச் சிலையாதலின் அவருக்கு நாடோறும் திரு முழுக்கு நிகழ்வதில்லை. ஆண்டிற்கு 36 திருமுழுக்குகளே நடைபெறு கின்றன.[20]

தில்லைநடராசப் பெருமானுக்கு ஆண்டுக்கு ஆறு திருமுழுக்குகள். ஆறுமுகங்களை யுடைய நடராசருக்கு $6 \times 6 = 36$ திருமுழுக்கு என்பர்.

## ஆடை (வஸ்திரம்)

பொதுவாக வெள்ளை யாடையே அணிவிக்கப் படுகிறது. மூல வருக்குச் செம்பட்டு சிறப்பாகக் கருதப்படுகிறது. சண்முகர் செம் பட்டுடன் பச்சைப் பட்டும் அணிவிக்கப் பெறுகிறார்.

இத்திருக் கோயிலில் பயன் படுத்தப்படும் வெள்ளாடையின் நடுவில் சிவப்பு, கருப்புப் பட்டைகள் நெய்வர்.[21] இதனைத் தாரை போடுதல் என்பர். இதனால் இத் திருக்கோயிலின் ஆடையை வெளி யார் திருடி அணிதல் இயலாது.

## சந்தனம் (கந்தம்)

மணத்துடன் கூடிய சந்தனத்தை மூர்த்தியின் மீது சாத்துதல் வழக்கம். மூலவர்முகத்திலும் சந்தனம் சாத்தப்படுகிறது.

## மலர்கள் (புஷ்பம்)

காலைசந்திப் பூசைக்குத் தாமரைப்பூ, துளசி, நவமல்லிகை, நந்தியாவட்டை, மந்தாரை, முல்லை, செண்பகம், புன்னைகம், கொன்றை உரியன. உச்சிக் காலப் பூசைக்கு வெண் தாமரை, அலரி, துளசி, நெய்தல், வில்வம், சங்குபுட்பம், ஓரிலைத் தாமரை உரியன. மாலைப் பூசைக்குச் செந்தாமரை, அல்லி, மல்லி கை, சாதிமுல்லை, மருக்கொழுந்து, வெற்றிவேர், வில்வம், துளசி முதலியன உரியன. ஏனைய காலங்களில் விருப்பம்போல் செய் யலாம். செண்பக மொட்டு தவிர வேறு மொட்டு பூசைக்குதவாது என்கிறார் சுவாமிநாத சிவாச்சாரியார்.[22]

இத்திருக்கோயிலுக்கு நாலு மூலைக்கிணறு என்னும் ஊரில் நந் தவனம் உள்ளது. நாள் தோறும் அங்கிருந்து மலர்கள் வரும். வில் வமும் தாமரையும் பூசையில் சிறப்பிடம் பெறுகின்றன.

## நறும்புகை, ஒளிகாட்டுதல (தூபதீபம்)

''சந்தனம் ஏழு பங்கு, சாம்பிராணி ஆறு பங்கு, குங்கிலியம் ஐந்து பங்கு, குங்குமப்பூ நான்கு பங்கு, கோரைக்கிழங்கு மூன்று பங்கு, அகர் இரண்டு பங்கு, பச்சைக்கற்பூரம் ஒருபங்கு சேர்த்து கொஞ்சம் நெய்யுடன் கூட்டிப் போடும் தூபத்திற்கு **'சீதாரி தூபம்'** என்று பெயர்.

இரண்டாம் வரகுணன் காலத்தில் இக்கோயிலுக்குச் சீதாரி யை மாறமங்கலத்துச் சபையார் வழங்கி வந்தனர் எனக் கல் வெட்டு கூறுகிறது.

சாம்பிராணி, சூடன் ஆகியவற்றை அணு அறையிலிருந்து பெற்றுச் சென்று கொடுத்தல் இக்கோயிலில் ஓதுவார்களின் பணியாக உள்ளது.

இக்கோயிலில் காட்டப்பெறும் பதினாறு வகைத் தீபங்களின் பெயர்கள் வருமாறு: 1. அலங்காரதீபம் 2. சர்ப்பதீபம் 3. புருடா மிருக தீபம் 4. மயில் தீபம் 5. யானைதீபம் 6. புலி தீபம் 7. குதிரை தீபம் 8. சிம்மதீபம் 9. அன்னதீபம் 10. சேவல் தீபம் 11. சக்தி தீபம் 12. கும்பதீபம் 13. ஆமைதீபம் 14. மேரு தீபம் 15. நட்சத்திரதீபம் 16. கற்பூரதீபம்.

தீபாராதனைக்குப் பின் காட்டப்படும் பொருட்கள், நோக்கம் வருமாறு:

1. கண்ணாடி — இறைவனின் நிர்மலத்தைக் காட்டும்
2. குடை — இறைவன் ஆணையைக் குறிக்கும்
3. சாமரம் — காற்றின் போக்கினைக் காட்டும்
4. விசிறி — இறைவனிடம் சராசரம் அசைவதைக்காட்டும்
5. கொடி } இரண்டும் சூரிய சந்திரனின் அடிமை நிலை
6. சுருட்டி } காட்டும்.

சாயரட்சை தவிர மற்றக் காலங்களில் அலங்காரதீபம் சக்திதீபம், கற்பூர தீபம் ஆகிய மூன்று மட்டுமே காட்டப்படுகின்றன.

## உணவு படைத்தல் (நிவேதனம்)

| | காலம் | மூலவர் | சண்முகர் |
|---|---|---|---|
| 1. | விசுவரூபம் | பொரி, தாம்பூலம் பழம் | பொரி, தாம்பூலம் பழம் |
| 2. | உதயமார்த் தாண்டம் | சிறுபருப்புப் பொங்கல் 5. 500லி தயிர், நெய் சர்க்கரை | சிறுபருப்புக் கஞ்சி தோசை (13) தயிர்ச்சாதம் |
| 3. | சிறுகாலைசந்தி | சுத்தான்னம் (15.400லி) (31.800லி) | சுத்தான்னம் (41.900லி) |
| 4. | பெருங்காலைசந்தி | சுத்தான்னம் (20.200லி) பால்பாயாசம் | சுத்தான்னம் (7.700லி) |

| | | | |
|---|---|---|---|
| 5. | ஒத்தக்கட்டளை | சுத்தான்னம் (24.200லி) பால்பாயாசம் | |
| 6. | உச்சிக்காலம் | சுத்தான்னம் 22.500லி வடை 40 தோசை 40 அப்பம் 129 | கவளபாத் திரம் (ஊறுகாய்கள் (1.400லி) உட்பட |
| 7. | சாயரட்சை | சர்க்கரை கலந்தபொரி (2.500லி) | தேங்குழல் 34 அதிரசம் 30 அப்பம் 30 தினைமாவு (0.500லி) |
| 8. | இராக்காலம் | அப்பம் 24 சுத்தான்னம் (8.800லி) | சுத்தான்னம் (5,500லி) |
| 9. | அர்த்தசாமம் 7,00லி | சுத்தான்னம் பால், சுக்கு வெந்நீர் | சுத்தான்னம் |

(அளவுகள் திருக்கோயில் சிறுகுறிப்பில் உள்ளவாறு குறிப்பிடப் பட்டுள்ளன)

மூலவர் தவக் கோலத்திலிருப்பதால் காரம், புளி உணவில் சேர்ப்பதில்லை யென்றுர் வேங்கடாசலம் போற்றி. சண்முகர் இல் லறக்கோலத்திலிருப்பதால் அவரது உணவில் காரம், புளி சேர்க்கப் படுகின்றன என்பர்.

## நடமாடும் கோயில்

அன்பர்கள் உணவருந்தியதைச் சாட்சியாக நின்று முருகன் கண்டபின்னரே, தான் சாப்பிடுகிறுர். உதயமார்த்தாண்டம், மூன்றும் காலை சந்தி, உச்சிக் காலம் ஆகிய காலங்களில் தங்கக் கொடிமரத்தருகில் அந்தணர்கட்குக் கீழ்சாந்திப் போற்றியால் இலைகளில் சுத்தான்னம், மோர்க் குழம்பு. பருப்புப்பொடி, நெய், தயிர் படைக்கப்படும். அன்றைய பூசை முறையுடைய மேல் சாந்திப் போற்றி அங்குச்சென்று தீர்த்தம் தெளித்து இலையில் மலர் தூவிச் செல்வார். பின்னரே மூலவர் முன்சென்று மணியை யடித்து, விழுந்து வணங்கித்தானம் கொடுத்துப் பூசை செய்யப் போகிறுர்.

### பள்ளியறையில் படைக்கப்படுவன

இரவில், பால், பல்லக்கு உருண்டை (சுகியன்) அரவணை, பால்கோவா முதலியன படைக்கப்படுகின்றன.

காலையில் பொரி, பழம், தாம்பூலம் படைக்கப் படுகின்றன.

### ஏனைய தேவர்கட்குப் படைத்தல்

வீரவாகு மூர்த்திக்குப் பிட்டமுதும், மயிலுக்குப் பொரியும், இரவில் வைரவருக்கு வடைகளும் படைக்கப்படுகின்றன.

### ஆறுமுக அருச்சனையின் போது

ஆறுமுக அருச்சனையின் முடிவில் சண்முகருக்குப் பால் பாயாசம், சர்க்கரைப் பொங்கல், சிறு பருப்புப் பொங்கல், புளியோதரை, மிளகுசம்பா, தயிர்ச்சாதம் ஆகியன படைக்கப் படுகின்றன.

### வேள்வி

குமர விடங்கப் பெருமான் முன்புள்ள திண்ணையில் நாள் தோறும் போற்றிமார்களால் உதயமார்த்தாண்ட பூசைக்குப் பின் 'கணபதி வேள்வி' வளர்க்கப்படுகிறது.

### தாரை வேள்வி

இது சிறப்பாகச் செய்யப் படுவதாகும். இதற்குத் தனிக்கட்டணம் உண்டு. வள்ளியம்மன் கோயிலுக்குவடக்கேயுள்ள வேள்விக் கூடத்தில் பட்டர்கள், போற்றிமார், முக்காணியர்களால் இது நடத்தப்படுகிறது.

வழக்கமான திருமுழுக்கிற்காக இரண்டு வெள்ளிக் குடங்களும் தாரை வேள்விக்காக, எட்டுத் தங்கச் செம்புகளால் சூழப்பட்ட பெரிய தங்கக் குடம் ஒன்றும் மேடையில் வைக்கப்படுகின்றன. எட்டுத் தங்கச் செம்புகளும் அஷ்ட வித்தியேசுவரரைக் குறிக்கும் வேள்வியின் பின் குடங்களிலுள்ள நீரினை மூலவருக்கு அபிடேகம் செய்கின்றனர்.

### பலி

இக்கோயிலில் சீபலி எழுந்தருளுதல் மூன்று காலங்களில் நடைபெறுகின்றது. இதனை நாள் விழா (நித்தியோற்சவம்) என்பர். மூலவருக்கருகிலுள்ள சீபலியைக் கீழ்சாந்திப் போற்றி தலையில் துணியைச் சுற்றி (முன்பு குல்லா வைத்திருந்தனர்) அமர்த்துகின்றனர். பஞ்சவாத்தியம் முழங்க சீபலி நாதர் எழுந்தருளுகிறார். முறைப் போற்றி கெண்டியில் நீர் கொண்டு சென்று

பலி பீடங்களில் பலி (சோறு) தூவுகிறார். ஒவ்வொரு சுற்றிலும் குறிப்பிடப்பட்ட பலி பீடங்களில் பலி தூவி விட்டு மூன்றாம் சுற்றில் மகாபலி பீடத்தில் பலி தூவுகிறார். [23]

பலிபீடங்களில் தூவும் சோற்றினைப் படுக்கையில் சிறுநீர் கழிக்கும் பிள்ளைகளுக்கு மருந்தாகக் கொடுக்கின்றனர்.

## சீபலியும் தாளமும்

சீபலியின் முதல் மூன்று சுற்றுகளுக்குப் பாணியும், நான்காம் சுற்றுக்கு மேளமும், ஐந்தாம் சுற்றுக்கு நட்டுவன் தாளமும் இசைக்கப் படும்.

ஒவ்வொரு திங்களும் உத்திர நாளன்று ஏகாந்தத்தின் பின் தங்க மயில் மீது சீபலி எழுந்தருளுதல் வழக்கம்,

## பலிபெறும் தேவர்கள்

### முதல் சுற்று

மூலத்தான வாசல் வலப்புறம் — ஐயன்
இடப்புறம் — விஜயன்
மயில் முன் பலிபீடம் — மயில்
பின் பலி பீடம் - பாஸ்கரன்
வெளிப்புறம் — அக்கினி
தக்கிணம் — இரணவீரன்
தக்கிணா மூர்த்தி முன்புள்ள ஒன்பது பீடங்கள்:-
1. பிராமி 2. மகேசுவரி 3. கௌமாரி 4. வைணவி 5. வராகி 6. மகேந்திரி 7. சாமுண்டி 8. வீரபத்திரர் 9. விகிகினேசுவரர்
நிருதி மூலை -- விநாயகர்
மேற்கு - சௌமிய வீரன்
வாயு — ஜ்யேஷ்டா தேவி
வடக்கு — துர்க்கை
ஈசானம் - சேத்திர பாலர் (பைரவர்)

### இரண்டாம் சுற்று

இதில் இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆகிய எட்டுத் திசைப்பாலகர்கள், பலி பெறுகின்றனர்.

### மூன்றாம் சுற்று

ஈசானத்திற்குத் தெற்கே பிரம்மாவுக்கும் நிருதிக்கும் வடக்கே விஷ்ணுவுக்கும் பலியிடுதல் வேண்டும்.

### நான்காம் சுற்று

மேளதாளத்தோடு தீபாராதனை காட்டுதல் இச்சுற்றில் நிகழும்.

### ஐந்தாம் சுற்று

நிருத்த கீதத்தோடு வலம் வந்து தங்கக் கொடி மரத் தருகிலுள்ள மகாபலி பீடத்தில் வழிபடும் போது

கர்ணிகை (பொகுட்டு) மத்தியில் விநாயகர்;

கிழக்கே ஆமோதம் (மகிழ்ச்சி) தெற்கே பிரமோதம் (மிகு மகிழ்ச்சி) ; மேற்கே — பிரமுகம் (தனக்கு எதிர்முகம்) வடக்கே — துர்முகம் (கோபப்பார்வை); ஈசானம் — விக்கின கர்த்தா; நிருதி — சுதேகம் (தன்னுடல்); மத்தி சர்வதேவாதிபதி குகன் ஆகியோரை வழிபடல் வேண்டும். சுற்றிலும் வச்சிரம், சக்தி, தண்டம், கட்கம் (குறுவாள்) பாசம், அங்குசம், கதை, திரிசூலம், பத்மம், சக்கரம் ஆகியவற்றை வழிபடல் வேண்டும் என்கிறார் திரு. மு. ப.

### பாடல்

உதயமார்த்தாண்டம், சாயரட்சை, அர்த்தசாமம், ஏகாந்தம் ஆகிய காலங்களில் தீபாராதனை முடிந்தவுடன் முக்காணியக் கட்டியங்காரர் மயில் சின்ன முடைய வெள்ளித் தடியை ஏந்தி முருகன் புகழைக் கூறுகிறார்.

உதயமார்த்தாண்ட தீபாராதனைக்குப் பின் பஞ்சாங்கம் படிக்கப்படுகிறது. கட்டியம்கூறி முடிந்தபின் அத்யயனபட்டர் வேதம் ஓதுகிறார். பின்னர் ஓதுவார்கள் பஞ்சபுராணம்[24] பாடி முருகன் கோயிலாக விருப்பதால் திருப்புகழ் பாடி முடிக்கின்றனர்.

திருமுழுக்கு நடைபெறும் போது வேதமந்திரங்கள் ஓதுகின்றனர். ஓதுவார்கள் திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்ப் பாக்கள் பாடுகின்றனர்.

### இசை, நடனம்

| | காலம் | பண் | கருவி | நடனம் |
|---|---|---|---|---|
| 1 | காலை | காந்தாரம் | சச்சபுடம் | புஜங்கத்ராசம் (பாம்பூர்வது) |
| 2 | உச்சிக் காலம் | சீகாமரம் | சாசபுடம் கும்ப வாத்தியம் | லலிதநிருத்தம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 3 | மாலை | பஞ்சமம் | சிம்ம வாத்தியம் | கமலா வர்த்தகம் |
| 4 | அர்த்த சாமம் | கௌசிகம் | பஞ்ச ,, | ஸ்வஸ்திகம் |
| 5 | ஏனைய காலங்கள் | | பஞ்ச வாத்தியம் | சந்த்யாநிருத்தம் |

இக்கோயிலில் தேவதாசி முறையிருந்த காலத்தில் ஆடல் (நிருத்தம்) இருந்தது.

## வாழ்த்து (ஸ்வஸ்தி பாடம்)

மக்கள் நீடு வாழ வாழ்த்துதல் ஸ்வஸ்தி பாடமாகும். திருப்புகழ் பாடி முடித்தவுடன் சிவாச்சாரியார் இறைவனுடைய மூல மந்திரத்தைச் செபித்து சுளு கோதகம் (குடங்கை நீர்) சமர்ப்பித்து 'சர்வே ஜனா சுகினோ பவந்து' (அனைத்து மக்களும் வாழ்க) என இறைவனிடம் வேண்டி விபூதி வழங்க வேண்டும். இங்கு 'லோக சமஸ்தா சுகினோ பவந்து' (அனைத்துலகங்களும் வாழ்க) என வாழ்த்துகின்றனர்.

மூலவர் திருமுன் கேரள முறைப் படி வலம்புரிச் சங்கு நீர் தெளித்துச் சந்தனம் வழங்கப்படுகிறது. சண்முகர் முன் இலை விபூதி வழங்கப்படுகிறது.

## சிறப்பு வழிபாடு

### குட வழிபாடு (கலச பூசை)

பார்வதி அம்மனுக்கு முன் காலை 10 மணி அளவில் கலச பூசை நடை பெறுகிறது. கலச தீர்த்தத்தை மூலவருக்கு அபிடேகம் செய்கின்றனர்.

### கங்கை பூசை

உச்சிக் காலம் முடிந்து கோயில் கதவுகள் தாளிடப்படு முன் கடற் கரையில் மேள தாளங்களோடு சுத்தான்னம் கங்கைக்குப் (கடலுக்கு) படைக்கப்படுகிறது.

### ஒழுக்கு முழுக்கு (தாரா பிடேகம்)

இது மூலவருக்கே நடை பெறுகிறது. உயரமான முக்காலியை மூலவரைச் சுற்றி நிறுத்தி முக்காலியின் உச்சியில் நடுவில் துவாரம் உள்ள வெள்ளிக் கொப்பரையை வைக்கின்றனர். கொப்பரையின் துளை பெரிதாக இருப்பதால் தர்ப்பைகளையிட்டு அடைத்து அக் கொப்பரையில் பாலை ஊற்றுகின்றனர். சுமார் ஒரு மணி நேரம் பாலினை ஊற்றிக் கொண்டேயிருப்பர். இதனை நடத்தத் திருக் கோயிலுக்கு ரூபா 25/- கட்டணம் செலுத்த வேண்டும்.

## சங்குத் திருமுழுக்கு

1008 சங்குகளில் தீர்த்தத்தை நிரப்பிச் செய்யப்படுவது சங்குத் திருமுழுக்கு. இதற்குத் தனிக் கட்டணம் ரூபா 15/- சங்குகளைத் தேவதானமே தந்து உதவும்.

## சிறப்பு அருச்சனைகள்

ஆறுமுகப் பெருமானின் ஆறு முகங்களுக்கு முன்பும் ஆறு வாத்தியார்கள் (மந்திரம் கூறுபவர்) நின்று ஆயிரம் திரு நாமங்களைப் பாட சிவாச்சாரியார்கள் அறுவர் ஆறு முகங்களருகில் நின்று மலரிட்டு வழிபடுதல் 'ஆறு முக அருச்சனை' எனப்படும். இதற்குக் கட்டணம் உண்டு. தீபம் போட இரண்டு லிட்டர் நெய்யும், நான்கு லிட்டர் எண்ணெயும் அணு அறையில் கொடுத்தல் வேண்டும்.

ஆறு திரு முகங்களுக்கும் ஆறு வகை உணவு படைக்கப்படும். பின் ஆறு கற்பூரத் தட்டுகளில் கற்பூரம் ஏற்றி ஆறு முகங்களுக்கும் தீபாராதனை காட்டுவர். தேவதானத்தில் பணம் செலுத்தினால் தேவதானமே ஆறு முக அருச்சனை நடத்திப் பிரசாதங்கள் வழங்கும்.

## இலட்ச அருச்சனை

உதய மார்த்தாண்ட காலத்தில் காலை 6 மணி முதல் 6.30 மணி வரை இலட்சார்ச்சனை செய்யக் கட்டணம் ரூபா 100/-.

## சிறப்பு அங்கி

மூர்த்திகளுக்குச் சிறப்பாக வெள்ளி, தங்க அங்கி சாத்திப் பார்க்கக் கட்டணம் ரூபா 100/- வசூலிக்கின்றனர். நிவேதனம் படைக்கும் செலவையும் ஏற்க வேண்டும். திரு V. K. வேலு சாமி (செயல் அலுவலர்) காலத்திலிருந்து நாள் தோறும் 'முழு அங்கி' சாத்தப் படுகிறது. காலை 11 மணிக்கு மூலவர், சண்முகர் முதலியோருக்குத் தங்க அங்கி சாத்தி இரவு 8 மணிக்குக் களையப் படுகிறது.

## அன்றும் இன்றும்

இரண்டாம் வரகுணவர்மன் காலத்தில் திருச்செந்தூர்க் கோயிலில் ஒரு நாள் பூசைக்கு எனக் கட்டளையிட்ட பொருள்களில் சிலவற்றை இன்றைய திட்டத்தோடு ஒப்பிட்டால் இக் கோயிலின் வளர்ச்சி புலனாகும்.

| | பொருள் | வரகுணன் காலம் | இன்றையத் திட்டம்[25] |
|---|---|---|---|
| 1 | செந்நெற்றீட்டலரிசி | 18 நாழி | 379 லிட்டர் |
| 2 | பசுவின் நறு நெய் | நாழி உரி | 12 லிட்டர் |
| 3 | கருவாழைப்பழம் | 16 | 421. |
| 4 | சர்க்கரை | 4 பலம் | 4.390 கிலோ |
| 5 | சிறுபயற்றம்பருப்பு | 2 நாழி | 2.300 கி. |
| 6 | வெற்றிலை | 3 பற்று | 1.085 கி. |
| 7 | அடைக்காய் | 56 பாக்கு | 0.735 கி. |
| 8 | பசுவின் பால் | 8 நாழி | 8 நாழிக்கு மேல் |
| 9 | மாலைகட்ட நறும்பூ | 10 நாழி | நந்தவனமுறை & ரூ 45-00. |
| 10 | இளநீர் | 4 நாழி (32) | 36. |
| 11 | மஞ்சள் | 3 உழக்கு | 2.15 கிலோ. |
| 12 | சந்தனம் | 3 பலம் | 1.375 ,, |

**கல்வெட்டில் காணப்படாத பொருட்கள்:**

நெல், சந்தனாதித்தைலம், கடலைஎண்ணெய், நல்லெண்ணெய், தேங்காய், பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ, கோரோசனை, தேன், தினை, உளுந்தம் பருப்பு, எலுமிச்சம் பழம், புளி, குங்குமம், சாம்பிராணி, சூடன், திரிநூல். பந்தத்துணி, விறகு, மண்ணெண்ணெய் துவரம் பருப்பு, நவதானியம், தேங்காயெண்ணெய், கிராம்பு, பேரீச்சம் பழம், கற்கண்டு, விபூதி, ஊறுகாய்.

**மந்திர பேதம்:**

திருச்செந்தூர்க் கோயிலில் மூலவருக்குப் போற்றிகள் மான சீகபூசை செய்வதால் அவர்களது மந்திரங்களை அறிதல் இயலாது.

சண்முகருக்குப் பட்டர்கள் செய்யும் பூசை மந்திரங்களை வினவிய போது மந்திரங்கள் ரகசியமானவை என்றும் அவற்றின் வேறுபாட்டினை வேண்டுமாயின் கூறலாம் என்றூர் திரு. மு. ப.

ஆவாகனம், பாத்யம், ஆடைதரித்தல், சந்தனம் பூசுதல், அணி புனைதல், கண்ணுடி, குடை, சாமரம், விசிறி, செபம், நமஸ்காரம் ஆகியவற்றில் 'நம' என்னும் பதத்தை முடிவாகவுடைய மந்திரம் உச்சரிக்க வேண்டும் என்றூர். இத்தகைய மந்திரங்கள் சிலவற்றை 'முருகன்' என்னும் நூலில் காணலாம்.

அருக்கியம், அபிடேகம், தூபம், தீபம், நைவேத்தியம், நீர், முகவாசம், நீராஞ்சனம், பவித்திரம், செப சமர்ப்பணம், ஆன்ம சமர்ப்பணம், ஓமம் இவைகளில் 'சுவாஹா' என்னும் பதத்தை முடிவாகவுள்ள மந்திரத்தை உச்சரிக்க வேண்டும் என்றூர்.

நனைத்தல், துடைத்தல், பூமாலை புனைதல், பூர்ணாகுதி ஆகிய வைகளில் 'வௌஷட்' என்னும் பதத்தை இறுதியாக உச்சரிக்க வேண்டும் என்றார்.

அபிடேகம், சுத்திசெய்தல், பாசச் சேதம், புரோக்ஷணம், தாடனம், பேதனம், விக்கினங்களைப் போக்குதல் இவைகளின் முடிவில் 'ஹூம்பட்' என்பதை உச்சரிக்க வேண்டும் என்றார்.

ரக்ஷையில் 'பட்' என்பதை முடிவாக உச்சரிக்க வேண்டும் என்றார்.

ஆசமனத்தில் 'சுவதா' என்று உச்கரிக்க வேண்டும் என்றார்.

கவசவேஷ்டனத்தில் 'ஹூம்' என்று உச்சரிக்க வேண்டும் என்றார்.

## பூசாரியின் பாவனைகள்

ஆவாகன காலத்தில் குரு உருவினராகவும், அபிடேக அலங்கார காலத்தில் தாய் உருவினராகவும், நைவேத்தியம், அர்ச்சனை தூபம், தீபம் காட்டும் போது மந்திர வடிவமாகவும், தோத்திரம், பிரதட்சணம் செய்யும் காலம் பக்த வடிவினனாகவும் பூசை வழிபாடு செய்தல் வேண்டும். (நி. பூ. ல. ச)

## இலை விபூதி

பன்னீர் மரத்தின் இலைகளில் பன்னிரண்டு நரம்புகளுள்ள இலைகளைத் தேர்ந்து அதனுள் விபூதியை வைத்து மடித்துக் கட்டுக் கட்டாக வைத்திருப்பர். அறுமுகன் பன்னிரண்டு கைகளாலும் இலை விபூதியை விசுவாமித்திரருக்குக் காசநோய் நீங்க வழங்கினார் என்பர். பன்னிரண்டு கைகளின் நினைவாகப் பன்னிரண்டு நரம்புகளுள்ள இலை தேர்ந்தெடுக்கப் படுகிறது.

இவ்வூரில் தேவர்கள் பன்னீர் மரங்களாக நின்றனர் என்கிறது தலபுராணம். ஆனால் இங்கு இப்போது இம்மரங்கள் மிகுதியாக இல்லை. அண்மையிலுள்ள உடன்குடி என்னும் ஊரிலிருந்து பன்னீர் இலைகள் பெறப்படுகின்றன.

இலை விபூதியை இலைகளோடு உட்கொள்ளலாம். அபி நவ குப்தர் ஏவலால் காசநோய் பெற்று வருந்திய ஆதி சங்கரர் இங்கு வந்து இலை விபூதியை உட்கொண்டே காசநோய் நீங்கப் பெற்றார் என்பர்.

> ''நின் இலை விபூதியைக் கண்டால் கால்கை
> வலிப்பு, காசம், கயம், குட்டம் முதலிய
> நோய்கள் நீங்கும். பூதம், பிசாசு,
> தீவினை யாவும் விட்டு ஓடும்''[26].

இலை விபூதி காசத்திற்குக் கை கண்ட மருந்து. இவ்விலையின் மருத்துவப் பயன் ஆராய்தற்குரியது.

## முத்திரைகள்

முத்திரைகள் பற்றித் திரு. ச. சி. கூறுவதாவது:

''முத்திரை என்னும் வடசொல் தமிழில்
அவிநயம் செய்தல் என்னும் பொருளில்
வரும். நாள் வழிபாட்டில் மந்திரங்
களோடு காட்டப்படும் முத்திரைகள் முப்பத்தாறு.ஆகும்''

## நிரீட்சண முத்திரை (பார்த்தல்)

அபிடேகப் பொருட்களை நோக்கிக் காட்டப்படுவது. மோதிர விரலையும் கட்டை விரலையும் சேர்த்து இடையிலுள்ள துளையின் வழியாக வலக்கண்ணால் பார்த்தல் நீரீட்சணம் எனப்படும். வலக் கண் சூரிஞகக் கருதப்படுவதால் அப்பொருட்களின சூக்கும அசுத் தங்களை இப்பார்வை போக்கும். பின்னர் அப்பொருள் தழைக்கு மாறு இடக்கண்ணால் (சந்திரனால்) பார்க்க வேண்டும்.

## புரோட்சணம்

வலக்கைச் சுண்டுவிரல் கட்டைவிரல் நீங்கலாக ஏனைய மூன்று விரல்களைச் சேர்த்துக் கவிழ்த்துக் காட்டுதலாம்.

## தாடனம்

இடது உள்ளங்கையில் மேற் கூறிய மூன்று விரல்களால் மும் முறை தட்டுதலாம்.

## கவச முத்திரை

ஒருபொருளை நோக்கி ஆட்காட்டி விரலால் சுற்றுதலாம்.

## ஆவாகனதத்திற்கு

ஆவாகன காலத்தில் இருகைகளையும் இணைத்து நிமிர்த்தி விரித்துக் காட்டுதல் வேண்டும்.

## தாபன காலம்

ஸ்தாபன காலத்தில் இருகைகளையும் இணைத்துப் பெருவிரல் களைப் பின்னலிட்டுக் கவிழ்த்துக் காட்டுதல் வேண்டும்.

## மலரிடல்

மலர் சமர்ப்பண காலத்தில் இருகைகளையும் இணைத்து நிமிர்த்தி மலர்களை அள்ளிப் போடுதல் வேண்டும். அப்படியே கீழ் நோக்கிக் காட்டுதல் வேண்டும்.

### தேனு முத்திரை

இருகைவிரல்களையும் இணைத்துப் பசுவின் மடுக் காம்புகள் போலத் தோற்றமளிப்பதாகக் காட்டுதல். அபிடேகப் பொருட்கள் பாத்திய நீர் முதலியவற்றில் இம் முத்திரையைக் காட்டுவதால் காமதேனு வின் பால் பொழிந்தது போலாகும் என்கிறார்.

''மிகப் பழங்காலச் சடங்குகளில் கைக் கரணங்கள், பெரிதும் இடம் பெற்றிருந்தன என்பது உறுதி'' என்கிறார் டைரா டி கிரீன்.[27]

## இ பூசனைபுரியும் இனத்தவர்

இத்திருக்கோயிலில் வள்ளி, தெய்வயானை, மூலவர் கோயில் கட்குப் போற்றிமாரும் ஆறுமுகப் பெருமான், நடராசர், சனீசுவ ரர் கோயில் கட்குச் சிவாச்சாரியார் களும் பூசை செய்கின்றனர்.

வடக்குச் சுற்றுலையில் அமைந்துள்ள வேங்கடாசலப் பெருமாள் கோயிலில் சீவைணவ ஆச்சாரியார்கள் பூசை செய்கின்றனர். கோயில் திருப்பணி செய்த மௌனசாமி, காசிசுவாமி, வள்ளி நாயக சுவாமி, ஆறுமுக சுவாமி சமாதிகளிலும் இடும்பன் கோயி லிலும் ஓதுவார் இனத்தவர் பூசை செய்கின்றனர்.

இத்திருக்கோயிலைச் சேர்ந்த வெயிலுகந்தம்மன் கோயிலில் பாரிசைவர் (உவச்சர்) பூசை செய்கின்றனர்.

### போற்றிமார்

மூலவருக்குப் பூசை செய்யும் போற்றிமார் மத்துவ அத் துவைத இனத்தவர். தென்கன்னட மங்களூர் வட்டாரத்தைச் சார்ந்த மங்களபுரத்தைச் சேர்ந்தவர். இவர்கள் இக் கோயிலில் பூசையை ஏற்றுக் கொண்ட காலம் பற்றிப் பலவிதமான கருத்துக் கள் கூறப்படுகின்றன.

1. மகாராசா மார்த்தாண்டவர்மா (கி. பி. 1729 — 1758) இவர்களைக் கொண்டுவந்து இக் கோயிலின் பூசைக்கு அமர்த்தினார் என்கிறார் ஜே. எம். எஸ்.[28]

2. திருமலை நாயக்கரின் (கி.பி. 1623 - 1659) முதலமைச் சரான தளவாய் இராமப்பையன் கி.பி. 17 ஆம் நூற்றாண்டில் மலபாரைப் பிடித்தார். அங்குவாழ்ந்த போற்றிமார்களைக்கொண்டு வந்து அவரே மூலவர் பூசைக்கு ஏற்பாடு செய்தார் என்றும் குறிப்பிடுகிறார் ஜே.எம்.எஸ்.[29]

3. ஒரு காலத்தில் மலையாள அரசர் (பெயர் குறிப்பிடப் பட வில்லை) திருச்செந்தூருக்கு வந்தார். உச்சிக்காலம் முடிந்து கதவு

தாளிடப்பட்டிருந்தது. கதவைத் திறக்குமாறு கூறினுர். பட்டர் கள் மறுத்தனர். அரசருடன் வந்திருந்த போற்றி ஒருவர் கதவைத் திறந்து மூலவருக்குப் பூசை செய்தார். எந் நாளும் சச்சரவின்றிப் பூசை நடைபெற வேண்டி மூலவர், வள்ளி, தெய்வயானை கோயில் களில் போற்றிமார் பூசை செய்ய வேண்டு மென்றும் மற்றப் பூசை களை வழக்கம் போலப் பட்டர்களே செய்யலா மென்றும் ஏற்பா டா யிற்று.[30]

4. 133 ஆண்டுகளுக்கு முன் இக்கோயில் அறங்காவலராக இருந்த தளவாய் குமாரசாமி முதலியார் திரிசுதந்திர ரோடு கொல்லம் 1020 ஆம் ஆண்டு மகர மாதம் 15ஆம் நாள் செய்து கொண்ட ஒப்பந்தப்படி போற்றிகள் கொண்டு வரப்பட்டனர் என்கிருர் திரு. முதலாளி ஐயர்.[31] ஒப்பந்தம் கூறும் செய்தி வருமாறு

" .. நீங்கள் (திரிசுதந்திரர்கள்) ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி மூலத்தானத்தைப் பூசை செய்து வந்தீர்கள். இப்போது உங்களில் பூசைக்குப் படித்த ஆளுகள் [SIC] இல்லாததினுல் அடிக்கடி முட்டு ஏர்படுவதாயும் [SIC] இது முன்னுலேயும் [SIC] சில காலம் மலை யாளம் முட்டலம் மடத்து நம்பூரி மூலமாய்ப் பூசையை நடத்தி வந்ததுபோல் இனி பூசை சரிவர நடத்த மலையாளம் போயி [SIC] மகாராசா அவர்கள் மூலமாய் உங்களுக்குப் பதிலாக நன்ருகப் பூசை படித்த நம்பூரிகளையோ அல்லது அவர்கள் இல்லத்தைச் சேர்ந்தவர்களையோ கொண்டுவந்து பூசையைச் செய்வதாயும் அது வகைக்கு நூறுபணம் வீதம் நம்பூரியிடம் பெற்றுக் கொள்வதாயும் நீங்கள் சொல்லுகிற படியால் மூலர் [SIC] பூசை முறையை அதன் படி நடத்த உத்திரவு [SIC] செய்யப்பட்டது, பின் நீங்கள் பூசை மந்திரம் படித்துவந்து கேட்டால் உங்களுக்குத் திரும்பச் சாசனம் அளிக்கப்படும்"

இதனுல் கி. பி. பதினெட்டாம் நூற்ருண்டிற்குப்பின் இடைக் காலத்தில் மூலவர் பூசை திரிசுதந்திரர் வசம் இருந்திருக்கலாம் என எண்ணத்தோன்றுகிறது.

### போற்றிமார் பூசை முறை

நாள் வழிபாட்டில் போற்றி மார் இரு பிரிவினராகப் பணி புரிகின்றனர். அபிடேகம் ஆராதனை நிகழ்த்தும் போற்றிமார் 'மேல் சாந்திப் போற்றிமார்' என்றும், அபிடேகத்திற்குக் கடற் கரைக் கிணற்றிலிருந்து தண்ணீர் கொணர்தல், நைவேத்தியம் சமைத்தல், சீபலியைத் தூக்கி வலம் வருதல், மூலவர் முன் விபூதிப் பிரசாதம் வழங்குதல் முதலிய பணிகளைச் செய்பவர் 'கீழ் சாந் திப் போற்றிமார்' என்றும் வழங்கப்படுகின்றனர்.

மேல் சாந்திப் போற்றிமாரில் ஒருவர் பணி ஓய்வு பெறும் பொழுது கீழ்சாந்தியினரில் முது நிலை (seniority) யுற்ற ஒருவர் பதவி உயர்வு பெற்று மேல் சாந்திப் போற்றியாகிறார்.

## மேல் சாந்திப் போற்றிமார் முறை

தமிழ் மாதம் முதல் நாள் தொடக்கம்.

1 வ — 5 வ திரு. வேங்கடாசலம் போற்றி

6 வ — 10 வ திரு. புருஷோத்தம் போற்றி

11 வ — 15 வ திரு. இலட்சுமி நாராயண போற்றி

16 வ — 20 வ திரு. இராம கிருஷ்ணன் போற்றி

21 வ – 25 வ திரு. கோபாலன் போற்றி

26 வ — மாத முடிவு - திரு. விட்டலம் போற்றி

இப்போற்றிமார் மூலவர் பூசை முறையின் போது ஐந்து நாட்களும் கோயிலிலேயே தங்கியிருப்பர். மூலவர் பூசை முறை தவிர உதவியாக ஐந்து நாட்களும், பிள்ளையார் முறை ஐந்து நாட்களும், அம்மன் கோயில் முறை ஐந்து நாட்களுமாக மாதத்தில் இருபது நாட்கள் பணி புரிகின்றனர்.

## கீழ்சாந்திப் போற்றிமார்

மாதம் முப்பது நாட்களும் விபூதிப் பிரசாதம் வழங்குபவர் — இராமன் போற்றி,

## மடைப் பள்ளி வேலை

1 வ முதல் 15 வ முடிய 1. திரு. கேசவன் போற்றி
2. திரு. பத்மநாபன் போற்றி
3. திரு. சர்வச்சன் போற்றி

16 வ முதல் மாதம்முடிய 1. திரு. முத்துப் போற்றி
2. திரு. சீனிவாசன் போற்றி
3.

## சிவாச்சாரியார் (பட்டர்கள்)

இவர்கள் ஆறுமுக நயினார், நடராசர், வீரபாகு மூர்த்தி, சனீசுவரர், வைரவர் ஆகிய கோயில்களில் பூசை செய்கின்றனர். திருவிழாக்களுக்குக் காப்புக் கட்டும் உரிமை இவர்களிடமே உள்ளது.

பண்டாரகத்தவர் என்னும் சொல் சிதைந்து பண்டாரத்தார் ஆகி ணகரம் டகரமாகி பட்டாரத்தார், பட்டாரர், பட்டர் ஆயிற்று என்பர். [32] இவர்களை 'ஸ்தானத்தார்' என்பர்.

''பராசர முனிவரின் மக்கள் அறுவருமே ஆறுமுக நயினருக்கும் மூலவருக்கும் பூசை யாற்றி வந்ததாகத் தெரிகிறது. இப்பவும் ஆறு பட்டர்களுக்குத் தான் முறை வகுக்கப்பட்டு ஆறு முறை யாகவே வழி வழி வந்து கொண்டிருக்கின்றது'' என்கிறுர் திரு மு.ப.

ஒரு முறை காரர் குடும்பத்தில் சூதகம் (தீட்டு) ஏற்பட்டால் அவர் முறையைப் பார்ப்பதற்காக ஏழாம் பங்கு ஏற்பட்டது என்கிறுர் திரு சி. ச. மகாராச பட்டர்.

## சிவாச்சாரியார் முறை

*தமிழ் மாதம் 1 வ தொடக்கம்.*

*1வ 3வ உச்சிக்காலம் முடிய*
1. திரு. S.G சண்முக சுந்தர சிவாச்சாரியார்
2. திரு. ஆறுமுகப்பட்டர்.

*3 வ இரவு முதல் 5வ இரவு முடிய*
1. திரு. மு. சுப்பையாப்பட்டர் (திருமதி சின்னு அம்மாள் நியமனம்)
2. திரு. மு. பாபநாசப் பட்டர் (திருமதி சோமு அம்மாள் நியமனம்)

குறிப்பு: வாரிசு இல்லாதவர் வேறொருவரை நியமிக்கலாம்.

*6 வ காலை முதல் 8 வ உச்சிக்காலம் முடிய*
1. திரு. வீ.சுந்தரப்பட்டர் $1\frac{1}{4}$ நாள்
2. திரு. வெ. சுப்பிரமணியப்பட்டர்
3. திரு. வி அரிகரபட்டர் $1\frac{1}{4}$ நாள்

*8 வ இரவு முதல் 10வ முடிய*
1. திரு. தந்திரி மு.சுப்பையாப்பட்டர் $1\frac{1}{4}$ நாள்
2. திரு. தந்திரி கோ. சுப்பிரமணியப் பட்டர் $1\frac{1}{4}$ நாள் (தந்திரிப்பட்டர் மரபினர்)

*11 வ காலை முதல் 15 வ இரவு முடிய*
1. திரு. சி. ச. மகாராசப்பட்டர்
2. திரு. பி. இராமசாமிப்பட்டர்
3. திரு. கு. முத்துசாமிப்பட்டர் (மூன்றும் பங்கு மரபினர்).

*16 வ காலை முதல் 18வ உச்சிக் காலம் முடிய*
1. திரு. ஆ இராமசுப்புப்பட்டர் $1\frac{1}{4}$ நாள்
2. திரு. சா. சண்முக சுந்தரப்பட்டர்
3. திரு. மு. தருமராசப்பட்டர் வகை $1\frac{1}{4}$ நாள்

18 ஆம் தேதி இரவு முதல் 20 ஆம் தேதி முடிய 1. திரு. கு. சுப்பையாப் பட்டர் $1\frac{1}{4}$ நாள்
2. திரு. ச. சுப்பிரமணியப் பட்டர் $1\frac{1}{4}$ நாள்.

21ஆம் தேதி காலை முதல் 23ஆம் தேதி உச்சிக்காலம் முடிய
1 திரு. வீ. முத்துசுவாமிப் பட்டர்
2 திரு. வீ. சுப்பையாப் பட்டர்—$2\frac{1}{2}$ நாள்

(இவர்கள் நாலாம் பங்கு வம்சத்தினர்)

23ஆம் தேதி இரவு முதல் 25ஆம் தேதி முடிய
1 திரு. மு. பாவநாசப் பட்டர் $1\frac{1}{4}$ நாள்
2 திரு. சு.முத்தையாப் பட்டர் $1\frac{1}{4}$ நாள்

(இவர்கள் முதற்பிடி வம்சத்தினர்.)

26ஆம் தேதி காலை முதல் 28ஆம் தேதி உச்சிக்காலம்முடிய
1 திரு. மு. மகாராசப் பட்டர் $1\frac{1}{4}$ நாள்
2 திரு. அ. பெருமாள்ப்பட்டர் $1\frac{1}{4}$ நாள்

(இவர்கள் புறவூர் வம்சத்தினர்)

28ஆம் தேதி இரவு முதல் மாதம் முடிய உள்ள நாட்கள்.
1 திரு. அ. இராமசாமிப் பட்டர்.

(இவர் முதல் பங்கு வம்சத்தினர்.)

பட்டர்களில் பெரும்பாலோர் முறை நாள் குறைவானதால் வெளியூர்களிலே யுள்ளனர்.

## ஸ்ரீ வைணவ ஆச்சாரியார்

இங்குள்ள வேங்கடாசலப் பெருமாள் கோயிலில் பணிபுரியும் ஆச்சாரியர்கள் நாயக்க மன்னர் காலத்தில் நியமனம் பெற்றதாகக் கூறப்படுகிறது.

1 ஆம் தேதி முதல் 8 ஆம் தேதி முடிய! திரு. கோ. இராமகிருஷ்ண ஐயங்கார்

9 ஆம் தேதி முதல் 12 ஆம் தேதி உச்சிக்காலம் முடிய
1. திரு. எல். ரெங்க ஐயங்கார்
2. திரு. ஆர். இலட்சுமண ஐயங்கார்

12 ஆம் தேதி மாலை முதல் 15 ஆம் தேதி முடிய 1 திரு. சேஷ ஐயங்கார்

16 ஆம் தேதி முதல் 23 ஆம் தேதி மதியம் முடிய திரு ஆர். வெங்கடகிருஷ்ண ஐயங்கார்

23 ஆம் தேதி முதல் 30 ஆம் தேதி முடிய திரு. ஆதிமூல ஐயங்கார்.

**ஓதுவார்கள்:**

இவர்கள் இக்கோயிலைச் சுற்றியுள்ளனவும் இக்கோயிலுக்குப் பாத்தியப்பட்டதுமான கோயில்களில் பூசாரிகளாகப் பணியாற்றுவதோடு பூப்பண்டாரங்களாகவும், தேவாரம், திருப்புகழ் ஓதுபவர்களாகவும் பணிபுரிகின்றனர்.

## பூசைசெய்யும் ஓதுவார்கள்

1 இடும்பன் கோயில் — திரு. வீரவாகு ஓதுவார்
2 ஆறுமுக சுவாமி சமாது — திரு. கல்யாணி ஓதுவார்
3 மௌனசுவாமி சமாது — திரு. கல்யாணி ஓதுவார்
4 வள்ளிநாயக சுவாமி சமாது — திரு. ஆர். நடராச ஓதுவார்
5 முத்தாரம்மன் கோயில் — ,,
6 உச்சினிமாகாளியம்மன்கோயில் — திரு. கனகு ஓதுவார்
7 குன்னிமலை சாஸ்தா — திரு. இசக்கி ஓதுவார்

## பூப்பண்டாரங்கள்

இவ்வூரில் ஏறத்தாழ நாற்பது குடும்பங்களைச் சேர்ந்த ஓதுவார்கள் பூக்கட்டும் தொழிலில்ஈடுபட்டுள்ளனர். திருவாவடுதுறை ஆதீனத்தார் ஆவுடையார் குளத்திற்கு மேற்கே நந்தவனங்களை அமைத்து இவர்கட்குப் பகுத்துக் கொடுத்திருந்தனர். பூமாலை தொடுப்பவர் இருவகையினராகப் பணிபுரிகின்றனர். கோயிலிலிருந்து சோற்றுக்கட்டி பெறுபவரென்றும், ரொக்கப் பணம் பெறுபவரென்றும் அவரைப் பிரிக்கலாம்.

காலையிலே மாலைகளைச் சேர்க்கும் பொறுப்புடைய ஓதுவார்களைப் 'படுக்கை முறை ஓதுவார்' என அழைப்பர். ஒவ்வொரு நாளும் ஒருவர் பொறுப்பாவார். அவர்கள் பெயர்கள் வருமாறு:

| நாள் | பொறுப்பு | தினம்பெறும் சோற்றுக் கட்டிகள் |
|---|---|---|
| திங்கள் | திரு. ஆர். சொக்கலிங்கம் | 5 |
| செவ்வாய் | திரு. தட்சிணாமூர்த்தி ஓதுவார் | $2\frac{1}{4}$ |
| புதன் | திரு. சுந்தர ஓதுவார் | 6 |
| வியாழன | திரு. வேலாயுத ஓதுவார் | $1\frac{1}{4}$ |
| வெள்ளி | திரு. தீர்த்தாரப்ப ஓதுவார் | $2\frac{1}{2}$ |
| சனி | திரு. ஆர். சொக்கலிங்க ஓதுவார் | $2\frac{1}{4}$ |
| ஞாயிறு | திரு. சி. சுப்பையா ஓதுவார் | $4\frac{1}{4}$ |

**சொக்கப் பணம் பெறுபவர்:**

சோற்றுக்கட்டி பெறுபவர்களால் நறுமணமுள்ள மாலைகளை அளிக்க இயலவில்லை. ஆகவே எட்டு ஆண்டுகளுக்கு முன் நாள் தோறும் ரூ 45/ கொடுத்து மாலைகளைப் பெறத் திருக்கோயிலார் ஏற்பாடு செய்துள்ளனர். இப்பொறுப்பினைத் திரு செந்தி ஓது வாரும் திரு அம்மு ஓதுவாரும் ஏற்று நடத்திவருகின்றனர்.

**தேவாரம், திருப்புகழ் பாடுவோர்**

இக்கோயிலில் தேவாரம், திருப்புகழ் பாடுவதற்கென முன்பு எட்டுக் குடும்பத்தினரே இருந்தனர். இன்று ஐந்து குடும்பத்தினரே உள்ளனர்.

**தேவார முறைகாரர்:**

1 திரு. ஆர். நடராச ஓதுவார்
2 திரு. மு. இராமசாமி ஓதுவார்

**திருப்புகழ் முறைகாரர்:**

1 திரு. அ. இராமசாமி ஓதுவார்
2 திரு. வே. ஞானசம்பந்த ஓதுவார்
3 திரு. மு. இராமசாமி ஓதுவார்

இவர்களது ஊதியம் சோற்றுக் கட்டிகளாகவே வழங்கப் படுகிறது. தேவாரம் பாடுவோர் காலையில் ஆறுமுகப் பெருமானுக்குப் படைக்கப்படும் சிறுபருப்புக் கஞ்சியும் பன்னிரண்டு கட்டிச் சோறும் பெறுகிறார்.

திருப்புகழ் பாடுவோர் ஒருநாளைக்குச் சோற்றுக்கட்டிகள் எட்டும் மாலையில் வீரபாகு மூர்த்திக்குப் படைக்கப்படும் பிட்டமுதில் அரைப்படியும் பெறுகிறார்.

**தேவார கோஷ்டி:**

முறைப்படி இசைபயின்றவர்களைத் திருக்கோயிலில் நியமனம் செய்ய வேண்டுமென்ற திட்டத்தின் படி கி பி. 1960 ஆம் ஆண்டில் கீழ்க் கண்டோர் நியமனம் பெற்றுள்ளனர்.

பாடகர்: 1 திரு. நமசிவாய ஓதுவார்
2 திரு. சங்கர ஓதுவார்
3 திரு. செ. சங்கர ஓதுவார்

பிடில் இசைப்பவர்: திரு. அ. பொன்னுசாமி

மத்தளம் இசைப்பவர்: திரு. எம். இராசகோபால்

இவர்கள் காலையில் உள்ளூர்ச் சிவன் கோயிலிலும் இரவில் 7 மணிமுதல் 8மணிவரை அருள்மிகு சுப்பிரமணிய சுவாமிகோயிலிலும் பாடுகின்றனர்.

## இராக்காலப் பாடகர்

இரவில் ஏகாந்த காலத்தில் திருவாளர்கள் ஆர். சரவணமுத்து பாகவதர். கே. முத்துசுப்பிரமணிய பாகவதர் ஆகிய இருவரும் முறைவைத்து தம்புரா சுருதியுடன் பாடிவருகின்றனர். பள்ளியறையில் நலுங்குப் பாடலும் ஊஞ்சல் பாட்டும் பாடுகின்றனர்.

ஆங்கில மாதம் 1 ஆம் தேதி முதல் 15 ஆம் தேதி வரை திரு. முத்து சுப்பிரமணிய பாகவதர்.

15 ஆம் தேதி முதல் மாத முடிவு வரை திரு ஆர். சரவணமுத்து பாகவதர்.

இவர்கள் மனோதர்ம சங்கீத அடிப்படையில் விருத்தங்கள், பிள்ளைத்தமிழ், திருப்புகழ், சமஸ்கிருதப்பாடல் மற்றும் தெலுங்குப் பாடல்களும் பாடுகின்றனர்.

## முக்காணியர்

இவர்களை வடமொழியில் 'திரிசுதந்திரர்' என அழைப்பர். கோயில் பொறுப்பு முழுவதும் ஒரு காலத்தில் இவர்களிடமே இருந்தது. இவர்கள் 'ஸ்தலத்தார்' என்றும் பெயர் பெறுவர். அன்பர்களிடமிருந்து கட்டளைப் பணம் வசூலித்து அன்பர் குறிப்பிடும் நாளில் அருச்சனை செய்து விபூதிப்பிரசாதம் அனுப்பி வைப்பதால் 'கட்டளை ஐயர்' என்றும் பெயர் பெறுவர். 'தில்லை மூவாயிரவர், செந்தில் ஈராயிரவர்' என்ற பழமொழி வழங்குவதால் இக்கோயிலில் ஒரு காலத்தில் ஈராயிரம் முக்காணியர் பணிசெய்து வந்தனர் என்பதை அறிகிறோம்.

## வரலாறு

கங்கைக் கரையில் தவம்செய்து கொண்டிருந்த முனிவர்கள் இவர்கள் என்றும் பிரமனிடமிருந்து மண்ணுலகு, விண்ணுலகு, சத்திய உலகு ஆகிய மூன்று உலகங்களிலும் சுதந்திரமாக வாழும் வரம்பெற்றனர் என்றும் திருச்செந்தூர்த் தலபுராணம் கூறும்.[33]

தண்பொருநைக் கரையிலே தவமியற்றிக் கொண்டிருந்த எழுபத்தெண்ணாயிரம் முனிவரில் ஈராயிரவர் திருச்செந்தூரில் குடியேறினர் என்பர்.[34]

கொற்கையில் ஆண்ட பாண்டியர் முக்காணியர்களைச் சுப்பிரமணிய சுவாமி கோயிலில் பணி செய்ய அமர்த்தினர் என்ற குறிப்பினால் நெடுங்காலத்துக்கு முன்பே இவர்கள் இவ்வூரில் குடியேறியுள்ளமை புலனாகும்.[35]

முருகன் சூரபன்மனோடு போரிட இவ்வூருக்கு வந்த காலத்திலேயே தாமும் முருகன் பணிசெய்ய வந்ததாகக் கூறுகின்றனர்.

## பணிகள்

நாள் வழிபாட்டில் இவர்கள் ஆற்றிவரும் பணிகளாவன: அணிகலன்கள்மற்றும் பாத்திரங்களை கருவூலத்திலிருந்து எடுத்துக் கொடுத்தல், திரும்ப வாங்கி வைத்தல், பஞ்சாங்கம் படித்தல், கட்டியம் கூறுதல், மடைப்பள்ளியில் சண்முகருக்கு நிவேதனம் சமைத்தல், செந்தில்நாயகரை அன்போடு சுமந்து உலாவருதல், திருமேனி காவல், சந்தனம் அரைத்தல், அருச்சனை செய்தல், வழிகாட்டுதல் மற்றும் கட்டளைகளை நிறைவேற்றுதல்.

## பிரிவுகள்

கருவூலத் திருவாபரணக் கையாட்சி நடத்துவோர் நான்கு பிரிவினராவர்.

| | | |
|---|---|---|
| முதற்படி | — செண்பகச்சேரி இல்லம் | — வாகன அறைப் பொறுப்பு |
| இரண்டாம்படி | — மாற இல்லம் | — கருவூலப் பொறுப்பு |
| மூன்றாம்படி | — கீழ இல்லம் | பெரிய செப்பு (திருவிழாக்கால அணிகலன்கள்) |
| நாலாம்படி | — திரு அயோத்தி இல்லம் | — படிச்செப்பு(நாள் வழிபாட்டிற்குரியன) |

## கெசட்டு கூறும் செய்தி

திருநெல்வேலிக் கெசட்டு இவர்களுக்கும் கோயிலுக்குமுள்ள தொடர்பு பற்றிக் கூறுவதாவது:[36]

''முக்காணியப் பிராமணர் திருச்செந்தூரில் ஆயிரவருக்குக் குறையாத எண்ணிக்கையுடையவர் வாழ்கின்றனர். அவர்கள் சுப்பிரமணியர் கோயிலுடன் ஆர்வத்தோடு தொடர்பு கொண்டுள்ளனர். திருச்செந்தூருக்குச் சுப்பிரமணியர் வந்தபோது இரண்டாயிரம் முக்காணியக் குடும்பத்தினரைத் தனது திருப்பணிக்காக அழைத்து வந்தார். இவர்கள் கட்டளைப் பணம்

வசூலித்து வெளியூர் அன்பரது நேர்த்திக் கடன்களைச் செலுத்து கின்றனர். மலையாளிகளைப் போல முன்குடுமி வைத்துள்ளனர். நாடு முழுவதும் சுற்றி அலைந்து திருவிழாக்களுக்கு வேண்டிய பணம் வசூலிக்கின்றனர், இவர்களது பணி பயன் கருதியதே என்பதில் ஐயமில்லை. பொதுவாக இவர்கள் வசதி படைத் தவர்கள். ஆயினும் ஆங்கிலக் கல்வியில் கவனம் செலுத்துதல் அவசியமானதாகும்.

## தமிழரே

திருநெல்வேலிக் கெசட்டு இவர்கள் மலையாளிகளைப் போல முன்குடுமி வைத்துள்ளனர் என்பதாலும், 'இல்லம்' என்ற சொல் மலையாளக் குடும்பத்தின் பெயராகும் என்பதாலும் இவர்களைக் கேரள நாட்டினர் எனக்கருதுவாருமுளர். ஆனால் இவர்களது பழக்கவழக்கங்கள் தமிழரது பழக்கவழக்கங்களேயாகும். எடுத்துக் காட்டாகத் திருமணத்தில் தாலிகட்டும்போது குரவையொலி எழுப்புதலைக் கூறலாம்.[37]

## கட்டியம் கூறுவோர்

முக்காணியர் மூன்றுகுடும்பத்தினர் கட்டியம் கூறும் பணியில் ஈடுபட்டுள்ளனர்.

தமிழ்மாதம் 1உ - 10உ திரு ஐயப்பஐயர் குடும்பத்தினர்
11உ - 20உ திரு க. வீரபாகு ஐயர் குடும்பத்தினர்
21உ - மாத முடிவு திரு சரவண ஐயர் குடும்பத்தினர்

## தேவதாசிகள்

திருச்செந்தூர்க் கோயிலின் நாள் வழிபாட்டிலும் திருவிழாக் களிலும் இவர்கள் இடம் பெற்றிருந்தனர். மன்னனை மகிழ்விக்க விறலியர் ஆடிவந்ததுபோல் இறைவன் திருமுன்பும் ஆடல் நிகழ்த் தினர். ''அரசரின் அரண்மனைகளில் அரசனைப் பாட்டாலும் கூத்தாலும் மகிழ்விக்கும் மகளிர் பலர் இருந்தனர். அவ்வாறே ஆலயங்களிலும் அவ்வகை மகளிர் பலர் இருந்தனர்'' என்கிறார் ந. சி. கந்தையா.[38]

## பெயர்

இவர்கள் 'தேவரடியார்கள்' எனவும் 'பதியிலார்' எனவும், 'பொட்டுக்கட்டிகள்' எனவும் 'உருத்திர கணிகையர்' எனவும் அழைக்கப் பட்டனர்.

'பொட்டுக் கட்டுதல்' என்றால் இறைவன் திருப்பணிக்காகத் தம்மை வரித்துக் கொள்ளுதல். பூமாலையினுள் தாலியை மறைத்து வைத்து இறைவனுக்குச் சாத்திய பின் வாங்கித் தங்கள் கழுத்தில் கட்டிக் கொள்வது வழக்கம். இறைவன் பிரதிநிதி யாகச் சிவாசாரியார்கள் தாலி கட்டுதலுமுண்டு.

### பணிகள்

ஐந்து வயது தொடங்கிப் பன்னிரண்டு வயது முடியப் பரதம் பயில்வர். திருக்கோயிலில் அலகிடுதல் (பெருக்குதல்) மெழுகு தல், கோலமிடுதல், மாவிடித்தல், விளக்கேந்துதல், முதலிய பணி களையும் ஆடல் பாடலோடு செய்து வந்தனர். இத்திருக்கோயி லில் ஏறத்தாழ இருபத்தைந்து தேவதாசி குடும்பத்தினர் பணி புரிந்தனர். இவர்கள் 'உதய முறைக்காரி' என்றும், 'எட்டுக் குடிக்காரி' என்றும் இரு பிரிவினராக வாழ்ந்து வந்தனர்.[39]

### உதயமுறைக் காரிகள்

நாள் வழிபாட்டில் உதயமார்த்தாண்டம், உச்சிக்காலம், இராக்காலம் ஆகிய காலங்களில் திருமுழுக்கு நடைபெறும் காலத்து இவர்கள் மூலவர் முன் நின்று ஆடுவர். உட்காரும் பாவனையில் நின்று கைகளை மட்டும் ஆட்டுவர். பார்வையை மூக்கு நுனியில் நிறுத்துவர். இதற்குக் 'கையாட்டல்' என்று பெயர்.[40] அப்போது பாடப்படும் பாடல் கௌத்துவம் எனப்பட் டது. திருவிழாக்காலத்தில் இவர்கள் இயற்றிய பணிகளைத் திரு விழாக்கள் என்ற இயலில் காணலாம். உதய முறைக்காரி பற்றிய கதையொன்று' தூண்டி விநாயகர் என்ற தலைப்பில் கொடுக்கப் பட்டுள்ளது.

### எட்டுக்குடிக்காரிகள்

இவர்கள் உதய முறைக்காரிகளுக்குப் பின்பு வந்து குடியேறிய தாகக் கூறுகிறார் திருமதி சங்கர காந்தம்மாள். ஆறுமுகப் பெருமான் மலையாளத்திலிருந்து வந்தபோது அவருடன் வந்து திருச்செந்தூரில் குடியேனறிராம். எட்டுக்குடிக்காரிகள் இத் திருக்கோயிலில் அலகிடுதல், பொரிப்பொரித்தல், மாவிடித்தல், நைவேத்தியம் கொண்டு செல்லும் போதும் சீபலி எழுந்தருளும் போதும் விளக்கு ஏந்திச் செல்லுதல், பள்ளியறையில் தம்புரா வுடன் ஊஞ்சல் பாட்டுப் பாடுதல், முதலிய பணிகளைச் செய்து வந்தனர்.

### மற்றுமொரு கதை

திருச்செந்தூரில் வாழ்ந்த தேவதாசி ஒருத்தி முருகப்பெருமா னிடம் மிகுந்த பக்தியோடு பணி செய்து வந்தாள். ஒரு நாள் பள்ளியறையில் பாடி முடித்து வீடு திரும்பினாள். ஏராளமான அணிகள் அணிந்திருந்தாள். அவளது அணிகளைக் கவர எண்ணிய கயவர் இருவர் அவளைப் பின் தொடர்ந்தனர். அதை அறியாத அம்மையாா வெற்றிலைக் காம்பைக் கிள்ளி 'முருகா' என்று கூறி எறிய, அக்காம்பு வேலாக மாறி அக்கயவர்களைக் கொன்று அவ் வம்மையாரைக் காத்தது.[41]

## முறைக்காரி

இசையையும் நடனக்கலையையும் வளர்த்து வந்த இவர்களின் ஒழுக்கக் குறைவு காரணமாக அரசு பொட்டுக் கட்டும் வழக்கத்தை ஒழித்தது. ஆயினும் இன்னும் இவர்கள் பெயர் கோயில் பதிவேடுகளிலிருந்து எடுபடவில்லை. ஆண் பணியாளர் இன்று இவர்கள் பணியைச் செய்து வந்த போதிலும் கோயிலின் 'திட்டம்' இவர்களை 'முறைக்காரி' என்றே குறிப்பிடுகிறது.[42]

## காணியாச்சி

காலையில் நடைதிறக்கும் போது சங்கு ஊதுதல், தேவாரம் பாடி முடிந்தபின் சங்குஊதுதல், திருமுழுக்கு நேரத்தில் சேகண்டி தட்டுதல், சீபலி எழுந்தருளும் போது செண்டை அடித்தல் மற்றும் பஞ்சவாத்தியங்கள்[43] முழக்குதல், திருமுழுக்குக் கேளிக்கை (ஆடல்) யின் போது மத்தளம் வாசித்தல், கலச பூசை, தீபாராதனையின் போது தாளம் தட்டுதல் முதலிய பணிகளைச் செய்து வருகின்றனர்.

## முறை

இவர்கள் நான்கு பங்காளிகள். தமிழ் மாதத் தொடக்கத்திலிருந்து ஆளுக்கு எட்டு நாட்கள் பணி செய்கின்றனர். அவர்களின் பெயர்கள்: திரு. தங்கவேல், திரு. எம். இராசகோபால், திரு. சண்முகம், திரு. கருணமூர்த்தி. மாத ஊதியமும் கட்டிச் சோறும் பெறுகின்றனர். இத்திருக் கோயிலைச் சேர்ந்த வெயிலுகந்தம்மன் கோயில் பூசாரிகளாகவும் பணிபுரிகின்றனர்.[44]

## மேளம்

நாதசுர இசை இசைப்பவரைக் கோயில் பதிவேடு இவ்வாறு குறிப்பிடுகிறது. இங்கு வழி வழி மேளம், சிறப்பு மேளம் என இருவகையினர் உள்ளனர். திரு. கிருஷ்ணக்கம்பர் வழி வழி மரபினர். கி. பி. 1954 ஆம் ஆண்டில் வருமானம் மிக்க கோயில்களில் சிறப்பு மேளம் வாசிப்பவரை நியமிக்கலாம் என்ற விதியின்படி திரு. வேம்புக்கம்பர் (பழநி நாதசுரக்கல்லூரியில் பயின்றவர்) பணியாற்றி வருகிறார். இவர் உதய மார்த்தாண்டம், சாயுங்காலம், இராக்காலம் ஏகாந்தம், ஆகிய காலங்களில்மட்டும் வாசிக்கிறார்.

## சமைப்பவர்

ஆறுமுகப் பெருமானுக்கு முக்காணியரே நைவேத்தியம், பலகாரம் சமைக்கின்றனர். தெத்தியான முறை, பலகார முறை கிடாரம் பூச்சு முறை, சந்தனம் அரைத்தல் முறை ஆகியவற்றை

முறை வைத்துச் செய்து வருகின்றனர். திருமஞ்சன நீர் (சண்முகர் மற்றும் சுற்றுத்தேவர்கட்கு) சுமந்துவருதலும் இவர்கள் பணி.

## நட்டுவன் தாளம்

தேவ தாசி முறை ஒழிக்கப்பட்ட பின்னரும் நட்டுவன் தாளம் தொடர்கிறது. திருமுழுக்கின் போது பாடுதல், சீபலி ஐந்தாம் சுற்றில் கைத்தாளம் அடித்தல், திருவிழாக் காலத்தில் (தேவதாசிகளுக்குப் பதிலாக) ஆடுதல் ஆகிய பணிகள் செய்கின்றனர்.

திரு கே. இசக்கியும் திரு. எம். சக்திவேலும் இப்பணி புரிகின்றனர்.

## துப்புரவுப்பணி

இருபத்து நான்குபேர் இப்பணி செய்கின்றனர்.

## திருமுழுக்கு அறை

திருமுழுக்குக்குரிய இளநீர், பழம், எண்ணெய், தைலம், தேன் முதலியவற்றை எடுத்துக் கொடுப்பதோடு பரிவட்டம், பட்டாடை முதலிய ஆடைகளையும் கொடுத்து வரும் பணி செய்பவர் திரு. பரமசிவக்குருக்கள்.

## மாவிடிப்பு

நிவேதனத்திற்குரிய பிட்டமுது, தேங்குழல், அப்பம் ஆகியவற்றிற்காகப் பச்சரிசியினை உரலிலிட்டு இடித்து மாவாக்கிக் கொடுப்பவர். ஒருநாளைக்கு ஐந்துபடி அரிசி இடிக்கப்படுகிறது. இப்பணிசெய்பவர் திருமதி.சுப்பம்மாள்.

## முறைக்காரி

தேவதாசிகள் செய்து வந்த அலகிடும் பணியை இன்று பதினாறு பேர் செய்து வருகின்றனர். கைவிளக்கேந்திச் செல்லும் பணியும் செய்கின்றனர்.

## காவல்காரர்

பாத்திரங்கள், விளக்குகள் ஆகியவற்றைத் துடைத்துக் கொடுக்கும் பணியினைத் திரு. பேச்சி, திரு. ஆழ்வார் ஆகிய இருவரும் செய்துவருகின்றனர்.

## தீபம்

விளக்குகளுக்குத் திரியிட்டு எண்ணெய் ஊற்றி ஏற்றி வைப்பவர்களைப் 'பலவேலை' என அழைக்கின்றனர். திரு. சுப்பையா, திரு. ஆறுமுகம் என்னும் இருவர் இப்பணி செய்கின்றனர்.

மின் விளக்குகளும் ஒலிபெருக்கியும் தனித் துறையின் பொறுப் பிலுள்ளன.

### யானைமாவுத்தர்

இருவர் பணிபுரிகின்றனர். ஆண்யானை யொன்றும், பெண் யானை யொன்றும் இவர்கள் பொறுப்பிலுள்ளன. நாடோறும் காலை யிலும் மாலையிலும் யானைகளைக் கோயில் வாசலில் நிறுத்துதல், திருவிழாக்காலத்தில் பல்லக்கின் முன் யானைகளை நடத்திச் செல்லு தல் இவர்கள் பணி.

### பல்லக்குச் சுமை

நாள் வழிபாட்டிலும் திருவிழாக் காலங்களிலும் செந்தில் நாத ரைச் சுமக்கும் முக்காணியர்'சீர்பாதம்' எனப்பெயர் பெறுகின் றனர். பணிக்கேற்ற அளவு ஊதியம் பெறுகின்றனர்.

### புரோகிதம்

தானம் பெறுதல், வள்ளி, தெய்வயானைதிருமணக்காலங்களில் மந்திரம் கூறி மணமுடித்தல் முதலிய பணிகளைச் செய்து வருகிறுர் புரோகிதர் திரு. சின்னையா வாத்தியார்.

### சாஸ்திரி

ஐப்பசி மாதம் துலாபுராணம் (மாகபுராணம்) படித்தல் இவரது பணி திரு. தேவராச சாஸ்திரி இப்பணி செய்கிறுர்.

### கொத்தனுர்

சப்பரங்கள் கட்டுதல் இவர்பணி. திரு. இசக்கியாபிள்ளை இப் பணி செய்கிறுர்.

### சாம்பிராணிப் பணிவிடை

வள்ளியம்மன், தெய்வயானையம்மன் கோயில்களின் முன் சாம் பிராணி தூபம் போடும் பணியினைத் திரு. ஆறுமுகம்பிள்ளை, திரு. சம்பந்தம் ஆகிய இருவரும் செய்து வருகின்றனர். திருக்கோயில் நிர்வாகம் சாம்பிராணியைக் கொடுத்து வருகிறது.

### நாழிக்கிணறு துப்புரவு

திரு. இ. நயினுர் இப்பணியினைச் செய்து வருகிறுர்.

### தண்ணீர்ப்பந்தல்

தேவதான அலுவலகத்திற்கு எதிரேயுள்ள தண்ணீர்ப் பந்தலில்திரு. மகராசன், திரு. சுப்பிரமணியன் ஆகியோர் பணிபுரிகின்றனர்.

**மணியடி பாரா**

மணியடிக் காவலர் இருவர் மூன்று திங்கள் பணிபுரிவர்- ஏனையவர் முறைவந்ததும் இவர்கள் வேறு இடங்களுக்கு மாற்றப் படுவர்.

**விதாயகர்**

நித்ய, நைமித்திகங்களுக்குரிய நல்ல வேளையை நிச்சயித்தல், திருக்கோயில் நாட்குறிப்பு ஆயத்தம் செய்தல் முதலியன இவரது பணி. திரு. எஸ். வேம்பு சாஸ்திரிகள் இப்பணிபுரிந்து வருகிறார்.

**திருவாபரணம்**

நகைப் பொறுப்பினை ஏற்றுக் கண்காணிப்பவர் பதினறு பேர் உள்ளனர். இவர்களனைவரும் முக்காணியரே.

**படைப்பு**

நிவேதனத்தை மடைப்பள்ளியிலிருந்து இறைவன் திருமுன் சேர்ப்பவர்.

**பிச்சைப் பால்**

உச்சிக்காலத் திருமுழுக்குக்குரிய பாலினை ஊரினுள் வீடு வீடாகச் சென்று சேகரித்துக் கொடுப்பவர் இப்பெயர் பெறுகிறார். ஆறுமாதங்களுக் கொருவராகத் திரு. முருகன், திரு. ஆறுமுக ஓதுவார் ஆகிய இருவரும் பணிபுரிகின்றனர். இதற்காகத் திருவாவடுதுறை ஆதீனத்தார் ஊதிய மளிக்கின்றனர்.

**தாஞவதிப்பிள்ளை**

ஊருக்குப் பெரியவர் இவ்வாறு அழைக்கப்படுகிறார். சுவாமி எழுந்தருளும் காலத்தில் உடன் சென்று சண்டை சச்சரவு வராமல் பாதுகாப்பவர். திரு. தேசிக மூர்த்திப்பிள்ளை இப்பணி செய்கிறார்.

**சாரங்கி**

சாரங்கி என்னும் இசைக்கருவியை மீட்டித் தேவாரம் பாடுபவர் சாரங்கி ஓதுவார் எனப்படுவார். திருமுழுக்கின் முடிவில் குமரவிடங்கப் பெருமான் திருமுன் இன்று சுருதிப் பெட்டியுடன் திரு. இராமசாமி ஓதுவார் பாடிவருகிறார். சாரங்கிக்குப் பதில் சுருதிப் பெட்டி இப்போது இடம் பெற்றுள்ளது.

**சமித்து அளிப்பவர்**

வேள்விக்குரிய அரசமரச்சுள்ளிகள், மாவிலை, தர்ப்பை முதலியவற்றை முன்பு குடிமக்களே அளித்து வந்தனர். இத்திருப்பணியை இப்போது திரு. அச்சையா வாத்தியார் செய்து வருகின்றார்.

## கடிகைப் புலவர்

கடிகைப்புலவர் என்றசொல்லுக்கு நாழிகைக்கவிசொல்வோர் மங்கலப் பாடகர், வாழ்த்துப்பா பாடுவோர் எனப் பொருள். இத்திருக்கோயிலில் திரு. வென்றிமாலே கடிகைப்புலவராவார். இவர் திருச்செந்தூர்த் தலபுராணம் பாடிய வென்றிமாலே மரபில் வந்தவர். கந்தர் சஷ்டியின் போது கந்த புராணம் படித்தல் இவரது பணி.

## காங்கேயன்

திருச்செந்தூர்ப் பிள்ளேத் தமிழினேத் திருக்கோயிலில் பாடி வந்த ஓதுவார் இசையினுல் இப்பெயர் பெற்ருர். திரு. ஆர். நடராசஓதுவார் இப்போது பாடிவருகிருர்.

## சலவைத் தொழிலாளர்

சுவாமி, அம்மன்களுக்குச் சாத்திய பட்டு, பரிவட்டங்களே சலவை செய்து கொடுப்பவர். திருவாளர்கள் கே. கந்தன், சுப்பையா, வேலு, மாரியம்மாள் ஆகியோர் முறை வைத்துப் பணிபுரிகின்றனர்,

## மேஸ்திரி

நாள் வழிபாட்டிலும் திருவிழாக்களிலும் துணித் தொடர்பான பணிபுரிபவர். எழுந்தருளும் மூர்த்திகளுக் குரிய கைகள், கால்கள், திண்டுகள் முதலியவற்றையும் தைத்துக் கொடுக்கிருர். அலங்கார நேரங்களில் திரைகளேக் கொடுத்துத் திரும்பப் பெறுவதும் இவரது வேலே. கொடிச்சீலேயில் படங்கள் வரையும் பணியையும் சில ஆண்டுகளாகச் செய்து வருகிருர்.

## திருப்பணி மடம்

நாள் வழிபாட்டிற்குரிய பூங்குழைகள் (காதணிகள்) குச்சிப்புல் வெற்றிவேர்க்கட்டு, புத்தாடை முதலியவற்றைத் திருவாவடுதுறை ஆதீனத் திருப்பணி மடத்திலிருந்து திருக்கோயிலில் கொண்டு சேர்க்கும் பணிபுரிபவர் இவ்வாறழைக்கப்படுகிருர், பால், தயிர், கோமயம் ஆகியனவும் மடத்திலிருந்து கொண்டு சேர்ப்பார். இப்பணி செய்பவர் திரு. தூண்டி விநாயகம்பிள்ளே.

## செந்தில் முருகன் தேவார சங்கம்

சாயுங்காலத்திற்குப் பின் பன்னிரண்டு ஓதுவார்கள் உள்ளூர்ச் சைவ வேளாளர் சங்கக் கட்டிடத்திலிருந்து புறப்பட்டுத் தேவாரம் பாடிக் கொண்டே கிரி வீதி வலம் வந்து இரண்டாம், முதல் சுற்ருலேகளின் வழியே பாடிச் சென்று தரிசனம் செய்கின்றனர். திருக்கோயில் இவர்கட்கு இரவுச் சாப்பாட்டையளிக்கிறது.

## திருப்புகழ்ச் சங்கம்

ஓதுவார்களைப் போலவே, இரவில் திருப்புகழ்ச் சங்கத்தைச் சேர்ந்த முக்காணியப் பாகவதர்கள் திருப்புகழ் பாடிக்கிரிவீதி வலம் வந்து தரிசிக்கின்றனர். இவர்கட்கும் திருக்கோயில் இரவுச் சாப்பாட்டை அளிக்கிறது.

## முப்பிரிவினர்

நாள் வழிபாட்டில் ஈடுபடுவோரை மூன்று பிரிவினராகப் பிரிக்கலாம்.

| சோற்றுக்கட்டி மட்டும் பெறுவோர் | கட்டியும் காசும் பெறுவோர் | காசுமட்டும் பெறுவோர் |
|---|---|---|
| 1. சிவாச்சாரியார்கள் | 1. போற்றிமார் | 1. தேவாரக் குழுவினர் |
| 2. அத்யயனபட்டர் | 2. மணியம் | 2. துப்புரவுப் பணியாளர் |
| 3. திருமேனிகாவல் | 3. சலவைத் தொழிலாளர் | 3. காவல்காரர் |
| 4. கட்டியம் கூறுவோர் | 4. மேளகாரர் | 4. யானைமாவுத்தர் |
| 5. ஓதுவார்கள் தேவாரம், திருப்புகழ் | 5. நட்டுவன்தாளம் | 5. நாழிக் கிணறு-துப்புரவு |
| 6. சாம்பிராணிப் பணிவிடை | 6. திரு முழுக்கு அறைப் பொறுப்பாளர் | 6. தண்ணீர்ப் பந்தல் |
| 7. திருவாபரணம் | 7. மாவிடிப்பு | 7. பல்லக்குச் சுமப்பவர் |
| 8. பிச்சைப் பால் | 8. விதாயகர் | 8. முறைக்காரிகள் |
| 9. தானுவதிப் பிள்ளை | 9. தீபம் | 9. உள்துறைக் கண்காணிப்பாளர் |
| 10. சமித்து அளிப்பவர் | 10. கொத்தனுர் | 10. நகைக்கண் காணிப்பாளர் |
| 11. கடிகைப்புலவர் | 11. மணியடிபாரா | |
| 12. காங்கேயன் | 12. காணியாச்சி | |
| 13. சாரங்கி | 13. மேஸ்திரி | |
| 14. திருப்பணிமடம் | | |
| 15. தேவாரச் சங்கம் | | |
| 16. திருப்புகழ்ச் சங்கம் | | |
| 17. சாஸ்திரி | | |
| 18. படைப்பு | | |

# ஐந்தாம் இயல்

## திருவிழாக்கள்

திருவிழாக்களுக்குச் சிறப்பு[1] என்ற பெயரும் சாறு[2] என்ற பெயரும் தமிழ் இலக்கியங்களில் இடம்பெறுகின்றன. திருச்செந்தூர்க் கோயிலில் ஒன்பதாம் நூற்றாண்டில் மார்கழித் திருவாதிரை, மாசிமகம், வைகாசி விசாகம், ஆகிய திருவிழாக்களே நடைபெற்றன என வரகுணன் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. திருவிழாக்கள் இங்குச் சிவாச்சாரியார்களால் நடத்தப் படுகின்றன.

| | |
|---|---|
| 1. நாள்விழா (நித்தியோற்சவம்) | சீபலி நாதரை மூன்று வேளைகளிலும் எழுந்தருளச் செய்தல் |
| 2. வாரவிழா (வாரோற்சவம்) | சோமவாரம் (திங்கள் கிழமை) வெள்ளிக் கிழமை, புரட்டாசிச் சனிக் கிழமை. |
| 3. பக்கவிழா (பட்சஉற்சவம்) | அமாவாசை, பௌர்ணமி, பிரதோடநாட்கள். |
| 4. திங்கள் விழா (மாத உற்சவம்) | மாதப்பிறப்பன்று கொண்டாடுவது. மாதக்கடைசி வெள்ளி. |
| 5. ஞாபிற்றினியக்கவிழா (அயனோற்சவம்) | தட்சிணாயனம், உத்தராயணம், சித்திரை விசு, ஐப்பசி விசு. |
| 6. இளவேனில் விழா (வசந்தோற்சவம்) | சித்திரை, வைகாசித்திங்கள்களில் கொண்டாடப் படுவது. |
| 7. ஆண்டு விழா. (வருடோற்சவம் இதுபிரம் மோற்சவம்) | பெருந்திருவிழா (ஆவணி, மாசித் திங்களில் நடைபெறுகின்றன) |
| 8. நோன்பு விழா (விரதோற்சவம்) | விரததிதி (கந்தசஷ்டி, கிருத்திகை) |
| 9. கழுவாய் விழா (பவித்திரோற்சவம்) | கழுவாயாகக் (மறந்த, விடுபட்ட விழாக்களுக்காக) கலச மாட்டு நடத்துதல் |

இவ்வொன்பது வகை விழாக்களும் இக்கோயிலில் இடம் பெறுகின்றன.

**வகைகளும் நாட்களும்**

| | | | |
|---|---|---|---|
| 1. | சைவம் | — | 1 நாள் |
| 2. | கௌனம் | — | 3 நாட்கள் (கணம் எனப்படும்[3]) |
| 3. | பௌதிகம் | — | 5 ,, |
| 4. | பவனம் | — | 7 ,, (பவுநம் எனப்படும்) |
| 5. | தைவதம் | — | 9 ,, (தைவிகம் எனப்படும்) |
| 6. | பைத்ருகம் | — | 12 ,, |
| 7. | கௌமாரம் | — | 13 ,, |
| 8. | சாவித்திரம் | — | 15 ,, |
| 9. | சாத்திரம் | — | 17 ,, |
| 10. | சௌரம் | — | 25 ,, |
| 11. | சாவரம் | — | 29 ,, |
| 12. | சௌபாக்கியம் | — | 31 ,, |
| 13. | சௌக்கியம் | — | 37 ,, |
| 14. | மங்களம் | — | 48 ,, |

இக்கோயிலில் மேற்கண்டபட்டியலில் 1, 3, 4, 5, எண் களுள்ள விழாக்கள் நடைபெறுகின்றன.

| பெயர் | நாட்கள் (நடைமுறையில்) | திங்கள் | விழா |
|---|---|---|---|
| 1. சைவம் | 1 நாள் | சிறப்பு நாட்கள் | நாள் விழாக்கள்[3] |
| 2. பௌதிகம் | 5 நாட்கள் | பங்குனி | வள்ளி திருமணம் |
| 3. பவனம் | 7 நாட்கள் | ஐப்பசி | கந்தசஷ்டி |
| 4. தைவதம் | 10 நாட்கள் | சித்திரை | வசந்த விழா |
| | 10 நாட்கள் | வைகாசி | ,, |
| | 10 ,, | புரட்டாசி | நவராத்திரி |
| | 10 ,, | மார்கழி | திருவாதிரை |
| | 12 ,, | ஆவணி | பெருவிழா |
| | 12 ,, | மாசி | பெருவிழா |

தைவதம் என்ற தலைப்பில் 10 நாட்கள் 12 நாட்கள் விழாக்கள் கொண்டாடிய போதிலும் காப்பறுத்தல் ஒன்பதாவது நாளிலே இங்கு நிகழ்வதால் தைவதம் என்ற வகையில் அடக்கலாம் என் கிறுர் திரு. ச. சி.

## கொடியேற்றமும் வேள்வியும்

கொடியேற்றி வேள்விசெய்து விழாக் கொண்டாடுதல் ''சாகல்யம்'' (நலம் பெறுதல்) என்றும், கொடியேற்றின்றி வேள்வியுடன் நடைபெறுவது 'பவனம்' (தூய்மை பெறுதல்) என்றும், கொடியேற்றமும் வேள்வியுமின்றிக் காப்புக் கட்டுடன் நடைபெறுவது 'சாந்திகம்'(கழுவாய்) என்றும், ஒருவேளை இறைவனை எழுந்தருளச் செய்தல் 'மாங்கல்யம்' (மங்கலப்பேறு) என்றும் கூறப்படும் என்கிறது மகோற்சவவிளக்கம்[4] இக்கோயில் விழாக்களை இம்முறைப்படி ஆராய்வோம்.

| நலம்பெறுதல் | தூய்மைபெறுதல் | கழுவாய் | மங்கலப்பேறு |
|---|---|---|---|
| 1. ஆவணிப்பெருவிழா | 1. கந்தர்சஷ்டி | 1. வசந்த விழா | 1. மாதப்பிறப்பு |
| 2. மாசிப்பெருவிழா | | 2. ,, | 2. அமாவாசை |
| | | 3. வைகாசி விசாகம் | 3. வளர்பிறைச் சஷ்டி |
| | | 4. நவராத்திரி | 4. பிரதோடம் |
| | | 5. மார்கழித் திருவாதிரை | 5. கிருத்திகை |
| | | | 6. விசாகம் |
| | | | 7. உத்திரம் |
| | | | 8. திருவாதிரை |
| | | | 9. மாதக் கடைசி வெள்ளி |
| | | | 10. மாதங்களின்சிறப்பு நாட்கள் |

## பிரட்டு குளோதி கூறும் வகைகள்

திருவிழாக்களைத் திங்களின் இயக்கத்தினு லெழுந்தவை என்றும், நாள்மீன் (நட்சத்திரம்) களின் இயக்கத்தால் எழுந்தவையென்றும், ஞாயிற்றின் இயக்கத்தால் எழுந்தவை என்றும் பிரிக்கிறுர் குளோதி.[5] இவற்றைச்சௌரமானம் (ஞாயிற்றுவழி), சாந்திரமானம் (திங்கள்வழி) நட்சத்திரப்பிரதானம் எனலாம். மங்கலப் பேறு என்னும் வகை மட்டும் குளோதி கூறும் முறையில் ஆராயப் படுகிறது.

## நலம் பெறுதல்

இவ்வகைகளில் ஆவணி, மாசித்திங்கள்களில் பெருவிழாக் கொண்டாடப் படுகிறது; கி. பி ஒன்பதாம் நூற்றுண்டில் மாசிப் பெருந்திருவிழா மட்டுமே நடைபெற்றது.[6] ஆவணித் திருவிழா குறிப்பிடப் படவில்லை.

## ஆவணித்திருவிழா

திருச்செந்தூர்ப் பகுதி கேரள மன்னர் ஆளுகையின் கீழிருந்த போது இவ்விழாக் கொண்டாடப்பட்டிருத்தல் வேண்டும். மாசித் திருநாளைப்போலச் செய்யவேண்டு மென்பதற்காகப் போற்றிமார் களால் கி.பி. 16 அல்லது 17ஆம் நூற்றாண்டில் அமைக்கப்பட்டது இது என்கிறார் குளோதி.[7] இவர் கூறும் காரணங்கள் வருமாறு:

1. கேரள மன்னர் புத்தாண்டு (கொல்லமாண்டு) விழாப் போலுள்ளது.

2. தமிழ் நாடு முழுவதிலுமுள்ள முருகன் கோயில்களில் இவ் விழாக்கள் கொண்டாடப்படவில்லை

3. திருச்செந்தூரில் ஆவணித்திருவிழாக் கொண்டாப்படும் காலத்தில் கேரளாவில் சிறந்த விழாக் கொண்டாடப் படுகிறது.

## ஒற்றுமையும வேற்றுமையும்

இருவிழாக்களிலும் அசுவதி நாளில் கொடியேற்றப்பட்டு மக நாளில் விழா முடிவடைகிறது.

| ஆவணி | மாசி |
|---|---|
| 1. தேய்பிறையில் தொடங்குகிறது | 1. வளர்பிறையில் தொடங் குகிறது |
| 2. வள்ளியம்மை எழுந்தருளுகிறார் | 2. தெய்வ யானை யம்மை எழுந்தருளுகிறார் |
| 3. தட்சிணாயனத்தில் | 3. உத்தராயணத்தில் |
| 4. தெப்பவிழா இல்லை | 4. தெப்பவிழா உண்டு . |

## பெருவிழாவின் உறுப்புகள்

திருவிழாவின் உறுப்புக்கள் பதினெட்டு என்பர்.[8] ஆனால் இக் கோயில் விழாவில் இடம்பெறும், உறுப்புகள் இருபத்தொன்று அவை வருமாறு,-

1 அனுமதி (அனுக்ஞை)
2 தூய்மைசெய்தல் (வாஸ்து சாந்தி)
3 மண் கொணர்தல் (மிருத்ஸங்கிரஹணம்)
4 முளையிடுதல் (அங்குரார்ப்பணம்)
5 காப்புக்கட்டுதல் (இரட்சா பந்தனம்)
6 மயில்பூசை (மயூரயாகம்)
7 கொடியேற்றுதல் (துவஜா ரோகணம்)

8 அடியார் சிறப்பு (பக்தோற்சவம்)
9 துடிகொட்டுதல் (பேரீதாடனம்)
10 சந்திவிழா (சந்தி ஆவாஹனம்)
11 வேள்வி (யாகம்)
12 பலியிடல் (பலிதானம்)
13 வாகன ஒழுங்கு (யானக்கிரமம்)
14 சக்தி ஊடல்
15 சமணர் கழுவேறல்
16 பரிவேட்டை (மிருகயாத்திரை)
17 பொற்சுண்ணமிடித்தல்
18 கொடியிறக்குதல் (அவரோகணம்)
19 அருள்வெள்ளத்தழுந்துதல் (தீர்த்தவாரி)
20 ஆச்சாரியார் விழா (ஆச்சாரியோற்சவம்)
21 அடியார் விழா (மங்களோற்சவம்)

## அனுமதி

விழா, குறைவின்றி நடைபெற இறைவன் திருவருளை வேண்டுதல் 'அனுமதி' எனப்படும். இதனை 'எஜமானனுக்ஞை' (அரசன் போன்றோர் சிவாச்சாரியாரை வேண்டுதல்) 'ஆசாரியானுக்ஞை' (ஆச்சாரியார் இறைவனை வேண்டுதல்) என இருவகைப்படும்.

## அலுவலர் வேண்டுதல

இக்கோயிலின் செயல்அலுவலர் சண்முகப்பெருமான்முன் தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, தக்கிணை முதலியவற்றோடு படி இரட்டி தருவதாகச் சிவாச்சாரியாரிடம் கூறுவார். உலக நன்மையின் பொருட்டும் இறைவன் விரும்புமாறும்விழா நடத்தத் துணை செய்கிறேன் எனவும் கூறுவார்.

## ஆச்சாரியார் அனுக்ஞை

இவ்விழாவைச் சிவாகம விதிவழுவாது மந்திரம், கிரியை பாவனைகளோடு நடத்த முன்னிற்கிறேன். உமது திருவருளால் இவ்விழா நிறைவுபெறத் திருவருள் துணைநிற்க வேண்டுமென விநாயகர், மூலவர், சண்முகர் முன்நின்று விழாவினை நடத்தவிருக்கும் சிவாச்சாரியார் வேண்டுவார்.

## தூய்மை செய்தல்

விழா நடைபெறும் ஊரின் மாசினைப் போக்குதல் இதன் குறிக்கோள். வாஸ்துபுருடன்[9] என்னும் அசுரனின் தொந்தரவு இல்லாமலிருக்கப் பிரமன் முதலிய தேவர்களையும் அவ்வசுரனைக் காவல்புரியும் ஐம்பத்துமூன்று தேவர்களையும் பூசை பலி முதலிய வைகளால் திருப்தி செய்து இடையூற்றை நீக்குதல் 'வாஸ்து சாந்தி' எனப்படும்.

இவ்வழிபாட்டின் பின் காய்ந்த தருப்பை, காய்ந்த தென்னை மட்டை ஆகியவற்றைச் சேர்த்து ஐந்து முழநீளம், இருபது அங்கு லப் பருமன் உடையகூந்து (சுற்றிக்கட்டுதல்) கட்டி குமரவிடங்கப் பிரான் முன் வளர்க்கப்பட்ட வேள்வித் தீயிலிருந்து கொளுத்தி வீதிசுத்தியின் பொருட்டு இழுத்துச் செல்வர். கோயில், யாகசாலை நகரத் தெருக்கள் ஆகியவற்றில் சூந்திலுள்ள நெருப்புப் படும்படி இழுத்துப்பின் ஈசான திக்கில் எறிந்து விடுகின்றனர். இவ்விடங்களை ஆனைந்தால் (பஞ்சகவ்வியங்களால்) பின்பு பட்டர்கள் தூய்மை செய்வர்.

## 3 மண் கொணர்தல்

இங்கு எட்டாம் சந்தி (உள்ளூர்ச் சிவன் கோயிலுக்குப் பின்புற முள்ளது) யிலிருந்து ஒன்பது கண்டங்களுக்குரிய அதிபதிகளையும் பூமி தேவியையும் பூசித்து மண்வெட்டியால் ஐந்துமுறை மூலமந் திரத்துடன் மண்ணை வெட்டி எடுப்பர். வெட்டிய இடத்தில் வெட்டிய குறை நீங்க வேறுமண்ணைிட்டு நிறைத்துத் தானியங்களைப் புதைத்து ஏழுகடல் நீரைப் பாவனையாக நீராட்டி பூமிதேவியை வணங்குவர்.

## 4 முளையிடுதல்

வாஸ்து சாந்தியால் பொசுக்கப்பட்ட நிலப்பகுதி அமுதத் தால் திரும்ப உண்டாவதாகப் பாவித்தல் 'அங்குரார்ப்பணம்' என்கிறார் திரு மு. ப.

''பாலிகை (சிறுமண்சட்டி) களில் பால் கலந்த தானியங்களை மந்திரபூர்வமாகத் தெளித்து முளைக்கச் செய்வது அங்குரார்ப் பணம். தெளிக்கப்பெற்ற விதைகள் முறையாகவும் பசுமை யாகவும் முளைத்தால் கிரியை சரியானமுறையில் அமைந்தது என்று உணர்ந்து கொள்ளவேண்டும். என்பர்[10]

இக்கோயிலில் செந்தில்நாயகர் அறையில் அமைக்கப்பட்டுள்ள மாடக்குழியில் பன்னிரண்டு மட்சட்டிகளில் தானியங்கள் இடப் படுகின்றன. நடுவில் சந்திரனுக்குரிய கும்பம் வைக்கப்படுகிறது. காப்பறுத்தல் நிகழும் நாளில் இம்மட்சட்டிகள் அகற்றப்பட்டு நாழிக்கிணற்றில் இடப்படும்.

இம்முளைப் பாலிகைகளுக்கு நாள்தோறும் காலை மாலை ஆகிய இருவேளைகளிலும் (வேள்விப்பூசை முடியும் நாள்வரை) பூசை நடைபெறும்.

### காப்புக்கட்டுதல்

''இத்தொழிலை நான் செய்துமுடிப்பேன்'' என உறுதிபூண்டு மஞ்சளில் தோய்த்த நூலினை வலக்கை மணிக்கட்டில் கட்டிக் கொள்ளுதல் காப்புக்கட்டுதலாம். காப்பணிந்தவருக்குத் தீட்டுப் பற்றுது என்பர்.[11]

இரண்டாம் திருவிழா அன்று காலையில் இக்கோயிலில் சிவாச் சாரியார், உற்சவமூர்த்திகள், அத்திரதேவர் ஆகியோருக்குக் காப்புக் கட்டுவர். திருமேனிகளின் வலக்கை மணிக்கட்டில் மஞ்சள் நூல் கட்டப்படும்.

## 6 மயில்பூசை

மூலவர் திருமுன் நிற்கும் மயில்களுக்குக் குடமுழுக்குப் பூசை செய்து விழா நடைபெறுவதற்குக் கொடியேற்றம் நடைபெறு முன் மயிலிடம் அனுமதி பெறுதல் மயில்பூசையாகும். கொடிச் சீலையிலுள்ள மயிலுக்குக் கண்திறத்தல் (படத்திலுள்ள மயிலின் கண்களைத் தர்ப்பைப் புல்லினுல் தொடுதல்) செய்வர்.

## 7 கொடியேற்றம்

வேல், மயில், சூரியன், சந்திரன், விளக்கு ஆகியவற்றின் வடிவம் எழுதப்பட்ட கொடிப்படத்தை அழகுசெய்து கொடியேற் றத்திற்கு முந்தியநாள் மாலையில் நான்குதேர் வீதி, சிவன் கோயில் மாடவீதிகள் வழியாக யானைமேல் வைத்துச் சுற்றிவருவர். இஃது ஊராருக்குக் கொடியேற்றுதலைக் காட்டுவதற்காம். கொடியேறி ஞல் கொடியிறங்கும்வரை உள்ளூரில் வாழ்பவர் வெளியூரில் சென்று தங்கமாட்டார். கொடியிறங்கும்வரை திருமண நிகழ்ச் சிகள் நடத்துதல் ஐந்துமைல் சுற்றளவுக்குள் இல்லை என்கிருர் திரு ச. சி.

கொடிமரம் பதி. அதில் ஏற்றப்படும் கொடி உயிர். அதைக் கட்டும் கயிறு பாசம் என்பர். கொடிமரம் முதுகுத்தண்டை நேராக வைத்து மூச்சினை இழுத்து அடக்கி வெளிவிடுவதால் இறைவனை உணரமுடியும் என்பதைக் காட்டும் என்றும் கூறுகின்றனர்.

அத்திர தேவரைக் கொடிமரத்தின் முன்னால் வைத்துப் பூசித்து அனுமதி பெற்றுக் கொடியேற்றுவர். கொடிமரத்தின் முன் பதினாறு தீபாராதனைகளும், வேதபாராயணமும், பஞ்சபுராணம் பாடுதலும் நிகழும். திருவாவடுதுறை ஆதீனத் திருப்பணி மடத்தில் வாழும் துறவியிடம் தக்கிணை பெற்ற பின்னரே தீபாராதனை நடைபெறுகிறது.[12]

## 8 அடியார்விழா

முதல் திருவிழாவன்று மாலையில் அப்பர் (திருநாவுக்கரசர்) எழுந்தருளுவார். திருமேனிகள் எழுந்தருளும் எட்டுத் தெருக்களையும் தம் உழவாரப் படையினால் அப்பர் தூய்மை செய்வதாகக் கருதுவர். பாமரர் இவரை 'முள்பொறுக்கிச் சாமி' என்பர். அன்று பேரூராட்சி மன்றத்தினர் வீதிகளைத் துப்புரவு செய்வர்.

## 9 துடிகொட்டல்

பேரிகை, தேவர்களை மகிழ்விக்கும் இசைக்கருவிகளுள் ஒன்று. ஒவ்வொரு தேவருக்கும் குறிப்பிட்ட தாளம் உண்டு. காணியாச்சி (விளக்கம் நாள் வழிபாட்டியலில் காண்க) சண்முகர் திருமுன் காப்புக் கட்டப்பெற்றுச் சிறப்புப் பெறுகிறார், இசைக்கலைக்கு இக்கோயில் தரும் சிறப்பினை இது விளக்கும்.

முதல் திருவிழாவுக்கு முந்திய நாளிரவில் பாரிசைவப் பூசாரிகள் சந்திகளில் 'திக்குப்பந்தனம்' செய்வர். இது, கெட்ட தேவதைகளுக்குக் குகன் ஆணையைக் கூறி அவற்றை ஊரைவிட்டு விலகச் செய்தல் என்பர்.

## 10 சந்திப்பூசை

முதல் திருவிழாவன்றிரவில் அத்திரத்தேவர் தந்தப்பல்லக்கில் எழுந்தருளுவார். எட்டுத்திசைக் காவலர்களையும் நடுவில் பிரும்மாவையும் ஆவாகனம் செய்து வழிபட்டு "இவ்விழா நிறைவு பெறும்வரை இவ்விடத்தில் நின்று எங்கள் வழிபாடுகளை ஏற்றுக் கொண்டு எல்லாவிதக் குறைகளையும் போக்கி அருள்செய்ய வேண்டும் இது முருகன் ஆணை" எனத் தெரிவித்தலைச் 'சந்தி ஆவாகனம்' என்பர்.

## சந்தி அமைப்பு

| 5 | மேல | 6 | ரதவீதி | 7 |
|---|---|---|---|---|
| தெற்கு | | | | |
| 4 | | 1 | பட்டர் தெரு | 8 |
| ரதவீதி | | முதல் சந்தித் தெரு | | |
| 3 | இரண்டாம் சந்தித் தெரு | 2 | | 9 |

## சந்தித் தேவதைகள்

1. பிரம்மா 2. இந்திரன் 3. அக்கினி 4. எமன் 5. நிருதி 6. வருணன் 7. வாயு 8. குபேரன் 9. ஈசானன்

## சந்தி அமைப்பு

திருவிழா நடைபெறும் கோயிலைச் சுற்றியே சந்திகள் அமைக்கப்பட்டிருக்கும். இங்கு விழாவிற்குரிய முருகன் கோயில் கடற்கரையிலிருப்பதால் ஊருக்குள் அமைக்கப்பட்டுள்ளன. இஃது இவ்வூரின் தனித்தன்மை.

## சந்த்ப் பூசை

முதல் திருவிழாவன்று முதல் சந்தியில் தொடங்கி ஒவ்வொரு சந்தியிலும் கட்டியங்காரர் அத்தேவதையை வரவழைக்கும் கட்டியம் கூறுகிறார். பின் பாரிசைவர் சூர்ணிகை[13] கூறுவார்.

இப்பூசையில் இடம் பெறும் தாளம், இராகம், நிருத்தம், பண், இசைக்கருவியை ஆகியவற்றைக் காண்போம்.

| சந்தி | தாளம் | இராகம் | நிருத்தம் | பண் | இசைக்கருவி |
|---|---|---|---|---|---|
| 1 | பிரும்மதாளம் | வகுளம் | சமபாதம் | பஞ்சமம் | சற்சபுடம் |
| 2 | சமதாளம் | பைரவி | புஜங்கம் | காமேசம் | சாசபுடம் |
| 3 | மத்தாவகுளம் | வராகி | மண்டலம் | கொல்லி | உத்கடிதம் |
| 4 | பிருங்கணி | இராமகிரி | தண்டபாதம் | கௌசிகம் | மிளிதமட்டையம் |
| 5 | மல்லி | பைரவி | புஜங்கத்திராசம் | நட்டபாடை | இலம்புகம் |
| 6 | நவதாளம் | தேசிகம் | குஞ்சிதம் | சீகர்மேசம் | சிம்மநாதம் |
| 7 | பலி | மகுடராமகிரி | புஜங்கலலிதம் | தக்கேசி | சப்புடம் |
| 8 | கொட்டரி | மாளவி | சந்தியா | தக்கேசி | பஞ்சவாத்தியம் |
| 9 | டக்கரி | தேசாட்சி | ஊர்த்தபாதம் | சாலாபாணி | கும்பம் |

இவ்வூரில் கலைகள் வளர்ந்திருந்த நிலையை இது காட்டும்

## மலரும் பலிச்சோறும்

| சந்தி எண் | மலர் | சோறு | மலர் வேறுபாடு |
|---|---|---|---|
| 1 | நந்தியாவட்டை | பயற்றுப் பொங்கல் | தாமரை |
| 2 | சிவப்பு | பாயாசம் | நீலோற்பலம் |
| 3 | புன்னை | மஞ்சட்சோறு | பிச்சி |
| 4 | பிச்சி | சருக்கரைப் பொங்கல் | மல்லிகை |
| 5 | மல்லிகை | மூங்கிலரிசி | செண்பகம் |
| 6 | துளசி | சருக்கரைப் பொங்கல் | பாதிரி |
| 7 | தாழம்பூ | எள்சோறு | அலரி |
| 8 | நிஷ்பாவம் | வெண்மொச்சைச்சோறு | மகிழ் |
| 9 | செவ்வலரி | தயிர்ச்சோறு | கருங்குவளை |

முற்காலத்தில் இவ்வாறு படைக்கப்பட்டன.

## ஒன்பதாம்சந்திப் பூசை

இங்குச் சந்திப்பூசை முடிந்ததும் கட்டியங்காரர் ஒவ்வொரு தேவரையும் வருணித்து அழைப்பு விடுப்பார். ஒரு தேவரை வருணித்து அழைத்ததும் தவுல்காரர் தவுலில் மூன்று தட்டுகள் தட்டுவார்.

இதனைச்சித்தேசி[14] கூறுதல் என்ப. திருவிழாவைக் காண வருமாறு அழைப்புவிடப்படும் என்கிறார் திரு. வீரபாகு ஐயர், அழைப்புப் பெறுவோர்; எண்திசைக்காவலர், இருடிகள், கங்கை முதல் வதனாரம்ப தீர்த்தம் வரை, சனத்குமாரர், அதிமதுர கவிராயர், யாக்ஞவல்யர், முசுகுந்தர், சனகர், மூவர் முதலிகள், கருணாகரர், மாணிக்கவாசகர், கண்ணப்பர், பராசரர், சிறுத் தொண்டர், அனுமந்தர், சேரமான் பெருமாள், சோழமன்னர், பாண்டியமன்னர், மன்மதன், மூவுலகினர், மங்கலவாத்தியக் காரார், நந்திகேசுவரர், ஆதிசண்டேசுவரர், மற்றும் மன்னர். (முன்பு ஐந்தாம் ஜார்ஜ் மன்னரும் இடம் பெற்றிருந்தார் என்கிறார் திரு. இ. சா)

## 11. வேள்வி

இரண்டாம் திருநாள் தொடங்கி சிவாச்சாரியார் வேள்விக் கூடத்தில் வேள்வி நடைபெறுகிறது. செந்தில் நாயகர் எழுந்தருளி இங்குவந்தவுடன் பூரணாகுதி (வேள்விநிறைவு) நடைபெறுகிறது, இதன்பின்னரே செந்தில் நாயகர் வீதிகட்கு எழுந்தருளுகின்றார்

## 12 பலிபோடுதல்

நாள்வழிபாட்டில் நடைபெறுதல் போலவே நடைபெறும்.[15]

## 13. வாகனஒழுங்கு

திருவிழாவில்பயன் படுத்தப்படும் வாகனங்கள் உள்ளூர்ச் சிவன் கோயில் அறைகளில் வைத்துப் பேணப்படுகின்றன. இத் திருக் கோயிலில் (சனத் குமாரப் பிரசன்ன குமார தந்திர முறைப் படி) அமைந்துள்ள வாகன ஒழுங்கு வருமாறு. சுவாமி சப்பரம் மட்டும் இங்குக் குறிக்கப்படுகிறது.

| திருவிழா | காலை | மாலை |
|---|---|---|
| 1 | —— | —— |
| 2. | சிங்கக் கேடயம் | சிங்கக்கேடயம் |
| 3. | பூங்கோயில் சப்பரம் | தங்கமுத்துக்கடா |
| 4. | தங்கமுத்துக் கடா | வெள்ளியானை |
| 5. | வெள்ளியானை | தங்கமயில் |
| 6. | கோரதம் | இந்திரவிமானம் (இப்போது வெள்ளித்தேர்) |

| | | |
|---|---|---|
| 7. | குறவர்தாங்கும்பல்லக்கு | தங்கச்சப்பரம் |
| 8. | வெள்ளிச்சப்பரம் | பச்சைக் கடைசல் சப்பரம் |
| 9. | குறவர் தாங்கும்பல்லக்கு | தங்கக்கைலாயம் |
| 10. | தேர் | பூம்பல்லக்கு |
| 11. | பூஞ்சப்பரம் | தெப்பம் (மாசியில்) |
| 12. | பூங்கேடயம் | |

முன்பு பத்து நாட்கள் விழா நடைபெற்று வந்தது எனத் தெரிகிறது.[16]

## அம்மனுக்குரிய வாகனங்கள்

1 ——
2 கேடயச்சப்பரம்.
3 கேடயச் சப்பரம்.
4 வெள்ளி அன்னம்.
5 வெள்ளிச் சரபம்.
6 இந்திர விமானம்.
7 தனிச் சப்பரமில்லை. சண்முகரோடு, எழுந்தருளுதல்.
8 ——
9 வெள்ளிக் கமலம்.
10 பல்லக்கு
11 பூஞ்சப்பரம்
12 பூஞ்சப்பரம்

## வாகன அமைப்பு

வாகனங்களில் பெரும் பாலானவை இலக்கிய அடிப்படையில் ஏற்பட்டவை என்பர் திரு.மு.ப. வாகனங்கள் பறவைகள், விலங்கு கள் வடிவில் அமைந்துள்ளன. அவற்றைப் பேண வேண்டும் என் பதையே இதுகாட்டும்.

## சிங்கக் கேடயச் சப்பரம்

இந்திரன் அறுமுகக் கடவுளை சிங்காதனத்தில் அமர்த்தி வழி பட்டதை இஃது உணர்த்துகிறது என்கிறார் திரு மு:ப.

## ஆட்டுக்கிடாய்

நாரதர் சிவபெருமான் மகிழ்ச்சி யடையுமாறு ஒரு வேள்வி செய்தார். விதிமுறை தவறியதால் அவ்வேள்வியிலிருந்து ஓர் ஆட்டுக்கிடாய் தோன்றி திசைகளை அதிரச் செய்தது. வீரவாகு தேவர் அதனைப்பிடித்துவர முருகன் அதன் மீது ஏறினார். இந் நிகழ்ச்சியை நினைவூட்டவே ஆட்டுக்கிடாய் வாகனம் அமைந்துள் ளது. இதைத்திருச்செந்தூர் இலக்கியங்கள் கூறும்.[17]

### யானை

இது, முருகன் பிரணவத்தின் பொருளானவன் என்பதைக் காட்டும். யானை பிரணவ உருவினைக் கொண்டது. முருகன் பிரணவப் பொருளானவன் என்பதைக் குமரகுருபரர் கூறுகிறார்.[18]

### மயில்

ஆணவச் சூரனை அடக்கி ஊர்தியாகக் கொண்ட நிகழ்ச்சியை நினைவுபடுத்தும் இச்செய்தி கந்தபுராணத்தில் இடம் பெற்றுள்ளது.[19]

### இந்திர விமானம்

மதுரையில் சோமசுந்தரருக்கு இந்திரன் விமானம் அமைத்துப் பூசித்ததை நினைவூட்டுகிறதென்கிறார் திரு. மு. ப.

### கைலாயம்

''கைலைமலை யனைய செந்திற்பதி வாழ்வே'' என்பது அருணகிரிநாதர் திருப்புகழ்.[20] சந்தனமலையைக் கைலைமலையாகக் காண்கின்றனர் அடியார். மலை குமரனின் வாழிடம். இவ் வாகனத்தில் இராவணன் கைலையைப் பெயர்க்க முயலும் காட்சியைக் காணலாம்.

### தேர்

சிவபெருமான் முப்புரங்களை (மும் மலங்களை) எரித்த செய்தியை நினைவூட்டும்' சிவனும் செந்தில் வேலனும் ஒருவரே.

### வாகனங்களும் கட்டியமும்

இவ்வாகனங்களை வருணித்து முக்காணியப் பெரியார் ஒருவர் எழுதிய கட்டியங்களைப் பின்னிணைப்பில் காண்க.

### ஆரத்தி

முருகன் ஊர்வலம் வந்து சிவன் கோயில் மண்டபத்திலிறங்கியதும் யானைமீது சிவாச்சாரியார் வெள்ளிக் குடம் தாங்கிவர யானை சிவன் கோயிலை மும்முறை வலம் வந்து குமரவிடங்கர் முன் நின்று மும்முறை பிளிறும். பின் வெள்ளிக்குடத்து நீரை ஆரத்தி சுற்றிக் கொட்டப்படும் வழக்கமிருந்தது. யானை நோய்வாய்ப் பட்டதால் இவ்வழக்கம் நின்று விட்டது என்கிறார் திரு. ச. சி.

### 14. சக்தி ஊடல்

இஃது அனைத்துக் கோயில் விழாக்களிலும் ஆறும்நாள் இடம் பெறும். ''சிவன் தாருகாவனத்து முனிவரை அடக்கச் செல்லும்

போது சக்தியை விடுத்துத் திருமாலே மோகினியாக அழைத்துச் சென்றார். தாருகாவனத்து முனிபத்தினியாரை மயக்கினர். இதனல் சக்தி, ஊடல் கொண்டாள் என்பர்.

உருத்திர கணிகையர் இறைவனுக்குச் சந்தனம் பூசி மலரிட்டு வழிபட்டதால் தேவி கோபம் கொண்டு ஊடினள் என்பர்.

பாமரர், ''சுவாமி தாசி வீட்டிற்குப் போய் வந்ததால் அம் மனுக்குக் கோபம் வந்து கதவைச் சாத்திக் கொண்டாள்'' என் கின்றனர்.

## நடை பெறும் முறை

ஆரும் திருநாள் காலேயில் சுவாமிமட்டும் காலேயில் கோரதத் தில் எழுந்தருளுவார்.

பிற்பகல் ஒருமணியளவில் சிவன் கோயில் முன்புள்ள பந்தல் மண்டபத்தில் சுவாமிமட்டும் நிற்கிருர். அவர்முன் நட்டுவனர் (உருத்திர கணிகைபோல் வேடமிட்டு) ஆடுகிருர். அம்மன் சிவன் கோயிலினுள்ளிருந்து கதவைச் சாத்திக் கொள்கிருள்.

சுந்தரரும் சண்டிகேசுவரரும் எழுந்தருளி நிற்கின்றனர். சுந்தரர் அம்மனிடம் தூது செல்கிருர். சுந்தரர் அருகில் ஓதுவார் நின்று திருநாகைக் காரோணப் பதிகத்தில் சுவாமியின்முன் ஒரு பாடலும் அம்மனின் முன் ஒருபாடலுமாக மும்முறை பாடிவருகிருர்.

பின்னர் தம் சொத்துக்களே அம்மனுக்கு எழுதிக்கொடுப் பதாக ஒரு நிகழ்ச்சி இடம் பெறுகிறது. இக்கோயிலின் கருவூலக் கணக்கர் நான்கு ஓலே இதழ்களில் எழுதிய கணக்கைப் படிக்கிருர். (ஓலே கூறும் செய்தியைப் பின்னிணைப்பில் காண்க)

## சுவடியின் நோக்கம்

இந்த ஓலேச் சுவடியால் அறியும் செய்திகளாவன: நாயக்க மன்னர் காலத்தில் இக்கோயிலுக்குரிய சொத்து விவரங்களே ஆறு மாதங்களுக்கு ஒருமுறை (ஆவணி, மாசி) படிக்கும் வழக்கம் இருந்தது. இதனல் புதிதாகச் சேர்க்கப்பட்ட சொத்துக்கள், அணிகலன்கள் பற்றி நன்கொடையாளர் அறிய முடிந்தது. இப் போது முந்தின ஆண்டில் படிக்கப்பட்ட ஓலேயே மீண்டும் மீண்டும் படிக்கப் படுகிறது.

கணக்குகளேப் படித்து ஸ்தலத்தார் (முக்காணியர்) வசம் கொடுக்கின்றனர். இவர்களே கோயில் சொத்துக்களேப் பரம் பரையாக நிர்வகித்து வருகின்றனர்.

## 15. சமணர் கழுவேற்றம்

திருஞானசம்பந்தர் மதுரையில் சமணர்களை வாதிட்டு வென்றார். சமணர் தாம் செய்து கொண்ட ஒப்பந்தப்படி தாமே கழுவேறினர். சமணர் சத்தியம் தவறாதவர் என்கிறார் திரு: மு.ப.

ஆறாம் திருநாளன்று இரவு 10 மணிக்குக் கீழ ரதவீதியின் வடகோடியில் சமணர் வேடமிட்டு ஒருவர் தலை குனிந்து நிற்கிறார். பல்லக்கில் எழுந்தருளும் ஞானசம்பந்தர் (திரு மேனி) அதைக் கண்டு செல்கிறார்.

### சம்பந்தரும் செந்தூர்க் கந்தனும்

திருச் செந்தூர் முருகனே ஞானசம்பந்தராய் அவதரித்தார் என்பர் புலவர் திரு. கீரன்.[21]

அருணகிரி நாதரும்,[22] பகழிக் கூத்தாரும்[23] இக் கருத்தை ஆதரிக்கின்றனர். ''பெம்மான் முருகன் பிறவான் இறவான்'' என்கிறார் திரு ச. தண்டபாணி தேசிகர். ''ஸ்ரீகண்ட புவனத்தின் கீழிருக்கும் சதாசிவாதி ஏழு குரவருள் ஒருவராகிய ஸ்கந்தகுருவே திருஞான சம்பந்தராய் அவதரித்தார் என்கிறார் திரு. மு.ப.

### சண்முகர் எழுந்தருளுதல்

ஆவணி மாசித்திருவிழாக்காலங்களில் ஏழு எட்டு ஆகிய நாட்களே சிறப்புடையன. பெருங்கூட்டம் கூடுவதும் இந்நாட்களில்தான். சண்முகர் எழுந்தருளும் நாட்களில் மூலவருக்குப் பூசை நின்று விடுகிறது. இவ்விரு நாட்களிலும் ஏனைய மூர்த்திகள் எழுந்தருளுதல் இல்லை.

### உருகு சட்டசேவை

சண்முகரைச் சப்பரத்தில் எழுந்தருளச் செய்யும் நிகழ்ச்சியே '**உருகு சட்டசேவை**' எனப்படும். சண்முகர் இருக்குமிடத்தையும் சப்பரத்தையும் ஒரு பலகையினால் இணைப்பர். பலகை சாய்வு சாரமாக அமையும். சண்முகரை நகர்த்தி மூலவருக்கு நேராகச் சப்பரத்தில் அமர்த்தித் தீபாராதனை காட்டுகின்றனர். மூலவரது சக்தியைப் பெற்று சண்முகர் சீபலி மண்டபத்தில் தங்கியபின் சண்முக விலாசத்தை அடைகிறார். அங்கு அபிடேகம், அலங்காரம் பெற்று வெற்றிவேர்ச் சப்பரத்தில் புறப்படுகிறார்.

சுற்றிலும் வெற்றிவேர்த் தட்டிகளால் அலங்கரிக்கப்பட்ட சப்பரத்தில் பிள்ளையன் மண்டபத்திற்கு (தூண்டுகை விநாயகர் கோயிலின் முன் இடப்புற முள்ளது) எழுந்தருளுவார்,

## மாலையில் சிவப்புச்சாத்தி

மாலையில் நான்கு மணியளவில் பிள்ளையன் மண்டபத்
ருந்து தங்கச் சப்பரத்தில் செம்பட்டணிந்து சிவப்பு நிறமு
மலர்களைச் சூடி எழுந்தருளுகிறார். இதைச் '**சிவப்புச் சாத்தி**' என்
சிவனெனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி எம் மாரு
காட்சி தருகிறார். சப்பரத்தின் பின்புறம் நடராசர் திருக்கோ
கொள்கிறார் (நி. ப. எண் 15) நடராசர் கோலங் கொள்வதற்
கூறப்படும் காரணங்களாவன;

1. **சிலை மீட்பு:-** கி. பி. 1653 ஆம் ஆண்டு சிலைகளைக் க
விருந்து மீட்ட போது முதலில் நடராசர் சிலை கிடைத்,
பின்னரே சண்முகர் சிலை கிடைத்தது என்பர். அதன் !
வாகவே இவ்வாறு அலங்கரிக்கின்றனர்.[24]

2. **அருணகிரிக்கு அருளல்:-** அருணகிரி நாதர் ஆறுமுகப் (
மானிடம் நடராசர் நடனக் கோலத்தைக் காட்டுட
வேண்டினார். ஆறுமுகன் ஆடிக் காட்டியதை நினைவு கூ
இக்காட்சி என்பர்.[25]

3. **ஆறுமுகப் புலவருக்கு அருளல்:-** கந்தசாமிப் புலவ(
ஆறுமுகப் புலவர் என்னும் மகனிருந்தார். துறவியான ‹
வேண்டு கோளுக்காக ஆடினார் என்பர்.[26]

4. **சம்பு பக்கம்:-** சண்முகரைச் சம்பு பக்கமாக (சிவனாக)
படுகிறவர்களுக்காக இக்காட்சி என்பர். திரு ச. தண்டட
தேசிகர்.

5. **இரு வழிபாடுகளின் இணைப்பு:-** சிவ வழிபாட்டையும் (
வழிபாட்டையும் இணைக்கும் முயற்சியாகவே இது தோ
கிறது.

## வெள்ளை சாத்தி:

சிவப்புச் சாத்தி வலம் வந்த பின் இரவில் 1 மணியள
பந்தல் மண்டப முகப்பிலுள்ள வெங்கு பாட்சா மண்டப
அமர்கிறார் சண்முகர். திரு முழுக்கு நடைபெறுகிறது. நட்டு
ஆட நடனம் காண்கிறார். வெள்ளிச் சப்பரத்தில் வெள்ளு
அணிந்து வெண்ணிறப் பூக்களால் அணி செய்விக்கப்பட்டு ‹
தருளுகிறார். இக்காட்சியின் போது அணிகலன்கள் எதையும் ;
வதில்லை. வைகறைப் பொழுதில் புறப்பட்டு விரைவாக வீதி
வந்து மேலக்கோயிலையடைகிறார். இது மறைத்தல் தொழி
சுட்டுமென்பர். இது, பிரும்மாவும் தான் என்பதைக் க
மென்பர்.

## பச்சை சாத்தி

எட்டாம் திருவிழாவன்று காலையில் எழுந்தருளும் இக் கோலமே மக்களைப் பெரிதும் கவர்கிறது. பச்சைக் கடைசல் சப்பரத்தில் சண்முகரை அமர்த்திப் பச்சைப் பட்டுடை அணிவித்து, மருக்கொழுந்து, பச்சை மற்றும் இலைகளால் கட்டப்பட்ட மாலைகள் சூட்டி எழுந்தருளச் செய்வர். பச்சை சாத்தி வரும் போது பன்னீர் அபிடேகம் சிறப்பிடம் பெறுகிறது. தேரோடும் வீதிகள் பன்னீரால் சேறுகின்றன.

இஃது அருளுதலைக் குறிக்கும். அனைத்து ஆன்மாக்களுக்கும் அருளும் சதா சிவ மூர்த்தியும் தான் என்பதைக் காட்டுகிறது என்பர்.

திருமாலின் அமிசமென்பார் சிலர்.[27] சண்முகர் அப்படியே திருக்கோயிலுக்குத் திரும்பிய பின்னரே திருக்காலங்கள் (இரண்டு நாட்களுக்குமுரியவை) நடைபெறுகின்றன.

சண்முகர் எழுந்தருளுதல் திருவிழாவின் 21 உறுப்புக்களில் கூறப்படாத சிறப்பு நிகழ்ச்சி. ஆயினும் இடையிலே இடம் பெறுவதால் உரிய இடத்தில் கூறப்பட்டுள்ளது.

## 16. பரி வேட்டை

குதிரை (பரி)யின் மீதேறிச் செல்லுவதால் இப்பெயர் பெற்றது. எட்டாம் திரு நாளிரவில் இடம் பெறும். ஒரு வெள்ளிக் குதிரையில் அலைவாயுகந்த பெருமானும், மற்றொரு வெள்ளிக் குதிரையில் குமர விடங்கரும் எழுந்தருளி திருநெல்வேலிச் சாலையிலுள்ள வேட்டை வெளி மண்டபத்தையடைந்ததும் தீபாராதனை நிகழும்.

சேரமான் பெருமாள் பொருளைக் கொடுக்கச் சுந்தரர் அதை வாங்கிக் கொண்டு திரு முருகன் பூண்டி வழியாகச் சென்றார். பூதங்கள் வேடர் வடிவில் சென்று வில்லைக் காட்டி வெருட்டிக் கவர்ந்து சென்றன. சுந்தரர் திரு முருகன் பூண்டி இறைவனிடம் முறையிட்டார். இறைவன் வேட்டைக்குச் சென்று பொருளை மீட்டுக் கொடுத்தார். இதை 'வேடு பறி' என்பர்.

## 17. பொற் சுண்ணமிடித்தல்

விழா நிறைவுறும் நாளில் நீராடுதல் தமிழர் வழக்கம்.[28] இது பத்தாம் திருநாளன்றிரவில் நடைபெறுகிறது. சண்முகர் திருமுன் மரவுரலை வைத்து மணிவாசகரது திருப்பொற் சுண்ணப் பதிகத்தில் மூன்று பாடல்கள் பாடி மஞ்சளை உரலிலிட்டு உலக்கையால் இடிக்கின்றனர். இவ்வாறிடித்த பொடியினைக் கும்பத்துள் வைக்கப்பட்ட

நீரில் கலந்து அத்திரதேவர் திருமுழுக்குப் பயன்படுத்துவர். மஞ்சள் நச்சுக்கொல்லி. குளிக்கும் போது மஞ்சளைப் பயன்படுத்துதல் நன்று எனக் காட்டுதல் இதன் நோக்கம்.

## 18. கொடியிறக்குதல்

பத்தாம் திருநாளன்று இரவில் செப்புக் கொடிமரத்தில் ஏற்றி வைக்கப்பட்ட கொடி இறக்கப்படுகிறது. கொடிப் படத்தை விதிப்படி பூசித்து இறக்கி அதில் எழுந்தருளச் செய்த தேவர்களைச் சம்யோஜனம் (ஒடுக்கிக் கொள்வது) செய்து வழிபடுவர். வேள்வியும் இத்துடன் முடிவடைகிறது. அன்றிரவில் மௌனபலி[29] நடைபெறுகிறது. மூடுபல்லக்கில் சீபலிநாதர் எழுந்தருளிச் சந்தித்தேவதைகட்கு அருள் செய்கிறார்.

## 19. அருள் வெள்ளத்தழுந்துதல்

பத்தாம் நாளிரவில் நாழிக்கிணற்றருகே அத்திர தேவரை எழுந்தருளச் செய்து நீராட்டுகின்றனர். ஆன்மாக்கள் அவனருளில் கலத்தலைக் காட்டும் இஃது என்பர். தீர்த்தமாடியபின் காப்புக் கட்டிய சிவாச்சாரியார் காப்பு நூலினைக் கழற்றிவிடுகிறார்.

கொடிமரத்தடியில் முக்காணியக் கட்டியங்காரர் தேவர்களை வழியனுப்பும் கட்டியம் கூறுவார்.

## 20. ஆச்சாரியார் விழா

விழாவில் காப்புக் கட்டிய சிவாச்சாரியாருக்குச் சிறப்புச் செய்தல் இதன் நோக்கம். சிவாச்சாரியாருக்குப் பட்டுக் கட்டிப் பூரணகும்பம், தட்டுமாலைப் பிரசாத மரியாதைகள் அளிப்பர். மேளதாளங்களோடு அவரை யானைமீதமர்த்தி ஊர்வலம் வந்து அவரது திருமடத்தில் வீற்றிருக்கச் செய்து பிரசாதம் பெறுவர்.

## 21. அடியார் விழா

மங்கல உரைகேட்டு மகிழ்தல். மங்கலத்துடன் இறைவனை ஆலயத்திற்கு எழுந்தருளச் செய்தல் அடியார் விழாவாகும். மாலையில் திருவிழாக்களைப்பு நீங்குமாறு குமரவிடங்கர் மற்றும் நாச்சிமார்கட்கு வெந்நீரில் மஞ்சட் பொடியையிட்டுத் திருமுழுக் காட்டுகின்றனர். இதனை மஞ்சள் நீராட்டு என்பர்.

## சிறப்பு நிகழ்ச்சிகள்

கலையரங்கில் 12 நாட்களிலும் சொற்பொழிவுகளும், இசை, நாடக நிகழ்ச்சிகளும் காலை மாலை ஆகிய இருவேளைகளிலும் நடைபெறுகின்றன.

3,4,5, திருநாளன்று காலையில் திரு. சரவண ஐயர் நடுநிலைப் பள்ளி மாணவ மாணவியர் விநாயகர், சரசுவதி புகழ்பாடுகின்றனர்.

2ஆம் திருநாள் முதல் தேவதான வேத பாடசாலை, கொழுமம் வேத பாடசாலை மாணவர்களின் வேத பாராயணம் நடைபெறுகிறது.

அனைத்துத் திருநாட்களிலும் தேவாரம் பாடப்படுகிறது.

2,3,4,5,7,8,12 ஆகிய திருநாட்களில் திருப்புகழ்ப் பாராயணம் நடைபெறுகிறது.

### திருச்சாழல் பாடுதல்

ஒன்பதாம் திருநாளன்று காலையில் குமரவிடங்கர் ஊர்வலம் வந்திறங்கியவுடன் மணிவாசகரது திருச்சாழல் பாடப்படுகிறது.

## ஆ தூய்மை பெறுதல்

## கந்தர் சட்டி விழா

ஐப்பசித் திங்களில் அமாவாசையை யடுத்து ஆறும் நாள் முருகன் சூரனை வென்ற திருநாளாகக் கொண்டாடப் படுகிறது. ''முருகனின் செயல்கள் திரும்பச் செய்து காட்டப்படுதலே இத் திருவிழாக்களின் நோக்கம்'' என்கிறார் குளோதி.[1] இதனைக் கொண்டாடுவதற்கான காரணம், கொண்டாடும் முறை ஆகியவற்றை ஆராய்வோம்.

### (அ) கொண்டாடக் காரணம்

#### கந்தபுராணக் கூற்று

ஐப்பசித் திங்கள் வளர்பிறையில் முதல் ஆறுநாட்களும் முருகனைத் தம்பவிம்பம் கும்பங்களில் பூசை செய்து உண்ணாநோன்பிருந்தனர் தேவர்கள் என்கிறார் கச்சியப்பர்.[2]

#### மகாபாரதம் கூறும் செய்தி

''இருடிகள் அமாவாசையன்று வேள்வியைத் தொடங்கினர். தீயின்வித்து ஆறுநாட்கள் சேகரிக்கப்பட்டன. சட்டியன்று எழுஞாயிறு போன்ற வண்ணத்துடன் சுப்பிரமணியர் பிறந்தார் என்று மகாபாரதம் கூறுகிறது[3]

### குளோதி கூறும் செய்தி

''புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை ஆகிய மூன்று திங்கள்களும் இரவுக்குரிய திருவிழாக்கள் நடைபெறுகின்றன. அண்டத்தின் (cosmic) நள்ளிரவு கழிகிறது. புதிய ஆண்டு தொடங்குகிறது. என்கிறார்.[4]

### தத்துவ வாதிகள் கூற்று

முருகன், யானைமுகன், சிங்கமுகன், சூரபன்மன் ஆகிய மூன்று அரக்கர்களை ஒழித்தான். இம்மூன்று அரக்கர்களும் முறையே மாயை, கன்மம், ஆணவம் ஆகிய மலங்களின் குறியீடுகளே ஆகும் என்ப. முதலில் மாயையை ஒழிக்க வேண்டும். அடுத்து கன்மத்தை ஒழிக்க வேண்டும். மூன்றுவது ஆணவத்தை ஒடுக்கி ஆண்டவனைச் சேர வேண்டும். ஆணவம் ஒழியாது என்பதைக் காட்டவே சூரன் முருகனுக்கு மயிலாகவும், சேவலாகவும் பணி புரிகிறுன் என்பதைக் கூறுகின்றனர்.[5]

### நாடோடிக்கதை

''சூரபன்மன் முருகனைத் தூக்கிக் கொண்டு கடலில் ஒளிந்து கொண்டான். கோயிலில் முருகன் இல்லாததால் குடத்துக்குள் முருகனை எழுந்தருளச் செய்து சிவபெருமானை நோக்கி முருகன் திரும்பக் கிடைக்க வேண்டுமென வேள்வி செய்வதுதான் கந்தர் சட்டி என்கிறார் சுப்பிர மணிய சாஸ்திரி.[6] இக்கதை கி பி. 1648 இல் இக்கோயில் சிலைகள் டச்சுக்காரர் கவர்ந்து சென்றதை அடிப் படையாகக் கொண்டெழுந்திருக்கலாம்.

## கொண்டாடும் முறை

### 1 வேள்வி

ஐப்பசித் திங்கள் அமாவாசையையடுத்து ஆறு நாட்களும் வள்ளி,தெய்வயானை கோயில்களுக்கிடையேயுள்ள வேள்விக்கூடத்தில் (யாகசாலையில்) காலையிலும் மாலையிலும் வேள்வி நடைபெறுகிறது.

### நடத்துவோர்

சிவாச்சாரியாருள் காப்புக் கட்டியவர் பிரதான ஆச்சாரியார் எனப்படுவார். மந்திரங்கள் தடைபடாமல் உதவுபவர் சாதகாச் சாரியார் ஆவார். மற்றும் சுற்றிலுமுள்ள கும்பங்கட்குத் தூப தீப நிவேதனம் காட்டவும் சில சிவாச்சாரியார்கள் துணை செய்கின்றனர்.

## வேள்விக்கூட அமைப்பு (தரைப்படம் எண் 2)

### தம்பம் (தீ)

ஓம குண்டம் (தீயெழுப்பும் குழி) அறுகோண வடிவில் அமைந்துள்ளது. அதனருகே பிரதான ஆச்சாரியார் (எண் 54) சாதகாச்சாரியார் (எண் 55) அமருமிடங்கள் அமைந்துள்ளன.

### கும்பம் (குடங்கள்)

கும்பங்களை மண், செம்பு, வெள்ளி, தங்கம் ஆகியவற்றால் அமைக்கலாம். வரைபடத்திலுள்ள (த. ப. எண். 2) எண்களின் படி கும்பங்கள் எவரைக் குறிக்கும் என்பதைக் காண்போம். 1, 6, 8, 13, 15, 20, 22, 27 ஆகியவை துவார பாலகர்களைக் குறிக்கும். 2. இந்திரன் 3. சூரியன் 4. அக்கினி 5. க்ஷேத்திர பாலர் 7. வித்தியாகலை, 9. எமன், 10. வாஸ்து பிரும்மா, 11. நிருதி 12. திருமால், 14. பிரதிட்டாகலை 16. வருணன் 17. இலக்குமி 18. வாயு 19. விநாயகர் 21. நிவர்த்திகலை 23. சண்டிகேசுவரர் 24. சப்தகுரு 25. ஈசானன் 26. பிரும்மா 28. சாந்திகலை 29, 30 - பரமேசுவரன், பரமேசுவரி 32. ரிக்வேதம் 33. யசுர்வேதம் 34. அதர்வண வேதம் 35. சாமவேதம் 36. வருண கும்பம் 37. பஞ்ச கவ்வியம் 38. (மேடையில்) முருகப் பிரான் 39. வள்ளியம்மை 40. தெய்வயானை 41—48 அட்ட வித்தியேசுவரர்.[7] 49. சோமகும்பம் (சுற்றிலும் முளைப் பாலிகைகள் உள்ளன) 53. நாள் வழிபாட்டிற்குரியன.

### தகடு (ரக்ஷை) வைக்கும் பெட்டி (எண் 56)

மேடையில் பெரிய கும்பங்களின் முன் மரப்பெட்டியொன்றில் செம்பு, வெள்ளி, தங்கத்தகடுகள் வைக்கப்பட்டுள்ள பெட்டி உள்ளது. இதிலுள்ள தகடுகளை சட்டியன்று இரவில் திருக்கோயிலார் அன்பர்களுக்கு விலைக்குக் கொடுக்கின்றனர்.

### தகட்டின் அமைப்பு

தகட்டினை வடமொழியில் 'யந்திரம்' என்பர். 'முருகன்' என்னும் நூலில் எட்டுவகை யந்திரங்களின் படங்கள் உள்ளன.[8] அவற்றில் ஏழாம் வகையைச் சேர்ந்தது இக் கோயிலில் வழங்கப் படும் யந்திரம். 'சரவணபவ' என்னும் ஆறெழுத்து மந்திரத்திலுள்ள எழுத்துக்களை அறுகோண முக்கோணத்தில் இடம் மாற்றியமைப்பதால் யந்திரங்களின் பெயர்கள் வேறு படுகின்றன.

சதுர வடிவமான தகட்டில் அறுகோண முக்கோணம் வரையப்பட்டு நடுவில் 'ஓம்' என்னும் பிரணவம் எழுதப்படுதல்

வழக்கம். இக்கோயிலில் வழங்கப்படும் தகட்டில் 'ஓம்' என்பது அறுகோண முக்கோணத்தைச் சுற்றி எழுதப்படுகிறது. அறு கோணத்தைக் சுற்றிலும் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டில.

தனிப்பட்டவர்களும் தாங்கள் கொண்டுவரும் தகடுகளைப் பூசையில் வைக்க அனுமதிக்கப் படுகின்றனர். ஆனால் இதற்கு எனத் திருக்கோயிலார் கட்டணம் வசூலிக்கின்றனர்.

### பிம்பங்கள் (எண்கள் 50, 51, 52)

பெரிய கும்பங்களுக்குப் பின்புறமுள்ள மேடையில் செந்தில் நாயகர், வள்ளி, தெய்வயானையம்மை திருமேனிகள் வைக்கப் படுகின்றன.

### கும்ப வழிபாடு

பிள்ளையாரை வழிபட்டுப்பின் காலையில் சூரிய கும்பத்திற்குப் (மாலையாயின் சந்திர கும்பம்) பூசை செய்கின்றனர். வருண கும் பத்தில் புனித ஆறுகளின்[10] நீரினைப் பாவனையாக வரச்செய்து அக்கும்பத்தினுள் மாவிலையிட்டு வேள்விக் கூடத்தைத் தூய்மை செய்கின்றனர். இதனைத் 'தலசுத்தி' என்பர். அடுத்துப் பஞ்ச கவ்வியம் (ஆனைந்து எனப்படும் காராம் பசுவின் பால், தயிர், நெய் சாணம், மூத்திரம் ஆகியவை) கலந்த கும்பத்திற்குப் பூசை செய்து அக்கும்பத்திலுள்ள பொருட்களைச் சுற்றிலும் தெளிக் கின்றனர். இதைச் 'சூக்கும சுத்தி' என்பர். கண்ணுக்குத் தெரி யாத அழுக்கினை இது போக்கும் என்கின்றனர்.

பின்பு, பிரதான ஆச்சாரியாரும், சாதகாச்சாரியாரும் மந்திரங் களைக் கூறி நியாசம் செய்கின்றனர்.[11]

தம்முள் முருகப் பெருமானை எழுந்தருளச் செய்த பின் கும்பங்களில் தருப்பைப் புல் முடிச்சினால் பிரதான ஆச்சாரியார் தொட்டு, முரு கன், வள்ளி, தெய்வ யானை ஆகியோரை மந்திரங்களால் எழுந் தருளச் செய்கிறார். இதனை 'ஆவாகனம்' என்பர்.

### தீ வழிபாடு

வேள்வித் தீயினை எழுப்பப் பல வகை மரங்களின் சுள்ளிகளைப் பயன்படுத்துகின்றனர்.[12] இவை மருத்துவப் பயன் படைத்தவை. சிருக்கினால்[13] நெய்யை ஊற்றி வேள்வித் தீயைப் பெருக்கு கின்றனர். சாதகாச்சாரியார், பொருட்களை எடுத்துச் சிருக்கில் வைக்கப் பிரதான ஆசாரியார் வேள்வித் தீயிலிடுகிறார். நவ தானி யங்கள் படைக்கப் படுகின்றன. நவ தானியங்களில் கோதுமை சூரியனுக்கும், வெண் கடுகு சந்திரனுக்கும், துவரை செவ்வாய்க்

கும், பாசிப் பயறு புதனுக்கும், கடலை வியாழனுக்கும், வெள்ளை மொச்சை சுக்கிரனுக்கும், எள் சனிக்கும், உளுந்து இராகுவுக்கும், காணம் கேதுவுக்கும் உரியதென்பர் திரு. இ. சா.

கீழ் வரும் மருந்துப் பொருட்கள் படைக்கப் படுகின்றன: பச்சை மஞ்சள், முட்டா மஞ்சள், விறலி மஞ்சள், கஸ்தூரி மஞ்சள், வெற்றி வேர், விலாமிச்சை வேர், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், குங்கிலியம், சத்துமா, யவை (நெல்) மூங்கிலரிசி, காட்டுக் கோதுமை, நெல் வகை, கோஷ்டம், பூலாங்கிழங்கு, தாமரைக் கிழங்கு, தண்ணீர் விட்டான் கிழங்கு, புல்லரிசி, தாளிசப் பத்திரி, இஞ்சி, பச்சிலை, சடாமஞ்சில், அவல், நெல் பொரி, பொரி கடலை, சர்க்கரை, பேரீச்சம் பழம், கற்கண்டு, முந்திரிப் பழம், முந்திரிப் பருப்பு, கிஸ்மிஸ், ஏலம், கிராம்பு, சாதிக்காய், சாதிப் பத்திரி, பப்படப் புல், பச்சைக் கற்பூரம், குங்குமப் பூ, கஸ்தூரி, கோரோசனை.

அடுத்து, மா, பலா, வாழை, ஆரஞ்சு, திராட்சை, ஆப்பிள், நெல்லி, மாதுளை, விளா, எலுமிச்சை, நாவல், கொய்யா, அன்னுசி, முதலிய பழங்கள் இடப்படுகின்றன.

திரு முழுக்குக்குரிய பொருட்கள்[14] இடப்பட்ட பின் மலர்களிடப்படுகின்றன. வெண் சோறு, சர்க்கரைப் பொங்கல் சிறு பயற்றம் பொங்கல், புளியோதரை, தேங்காய்ச் சோறு, தயிர்ச் சோறு, ஆகிய நிவேதனங்களைப் படைத்த பின் வடை அப்பம், அதிரசம், எள்ளுருண்டை, தேங்குழல், ஆகியன படைக்கப் படுகின்றண. அப்போது பஞ்ச வாத்தியம் முழங்குகிறது.

பூரணுகுதி (வேள்வி நிறைவு) செய்யும் போது நாதசுரமும் முழங்குகிறது. ஒரு வெள்ளித் தட்டில் வைக்கப்பட்டுள்ள தேங்காய், வெற்றிலை, பாக்கு, வெற்றிவேர், விலாமிச்சை வேர், புனுகு, சவ்வாது, பச்சைக் கற்பூரம், குங்குமப் பூ, பொரி தங்கத் தகடு, ஏலம், கிராம்பு, கத்தூரி, கோரோசனை ஆகியவற்றைப் பட்டினுல் சுற்றி வேள்வித் தீயிலிட்டு வேள்வியை நிறைவு செய்வர்.

## பிம்ப வழிபாடு

தம்ப வழிபாடு முடிந்த பின் வேள்விக் கூடத்திலுள்ள பிம்பங்கட்குத் திரு முழுக்கு நடை பெறுகிறது. உச்சிக் காலம் முடிந்த பின் வேள்விக் கூடத்திலுள்ள திருமேனிகட்குப் பதினறு தீபாராதனைகள் நிகழ்கின்றன. அருச்சனை, கட்டியம், பஞ்சாங்கம் படித்தல், நால் வேதம் ஓதுதல், பஞ்ச புராணம், திருப் புகழ் பாடுதல் நடை பெறுகின்றன.

## 2. சுவாமி எழுந்தருளுதல்

தீபாராதனை முடிந்த பின்னர் செந்தில் நாயகர் வள்ளி, தெய்வ யானை திருமேனிகளைச் சிறிய தங்கச் சப்பரத்தில் வைத்து அலங்கரித்து நண் பகல் 12 மணிக்கு முதல் சுற்றுலையில் தெய்வ யானையம்மை கோயில் முன்பிருந்து எழுந்தருளச் செய்கின்றனர். அடியார்கள் வீர வாள் வகுப்பும் வேல் வகுப்பும் பாடி முன்னே செல்லச் சப்பரம் சண்முக விலாச மேடையை யடையும். அங்கு நடை பெறும் தீபாராதனை சிறப்பிடம் பெறுகிறது.[15]

இரவில் இத்திருமேனிகளைத் திருவாவடுதுறை ஆதீனச் சட்டி மண்டபத்தில் வைத்துத் திரு முழுக் காட்டித் தங்கத் தேரில் கிரி வீதி வலம் வரச் செய்கின்றனர். இவ்வாறு ஐந்து நாட்கள் நடை பெறும்.

### சட்டித் திரு நாள்

''ஆறு நாட்கூடி ஒரு கொக்குப் (மாமரம்) பட்டது. அகப் பட்ட கொக்கைப் பிடித்தொரு சட்டியில் (ஆறும் நாளில்) வைத்துச் சாறுக்கி (திரு விழாவாக்கி) வேதப் பிராமணரும் சைவரும் கொண்டாடுகின்றனர்.[16]'' ஆறும் நாள் நிகழ்ச்சிகள் சிறப்பிடம் பெறுகின்றன அன்று மாலை நான்கு மணியளவில் கடற்கரையில் சூரனை வெல்லும் திரு விழாத் தொடங்குகிறது.

முதலில் யானை முகாசுரனுடன் போர் தொடங்குகிறது. யானை முகன் வலமிடமாகச் சுவாமியைச் சுற்றி வருகிறுன். தலையில் பட்டுக் கட்டிய பட்டர் வேலால் அச்சூரன் நெற்றியில் குத்தி வீழ்த்துகிறுர்.

அதே உடலில் சிங்க முகாசுரன் தலை பொருத்தப்படுகிறது. முற்றுகைப் போராட்டம் முன் போல் நடை பெறுகிறது. பட்டர் சிங்க முகன் நெற்றியிலும் வேலால் குத்தி வீழ்த்துகிறுர்.

அடுத்து, சூரபன்மன் தலை அதே உடலில் பொருத்தப் படுகிறது. முன் போலவே முற்றுகை வீழ்ச்சி.

நான்காவதாக மாமரமும் சேவலும் அவ்வுடலில் பொருத்தப் படுகின்றன. மாமரம் வெட்டுண்டதும் சேவல் பறக்கிறது. ஒரே உடலில் தலைகளைப் பொருத்துவது ஒரே உடலில் மாயை, கன்மம், ஆணவம் பொருந்தியுள்ளதைக் காட்டுகிறதோ என எண்ணத் தோன்றுகிறது.

சூரனை வென்ற பின் கடற்கரையிலுள்ள சந்தோஷ மண்டபம் என்னும் மேடையில் செந்தில் நாயகரை அமர்த்தி வழிபடு கின்றனர். அப்போது கடல் அலைகளோடு போட்டியிடுவது போல் மனிதர் தலைகள் பேரளவில் காணப்படும்.

இரவில் 108 மகாதேவர் முன்பு செயந்தி நாதரை அமர்த்தி வேள்விக் கூடத்தில் இது நாள் வரை கும்பங்களில் வைத்திருந்த நீரை (பெரிய கும்பங்களை) எடுத்து வருவர். அப்போது சுவாமிக்கு முன் கண்ணாடி பிடிக்கப்படும். கண்ணாடியில் தெரியும் நிழலுக்கு அபிடேகம் செய்வதாகப் பாவித்து கண்ணாடி முன் நீரினை ஊற்றுவர். இதனைச்'சாயாபிடேகம்' என்பர். இதன்பின் பூசையில் வைத்திருந்த தகடுகளை வலக்கை மணிக்கட்டில் (ரக்ஷாபந்தனம்) கட்டி விடுகின்றனர். தகட்டு விற்பனை தொடங்குகிறது.

## 3 அடியார் நோன்பு

சூரபன்மனை வென்ற இடமாதலின் இங்கு வந்து நோன்பு (உண்ணாவிரதம்) நோற்பதையே மக்கள் சிறப்பாகக் கருதுகின்றனர். நோன்பு கொள்ளும் முறை பற்றிக் காண்போம்.

### எல்லைகள்

நோற்பவர் இச்கோயிலின் எல்லையைத் தாண்டி ஆறு நாட்களும் செல்லுவதில்லை என உறுதி பூணுகின்றனர். கோயிலுக்கு வடக்கெல்லையாக வள்ளியம்மன் குகையும், தெற்கெல்லையாக நாழிக் கிணறும், மேற்கெல்லையாகத் தூண்டுகை விநாயகர் கோயிலும், கிழக்கே கடலும் கொள்ளப்படுகின்றன. இவ்விடம் கடற்காற்று நிறைந்த இடமாதலின் நோய் நீக்கம் பெற வாய்ப்புக் கிடைக்கிறது.

ஆனால் நோற்பவர் தொகை ஆண்டு தோறும் பெருகி வருவதால் திருக்கோயிலார் அனைவருக்கும் அறை வசதி ஒதுக்க முடியாமல் திணறுகின்றனர். நூற்றுக்கணக்கானவர் இரண்டாம் சுற்றுலையிலுள்ள தூண்களுக்கிடையே கயிறுகளைக் கட்டி துணிகளால் மறைத்து அறைகளாக்கித் தங்குகின்றனர். தங்குவதற்கெனத் திறந்த வெளி மண்டபங்கள் அமைக்கலாம்.

### நோற்கும் முறை

ஐப்பசித்திங்களில் அமாவாசையன்று மாலையிலேயே இந்நோன்பைத் தொடங்குகின்றனர், ஆறு நாட்களும் உமிழ்நீர்கூட விழுங்காது இருப்பவரும் உண்டு.'' இவ்வாறு செய்ய இயலாதவர்கள் நண்பகலில் ஆறு மிளகையும் ஆறு கை நீரையும் அருந்தலாம் ... உயிர் உணர்ச்சி வளர்க்கும் விரதமாதலின் பழச்சாறு பருகுதல் அறவே கூடாது'' என்கிறார் திரு. ச. தண்டபாணி தேசிகர்.[17] ஆனால் நடைமுறையில் நோன்பிருப்பவரைக் கீழ் வருமாறு பகுக்கலாம்.

1. உமிழ் நீரும் விழுங்காது உண்ணு நோன்பிருப்பவர்
2. உண்ணு நோன்புடன் வாய் பேசா நோன்புமிருப்பவர்
3. பழச்சாறு மட்டும் பருகுபவர்
4. பிற்பகலில் 1 மணிக்கு மட்டும் பச்சரிசிச் சோறு உண்பவர்.
5. திருமால் கோயிலில் வழங்கும் துளசியும் தண்ணீரும் மட்டும் அருந்துபவர்.

இவ்வகையினரில் நான்காம் வகையினர் தொகை மிகுதி. சட்டிக்கு அடுத்த நாள் சிவனடியாரோடு உணவருந்துதல் சிறப்பு என்கிறது கந்தபுராணம்.[18]

## நோன்பு கொள்ளக் காரணம்

நோய் நீக்கம் கருதிப் பலரும், பிள்ளைப்பேறு கருதிச் சிலரும் ஆன்மாவின் தூய்மை மட்டும் கருதிச் சிலரும் உண்ணு நோன்பு கொள்கின்றனர். இந் நோன்பினைப் பிள்ளைப் பேற்றுக்குரிய நோன்பாகக் கருதுகின்றனர். சட்டியில் இருந்தால் (நோன்பிருந்தால்) அகப்பையில் (கருப் பையில் பிள்ளை) வரும் என்பது பழமொழி. திருமணமாகிப் பல ஆண்டுகள் கழிந்தும் பிள்ளைப் பேறில்லாதவர் இந் நோன்பிருந்து ஆண் மகவு பெற்ற செய்தினை ஆய்வாளர் நேரில் அறிந்துள்ளார்.[19]

## 4. திருக்கல்யாணம்

சூரனை வென்ற வீரனுக்கு இந்திரன் தன் மகள் தெய்வயானையை மணமுடித்துக் கொடுத்தான். இக் கருத்து ஏறு தழுவிய வீரனுக்கு மகட் கொடையளித்தல் போலுள்ளது. தெய்வயானை திருமண நிகழ்ச்சிகளைக் காண்போம்.

### மாலை மாற்றுதல்

சட்டிக்கு மறுநாள் தெய்வயானையம்மை காலையில் (5.30-6.00 மணிக்கு) ஊருக்கு மேற்கே தெப்பக்குளத் தருகிலுள்ள ஆசாரிகள் மண்டபத்திற்கு எழுந்தளுருகிறுர். மாலைவரை அங்குத் தங்கியிருக்கிறுர். இதனை அம்மன் தவமிருக்கிறுர் என்கின்றனர். மாலையில் பூமாலை மாற்றுவதற்காகக் குமரவிடங்கர் எழுந்தருளுவார். தெற்குத் தேர் வீதியின் மேற்குக் கோடியில் இந் நிகழ்ச்சி நடைபெறும். சிவாச்சாரியார் மூலம் தம் தோள் மாலையை அம்மனுக்குக் கொடுத்தனுப்புவார் குமரவிடங்கர்.

### திருமணம்

மேலக்கோபுர வாயில் முன்புள்ள திருமண மண்டபத்தில் தெய்வயானை திருமணம் நடைபெறும். திருமண நிகழ்ச்சிகள் ஐந்து நாட்கள் தொடரும். எட்டாம் திருநாளன்று ஊர்வலம். 9, 10, 11 ஆம் நாட்களில் ஊஞ்சல் காட்சி 12 ஆம் நாள் மாலை மஞ்சள் நீராட்டு (வெந்நீரில் மஞ்சட் பொடியைக்கலந்து) நடைபெறும். ஊர்வலம் வந்து இருப்பிடம் சேர்வர்.

தெய்வயானை திருமணம் திருப்பரங் குன்றில் நடைபெற்ற தாயினும் இங்கு நடைபெறக் காரணம் என்ன? சட்டி விழாவினைச் சூரன் போரோடு முடிக்க விரும்பாதவர் திருமண நிகழ்ச்சியோடு முடிக்கக் கருதியிருக்கலாம். ''தெய்வயானையம்மை இவ்வூர்ச் செகந்நாதரைப் (மூலவருக்கு இடப்புறமுள்ள இலிங்கம்) பூசை செய்து முருகனை அடைந்தார். தெய்வயானைக்காக எழுந்தருளிய செகந்நாதரை மூலவர் பூசை செய்கிறார்'' எனக் குறிப்பிடுகிறது இவ்வூர்த் தலபுராணம்.[20]

## (இ) சுழுவாய்

### 1,2. வசந்த விழாக்கள்

இளவேனில் பருவத்தில் இவ்விழாக்கள் கொண்டாடப் படுகின்றன. இப்பருவத்தில் (சித்திரை, வைகாசி) கருவறையில் தண்ணீர் கட்டி நிற்கும் படி செய்து இறைவனுக்கு சிறுபருப்புப் பாயாசம், நீர் மோர், அப்பம் முதலியவற்றைப் படைத்து வழிபடுதலை 'உஷ்ணசாந்தி உற்சவம்'' (வெப்பம் தணிக்கும் விழா) என்கிறார் திரு. மு. ப. உலகவெப்பத்திலிருந்து ஆன்மா திருவடி நிழலைப் பெறவேண்டிச் செய்யப்படுகிறது என்கிறார். வசந்த விழா, சித்திரை வைகாசி ஆகிய இரு திங்கள்களிலும் பத்து நாட்கள் நடைபெறும். முழுநிலவுடன் கூடிய சித்திரை நட்சத்திரத்தில் சித்திரை திருவிழா முடிவடையும். வைகாசியில் முழுமதியுடன் கூடிய விசாக நாளில் முடிதல் சிறப்பு.

### கொண்டாடும் முறை

இரண்டு மாதங்களிலும் கொண்டாடும் முறை ஒன்று போலவேயுள்ளது. உசசிக்காலமான பின்பு செந்தில் நாயகர் தங்கச் சப்பரத்தில் எழுந்தருளி வசந்தமண்டபம் சேர்வார். சாயுங்காலப் பூசையின் பின்பு அங்கு அவருக்குத் திருமுழுக்கு நடத்தி அலங்காரம் செய்வர். வசந்த மண்டபத்தின் நடுவிலுள்ள மேடையை பதினோரு சுற்றுக்கள் சுற்றி வந்து மண்டபத்தில் அமர்த்துவர். பதினோரு சுற்றுக்களில் இசைக்கப் படுவன வருமாறு:

1. வேதபாராயணம் 2. தேவாரம் 3. திருப்புகழ் 4. பிரம்ம தாளம் 5. நந்தி மத்தளம் 6. சங்கநாதம் 7. பிள்ளைத் தமிழ் 8. நாதசுரம் 9. வேல் வகுப்பு 10. வீரவாள் வகுப்பு 11. கப்பல் பாட்டு.

பின்பு பதினாறு தீபாராதனைகள் நிகழும். கிரி வீதி வலம் வந்து திருக் கோயில் சேர்வார்.

## 3. வைகாசி விசாகம்

இது வைகாசி வசந்த விழாவின் இறுதி நாளாயினும் தனிச் சிறப்புடன் கொண்டாடப் படுகிறது.

## வைகாசி விசாகம்

இது வைகாசி வசந்த உற்சவத்தின் இறுதி நாளாயிறும் தனிச் சிறப்புடன் கொண்டாடப் படுகிறது. இக் கோயிலிலுள்ள கல் வெட்டொன்றிலும் இவ்விழா இடம் பெற்றுள்ளது[21] இந்நாள் முருகன் பிறந்த நாளாகும். பதினாறுநாழிகைக்கு மேல் விசாகம் உள்ள நாளில் காலையில் சிறப்புப்பூசையும் இரவில் திருவிழாவும் நடத்த வேண்டுமென்ற விதி உள்ளதென்கிறார் திரு. மு. ப. இர வில் தீர்த்தவாரி நடை பெறுவதால் அது வரை வியாபித்துள்ள விசாகத்திலேயே விழா நடைபெறவேண்டுமென்கிறார் அவர். இவ் விழாவை அன்பர்கள் ''பன்னிரண்டு மாதாந்தம் கூடியது ஒரு விசாகம்'' என்கின்றனர். இந்நாளில் முருகனை வழி படுபவர் ஆண்டு முழுவதும் முருகனை வழிபட்ட பயன்பெறுவர் என்கின்றனர்.

## மீன் விளையாட்டு

வசந்த மண்டபத்திலுள்ள நீர்த் தொட்டியில் ஆறு பொம்மை மீன்களை விட்டு விளையாடுகின்றனர். உமாதேவியார் சரவணப் பொய்கையில் ஆறுமுகப் பெருமானுக்குப் பால் ஊட்டும் போது அப்பால் பொய்கையில் வழிந்தது. பராசர முனிவரது மக்கள் மீனைப் பிடித்து விளையாடியதால் தந்தையின் சாபம் பெற்று சரவணப் பொய்கையில் மீன்களாகித் திரிந்து கொண்டிருந்தனர். வழிந்த பாலைப்பருகியதும் அவர்கள் சாபம் நீங்கி முன்னை வடிவு பெற்றனர் என்பர்.[22]

கி. பி. 1959 ஆம் ஆண்டிலிருந்து ஆறு மீன் பொம்மைகளை நீரில் விடுவதோடு கரையில் ஆறுமுனிவர் உருவங்களையும் வைத்துக் காட்ட ஏற்பாடு செய்துள்ளனர் என்கிறார் திரு உத்தண்ட ராமன்.[23]

## விசாகத்தின் சிறப்பு

இத்திருக்கோயில் விழாக்களில் பெருமளவில் மக்கள் கூடுவது இவ்விழாவிலேயேயாகும். இராமநாதபுரம் மாவட்டத்தைச் சார்ந்தவர்கள் நூற்றுக்கணக்கான மாட்டு வண்டிகளில் வருகின்றனர். குடும்பத்தினர் அனைவரும் கூட்டாக முடிகாணிக்கை செலுத்துகின்றனர். இளநீர்க்காவடி, மச்சக்காவடி, சர்ப்பக் காவடி (விளக்கம் காணிக்கை என்னுமியலில் உள்ளது) செலுத்துவோரும் இவ்விழாவிலேயே பெருமளவில் செலுத்துகின்றனர்.

## 4. நவராத்திரி

இது புரட்டாசித் திங்களில் மகாலய அமாவாசையை யடுத்து ஒன்பது நாட்கள் சக்திக்குரிய விழாவாகக் கொண்டாடப்படுகிறது. இவ்விழா இக்கோயிலில் இடம் பெறக் காரணம் முருகனும் ஒருவகைச்சக்தியே என்பதால்தான். இச்சாசக்தி, கிரியா சக்திகளோடு ஞானசக்தியாக விளங்குகிறான் முருகன். சனத்குமார பிரசன்ன குமார தந்திரத்தில் இவ்விழாக் கொண்டாட விதியுள்ளதென்கிறார் திரு. மு. ப.

## கொண்டாடும் முறை

சாயுங்காலத்தில் கொலுவைக்கப்பட்டு அர்த்தசாமப் பூசை தொடங்குமுன் கொலுத் தீபாராதனை நடைபெறுகிறது. இவ் விழாவிற்கு அலைவாயுகந்த பெருமானை எழுந்தருளச் செய்கின்றனர். இவரது திருமேனியில் பல வகைத் துணியினாலான உறுப்புக் களைச் சேர்த்து அழகு செய்கின்றனர். ஒன்பது நாட்களிலும் கீழ்க் காணும் கோலம் கொள்கிறார்.

1. அம்மன் அலங்காரம்
2. அரச அலங்காரம்
3. அனந்த சயனம்
4. மார்க்கண்டேயர்
5. மயில் வாகனர்
6. தக்கிணா மூர்த்தி
7. நடராசர்
8. தவழும் கண்ணன்
9. கலைமகள்.

பத்தாம் நாளில் அலைவாயுகந்த பெருமான் சப்பரத்தில் மேலக் கோயிலுக்குச் சென்று அங்கிருந்து வெள்ளிக் குதிரையில் தேர் வீதி உலாவந்து திருநெல்வேலிச்சாலையிலுள்ள வேட்டை வெளி மண்டபத்தில் அம்பு எய்து மீண்டும் தேர்வீதி வலம் வந்து திருக்கோயிலை யடைகிறார்.

முதல் ஒன்பது நாட்களிலும் இன்னிசை, சொற்பொழிவு, பட்டிமன்ற நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

## மார்கழித் திருவாதிரை

நாள் மீன்களில் 'திரு' என்னும் அடைமொழி பெற்றவை திருவாதிரையும், திருவோணமுமாகும். முன்னது சிவனுச்கும் பின்னது திருமாலுக்கும் உரியவை. திரு + ஆ + திரை எனப்பிரித்தால் முறையே பதி, பசு, பாசம் எனப்பொருள்படும். இது நடராசருக்குரியநாள். பெருவிழாவில் ஏழாம் திருநாள் மாலே சண்முகர் நடராசர் கோலத்தில் எழுந்தருளுகிறுர். சண்முகரையும் நடராசரையும் இங்கு ஒன்ருகவே காண்கிருேம்.

மார்கழித்திங்களில் பத்துநாட்கள் இவ்விழா நடைபெறுகிறது. மாணிக்கவாசகர் திருநாள் என்றும் இதனைக் கூறுகின்றனர். திருவாதிரைக்கு முந்திய ஒன்பது நாட்களும் திருவாதிரையையும் சேர்த்துப் பத்து நாட்கள் விழா நடைபெறும். மார்கழி மாதம் திருவாதிரை நாள் இரண்டு வருமாயின் பிந்தியதில் கொண்டாட வேண்டும் என்கிறுர் திரு, மு.ப. ஆனுல் முந்திய நாள் முழுநிலாவுடன் கூடி வந்தால் பிந்தியதை நீக்கி முந்தியதில் கொண்டாட வேண்டுமென்கிறுர் இவர்.

## கொண்டாடும் முறை

விழா நாட்களில் நாள்தோறும் காலேயிலும் இரவிலும் மாணிக்கவாசகர் திருமேனியை அலங்கரித்து நடராசர் முன் வைக்கின்றனர். திருவெம்பாவை இருபது பாடல்களேயும் ஓதுவார்கள் பாட ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் நடராசருக்கு சங்கும்மத்தளமும் ஒலி யெழுப்பக் கற்பூரம் காட்டப் படுகிறது. மணிவாசகர் சீபலி மண்டபச் சுற்ருலேயில் வலம் வருவார்.

## திருவாதிரை

திருவாதிரை நாளன்று வைகறை இரண்டு மணிக்கு நடை திறக்கப்படும். 2.30 மணிக்குப் பள்ளியறை தீபாராதனே நடைபெறும். நடராசருக்குச் சிறப்புத் திருமுழுக்கு நடைபெறும். ஆறுமுகப்பெருமானுக்குரிய அணிகலன்கள் அனைத்தும் அணிவிக்கப்படுகின்றன.

## பசுவழிபாடு

காராம் பசுவைக் கொண்டுவந்து நடராசர் முன் நிறுத்துவர் ''அப்பசு காராம் பசுவாக இருத்தல் உயிர்கள் ஆணவ மலத்தால் மறைப்புண்டு அறியாமையிருள் வயப்பட்டு நிற்றலே உணர்த்தும். அஃது இறைவன் திரு முன்னிலேயை நோக்கி நில்லாமல் இறைவ

னுக்குத் தன் பின்புறத்தைக் காட்டும் நிலையில் நிறுத்தப்படும். அஃது உயிர்கள் இறையருள் பெறுவதில் விருப்பமில்லாமல் அதற்கு மாறுபட்டு உலகியல் நுகர்ச்சியினையே விரும்பி உழலுதலைப் புலப் படுத்தும் இறைவன் சந்நிதியில் கருநிறச் சாந்து (கிருஷ்ணகந்தம்) வழங்கப்பெறும். அஃது இறைவன் உயிர்கட்கு அவை விரும்பி நிற்கும் மலச்சார்பாகிய உலக நுகர்ச்சிகளை வழங்கியருளுதலை அறிவிக்கும். இவ் விழாவில் வழங்கப் படும் கரியாகிய அருள் உணவு ஆணவ மலத்தில் ஒடுங்கிக் கிடக்கும் உயிர்களுக்கு இறை வன் தனுகரணபுவன போகங்களைப் படைத்துக் கொடுத்துக் களிப் பித்தலை அறிவிக்கும்" என்கிறார் திரு ந.ரா. முருகவேள்.[1]

பசுவிற்கு முன் சர்க்கரைப் பொங்கலை வைத்தல் பசு உலக இன்பங்களில் ஆழ்தலைக் காட்டும். பசுவின் முன் கண்ணாடி காட் டப்படுதல் இறைவனைக் கண்ணாடி போன்ற உள்ளத்தில் காண வேண்டும் என்னும் குறிப்புடையது என்பர்.[2]

காலையில் நடராசப் பெருமான் தங்கச் சப்பரத்திலும் மணி வாசகர் வெள்ளிச் சப்பரத்திலும் எழுந்தருளி கிரி வீதி உலா வரு கின்றனர். மாலையில் பார்வதி அம்பாள் ஊஞ்சல் நடைபெறும். மற்றும் முளைக் கொட்டும் (விளக்கம் ஆடிப்பூரம் என்னும் உட் பிரிவில் காண்க.) நடைபெறுகிறது.[3]

## (ஈ) மங்கலப்பேறு

### ஒரு நாள் விழாக்கள்

இத்திருக்கோயிலில் கொண்டாடப்படும் விழாக்களில் ஒரு நாள் மட்டும் கொண்டாடப்படும் விழாக்களைப்பற்றி ஆராய்வோம் இதற்குச் சைவம் என்றும் பெயருண்டு. ஆகந்துவ நித்தியம் என் றும் இதனைக் கூறுவார்.[1]

இவ் விழாவினைத் திங்கள் தோறும் வரும் ஒருநாள் விழாக்கள் என்றும், திங்கள் விழாக்களில் அடங்காத ஒருநாள் விழாக்கள் என்றும் பகுக்கலாம்.

| திங்கள் தோறும் வருவன | திங்கள் விழாவில் அடங்காதன |
|---|---|
| 1. மாதப்பிறப்பு | சித்திரை 1. பரணி |
| 2. அமாவாசை | ஆனி - 2 புனர்பூசம் |
| 3. வளர்பிறைச் சட்டி | ஆடி — 3 பூரம் |
| | 4 சுவாதி |

| | |
|---|---|
| 4. பிரதோட்டம் (2) | ஆவணி — 5 பதினன்கு |
| | 6 அவிட்டம் |
| 5. கார்த்திகை | ஐப்பசி — 7 தீபாவளி |
| 6. திருவாதிரை | கார்த்திகை—8 சோமவாரம் |
| 7. உத்திரம் | தை— 9 பரிவேட்டை |
| | 10 புனர் பூசம் |
| 8. விசாகம் | 11 பூசம் |
| 9. மாதக்கடைசிவெள்ளி | மாசி— 12 மகாசிவராத்திரி |

## குளோதி கூறும் பகுப்பு

இவ் விழாக்களை ஞாயிற்றின் இயக்கத்தால் எழுந்தவை, திங்களின் இயக்கத்தால் எழுந்தவை, நாள் மீன்களின் இயக்கத்தால் எழுந்தவை எனக்குளோதி பகுக்கிருர்.[2] திங்கள் தோறும் வரும் விழாக்களைப் பகுத்தால் பின் வருமாறு அமையும்.

| ஞாயிற்றின் இயக்கம் | திங்களின் இயக்கம் | நாள் மீன்களின் இயக்கம் |
|---|---|---|
| மாதப் பிறப்பு | அமாவாசை | கார்த்திகை |
| | வளர்பிறைச்சட்டி | திருவாதிரை |
| | பிரதோடம் | உத்திரம், விசாகம். |

திங்கள் விழாவில் அடங்காதன:-

| ஞாயிற்றின் இயக்கம் | திங்களின் இயக்கம் | விண்மீன்களின் இயக்கம் |
|---|---|---|
| | ஆவணிபதினன்கு | சித்திரைப் பரணி |
| | தீபாவளி | ஆனிப்புனர் பூசம் |
| | | ஆடிப் பூரம் |
| | | ஆடிச் சுவாதி |
| | | ஆவணி அவிட்டம் |
| | | தைப்புனர் பூசம் |
| | | தைப் பூசம் |

இனி, திங்கள் தோறும் வரும் விழாக்களை (ஆண்டிற்கு ஒருமுறை வரும் சிறப்பு நாட்களுடன் சேர்ந்து ஆராய்வோம்.

## 1 மாதப்பிறப்பு

ஞாயிறு ஒவ்வொரு ராசியிலும் நுழையும் காலம் சங்கராந்தி எனப்படும். தேவர்களின் வாழ்வில் ஓராண்டு ஒருநாளாகக் கருதப் படுகிறது. மனிதர் ஒருநாளினைப் பன்னிரண்டு திருக்காலங்களாகப் பகுத்திருப்பது போல் தேவர்கதம் நாளாகிய ஓராண்டினைப் பன்

னிரண்டு காலங்களாகப் (மாதங்கள்பன்னிரண்டு) பகுத்துள்ளனர். எனவே, ஒவ்வொரு மாதப் பிறப்பும் ஒரு காலமாகக் கருதப்பட்டுக் கோயில்களில் கொண்டாடப்படுகிறது.

இத்திருக்கோயிலில் மாதப்பிறப்பன்று காலையில் மேலவாசல் விநாயகர் திருமுன் 'கணபதிவேள்வி' நடைபெறும். ஏனைய நிகழ்ச்சிகள் பொதுவானவை (~~இவ்வியலின்~~ இறுதியிலுள்ள அட்டவணையில் காண்க)

## சித்திரை விசு

சித்திரைத் திங்களின் முதல்நாள் 'சித்திரைவிசு' எனப்படும். அன்று மேலவாசல் விநாயகர் முன் வேள்வி நடைபெறும். பின் அத்திர தேவரைக் கடலில் நீராட்டுகின்றனர். இதனைத் தீர்த்த வாரி என்பர். ஆறுமுகப்பெருமானுக்கு~~ம் மூலவருக்கு~~ம் சோற்றுத் திருமுழுக்கு (அன்னபிடேகம்)[3] காலையில் நடைபெறும்.

## ஆடிமாதப் பிறப்பு

இது தட்சிணாயன புண்ணிய காலம் என அழைக்கப்படுகிறது.

## ஐப்பசிவிசு

ஐப்பசித் திங்களின் முதல் நாளினை 'ஐப்பசி விசு' என்பர். சித்திரை விசுவில் கண்டவாறு நிகழ்ச்சிகள் நடைபெறும்.

## தை மாதப் பிறப்பு

இதனை உத்திராயண புண்ணிய காலம் என்பர்.

## 2 அமாவாசை

இத்திதியில் தான் முருகன் பிறந்தான் என்கிறார் குளோதி[4] இதனை நினைவு கூரவே திங்கள் தோறும் இவ்விழாக் கொண்டாடப் படுகிறது. பிரமதேவன் அமாவாசையன்று தான் படைப்புத் தொழிலைத் தொடங்கினான் என்பர்.[5]

## ஆடி அமாவாசை

இன்று பகலில் தீர்த்தவாரி இடம் பெறுகிறது. அத்திரதேவர் நீராடும் போது கடலில் பல்லாயிரக் கணக்கானவர் நீராடு கின்றனர். அன்று ஏழைகட்குச் சோறிடல் சிறந்த நற்செயலாகக் கருதப்படுகிறது.

''ஆடியமா வாசையிலே ஆயிரம் பேர்க்'(கு) அன்னமிட்டுத் தேடியதோர் புண்ணியத்தால் செல்வமாய் வந்த கண்ணே'' என்பது இவ்வட்டாரத்துத் தாலாட்டுப் பாடல்.

### தை அமாவாசை

இன்று தீர்த்த வாரி நடைபெறுகிறது. இரவில் இலக்க தீபம் ஏற்றி வைப்பர்.

ஆடி, தை அமாவாசைகள் சிறப்பாகக் கொண்டாடப் படுவதற்குக் குளோதி கூறும் காரணமாவது: இவை உழவுத் தொழில் பருவங்களோடு தொடர்புடையவை. ஆடியில் முளைக் கொட்டுந் திருநாள் நடைபெறும். ஆடிப்பட்டம் தேடிவிதைக்கும் காலம் இது. தைத்திங்கள் அறுவடைக்காலம்.[6]

### 3 வளர்பிறைச் சட்டி

இஃது அமாவாசைக்குப் பின்வரும் ஆறும் திதியாகும். முருகன் ஐப்பசித்திங்கள் வளர்பிறைச் சட்டியில் சூரபன்மனை வென்றதைத் திங்கள் தோறும் நினைவூட்டுவதற்குக் கொண்டாடப்படுகிறது. கந்தர் சட்டி முந்திய பிரிவில் ஆராயப்பட்டது.

### 4 பிரதோடம்

அமாவாசை அல்லது பூரணைக்குப்பின் வரும் பதின் மூன்றும் திதியாகும். ''பிரதோடம் என்பது ஒருநாளின் பகுதி. அது சாய ரட்சை ஆகும்''[7] திங்கள் கிழமைகளில் வருமாயின் மிகு சிறப்புடை யதாகக் கருதப்படும். ''சிவபெருமான் ஆலகால நஞ்சினையுண்ட நாள் ஏகாதசி. தேவர்கள் அமுதம் பெற்ற நாள் துவாதசி. தேவர்கள் மகிழுமாறு சிவன் நடனமாடிய நாள் திரியோதசி.[8] இதனால் பிரதோடம் சிறப்புப் பெறுகிறது.

### 5 கார்த்திகை

கார்த்திகை விசாகம் ஆகிய இரு நாள் மீன்களும் முருக வழிபாட்டில் சிறப்பிடம் பெறுகின்றன. சிவபெருமானது நெற்றிக் கண்ணிலிருந்து விழுந்த ஆறு நெருப்புப் பொறிகளும் ஆறு குழந்தைகளாயின. அக்குழந்தை களுக்குக் கார்த்திகைப் பெண்டிர் அறுவர் பாலூட்டி வளர்த்தனர்.[9] ஆறுமுகப்பெருமான் இதனால் கார்த்திகேயன் எனப் பெயர் பெற்றான். கந்தபுராணம் கார்த்திகை விரதமிருப்பவர் பெறும் பேறுகளை விவரித்துள்ளது. பாமரர் கற்பனையில் கார்த்திகையே முருகன் பிறந்த நாளாகக் கொள்ளப் படுகிறது என்கிறார் குளோதி.[10]

### திருக்கார்த்திகை

கார்த்திகைத் திங்களில் வரும் கார்த்திகை திருக்கார்த்திகை எனப்படும். திருக்கார்த்திகை யன்று வழக்கமான நிகழ்ச்சிளோடு இரவில் சொக்கன்பனை[11] கொளுத்தும் நிகழ்ச்சி நடைபெறும்.

செயந்திநாதர் சண்முக விலாசத்தில் தெற்கு நோக்கி அமர்வார். கடற்கரையில் ஒரு பனையை நட்டுச் சுற்றிலும் பனை ஓலைகளால் கட்டிக் கொளுத்துகின்றனர். பனையை வெட்டிக் கொடுப்பவர் சிறப்புப் பெறுவார். அவருக்குத் தலையில் பட்டுப் பரிவட்டம் கட்டித் தக்கிணை அளிப்பர். எரிந்த பனையோலையின் சாம்பலைக் கரைத்துச் செயந்தி நாதருக்குப் பொட்டிடுவர். இஃது ஒளிக் கடவுளைப் புருவங்களின் மத்தியில் ஏற்றுக்கொள்ளுதலாகும்.

உழவர்கள் ஓலைச் சாம்பலை வாரிக்கொண்டு செல்கின்றனர். தங்கள் நிலங்களில் தூவுவதால் நன்றாகப் பயிர் வளரும் என நம்புகின்றனர். இது பூச்சி மருந்து தெளிப்பது போலாகும்.

இத்திருவிழா பண்டைத் தமிழர் வாழ்வில் இடம் பெற்றிருந்ததைக் கார்நாற்பது, களவழி நாற்பது, அகநானூறு முதலிய நூல் களில் காணலாம்.[12]

## திருவாதிரை

இந்நாள் மீனைக்குளோதி முருக வழிபாட்டிற்குக் கொள்ளவில்லை.[13] இது நடராசருக்குரிய நாள் முருகனைக் குமரகுருபரர் சிவனாகவே கருதி வழி பட்டார். முருகனைச் சம்பு (சிவன்) பக்கமாக வழிபடுவோருளர். எனவே, இக் கோயிலில் இந்நாள் சிறப்பிடம் பெறுகிறது. இன்று நடராசருக்குச் சிறப்புத் திருமுழுக்கு நடைபெறுகிறது.

## மார்கழித்திருவாதிரை

'கழுவாய்' என்ற தலைப்பில் ஐந்தாம் பிரிவில் இவ்விழாவினைப் பற்றிய செய்திகளைக் காணலாம்.

## உத்திரம்

இது சிவபிரான் திருமணநாள். இக் கோயிலில் உத்திர நாளன்று இரவில் ஏகாந்த மான பின்பு தங்கமயில் மீது சீபலி எழுந்தருளுதல் நிகழ்கிறது.

## தை உத்திரம்

கொல்லம் 1084 (கி.பி. 1909) ஆம் ஆண்டு தைத்திங்கள் உத்திர நாளன்று மூலவர் திருவுருவம் புதிதாகப் பிரதிட்டை செய்யப் பெற்றது. இந் நாளினை நினைவு கூர்ந்து இவ்விழாக் கொண்டாடப் படுகிறது.

மூலவர், வள்ளி, தெய்வயானை கோயில் விமானங்களுக்கு நம்பூதிரியும், சண்முகர் விமானத்திற்குச் சிவாச்சாரியாரும் காலையில் குடமுழுக்கு நிகழ்த்துவர்.

மூலவரும் சண்முகரும் காலையில் சிறப்புத் திருமுழுக்குப் பெறுவர். இரவில் மூலவருக்கு மலர்களைக் குவித்து மலரஞ்சலி நடைபெறும். இரவு 8 மணிக்குக் குமரவிடங்கர் தெய்வயானையம்மையுடன் தங்கமயில் வாகனத்தில் எழுந்தருளுவார்.

### பங்குனி உத்திரம்

முருகன் வள்ளியை மணந்த நாள் என்பர்.[14] அதிகாலை 5மணிக்குமேல் வள்ளியம்மை சேர்க்கையிலிருந்து எழுந்தருளி குமரவிடங்கர் சந்நிதிக்கு வந்து திருமுழுக்கு, அலங்காரம் பெற்றுத் தீபாராதனைக்குப் பின் பெரிய பூஞ்சப்பரத்தில் மேலக் கோயில் சென்று தவம் செய்கிறார். அப்போது அம்மன்முன் அன்பர்கள் தினைமா விளக்கேற்றுவர். வள்ளி, முருகனுக்குத் தேனும் தினைமாவும் கொடுத்ததைக் காட்டும்.

மாலை 4 மணிக்கு மேல் குமரவிடங்கர் தங்க மயில் வாகனத்தில் எழுந்தருளி மேலக்கோயில் முன்புள்ள பந்தல் மண்டப முகப்பில் நிற்கிறார். வள்ளியம்மை எதிரில் வந்ததும் தோள்மாலை மாற்றிக் கொள்கின்றனர். இது கற்புமணத்திற்கு முன் களவுமணம் நிகழ்ந்த தமிழர் வழக்கத்தை நினைவூட்டுகிறது.

இரவில் 108 மகாதேவர் சந்நிதியில் கும்பங்களில் முருகனையும் வள்ளியையும் எழுந்தருளச் செய்வர். முருகனுக்குரிய கும்பத்திற்குச் செம்பட்டும் வள்ளியம்மைக்குப் பச்சைப்பட்டும் சுற்றப்படும். வேள்வி வளர்க்கப் பட்டு மாமுதுமறையவர் மறைவழி காட்டத் திருமணம் நடைபெறும். கோயிலிலுள்ள அனைத்துஅம்மன் படிமங்கட்கும் வள்ளி திருமணத்திற்கு முன்னர் தாலி அணிவிக்கப் படும். திருமண முடிவில் வெற்றிலை பாக்கு வழங்குவர்.

மலேயாவில் இந்நாள் தெய்வயானை திருமண நாளாகக் கொண்டாடப் படுகிறது.

### 8 விசாகம்

முருகனின் பிறந்த நாள் இது. இக் கோயிலில் விசாக நாள் சிறப்புடையதாகும். ஆறுமுகப் பெருமான் சிறப்பாகத் திருமுழுக்குப் பெறுவார். ஆறுமுகருக்குரிய முப்பத்தாறு திருமுழுக்கு நாட்களில் விசாகநாட்கள் பதின்மூன்றாகும்.

''விசாகம் என்பது புராண காலத்துச் சிறு தேவதைகளில் ஒன்று என்றும் இது கந்தனோடு ஒன்றாக இணைக்கப்பட்டது என்றும் பண்டாகர் பகர்கிறார்.[15]

### (அ) வகாசி விசாகம்

கழுவாய் என்ற தலைப்பில் முந்திய பிரிவில் தரப்பட்டுள்ளது.

## 9. மாதக் கடைசி வெள்ளி

வெள்ளிக் கிழமை விரதம் சிறப்புடையதாகக் கந்தபுராணத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது. இவ்வட்டாரத்து மக்கள் நடந்து வந்து இந்நாளில் முருகனைத்தரிசிப்பதைப் பெரும் பேறாகக் கருதுகின்றனர். ''மாதாந்தம் நடத்தல்'' என்பது கொடுத்தகடனைத் திரும்பப்பெறக்கடன் பெற்றவரைப் பார்க்கப் பலமுறை நடத்தலைக் குறிக்கும். மாதக் கடைசி வெள்ளியன்று வேறு விழாக்கள் இடம் பெறுமாயின் மாதக் கடைசி வெள்ளி விழா அதற்கு முந்திய வெள்ளிக் கிழமையில் கொண்டாடப்படும்.

### திங்கள் விழாவில் அடங்குவன

இவ்வகையில் பன்னிரண்டு ஒரு நாள் விழாக்கள் இங்கு ஆராயப்படுகின்றன.

## 1. சித்திரைப்பரணி

சிறுத்தொண்டர் நினைவு நாளாக இது கொண்டாடப்படுகிறது. இன்று அலைவாயுகந்த பெருமான் எழுந்தருளுகிறார். அறுபத்து மூன்று நாயன் மார்களுக்கும் குருபூசை நடத்தப்பெற்றாலும் இவ்விழாச் சிறப்புடையது. ''வாளால் மகவரிந்து ஊட்ட வல்லேன் அல்லேன்'' எனப் பட்டினத்தாரும் சிறுத்தொண்டர் செயலுக்கு முதலிடம் கொடுத்துச் சிறப்பித்துள்ளார்.[16]

## 2. ஆனிப்புனர்பூசம்

கி. பி. 1971 ஆம் ஆண்டு ஆனித்திங்கள் புனர்பூசநாளில் இக் கோயிலில் குடமுழுக்கு நிகழ்ந்தது. தை உத்திரவிழாவில் நடைபெறுவது போலவே இந்நாளில் மூலவர், சண்முகர், வள்ளி, தெய்வயானை கோயில் விமானக்கலசங்கட்குக் குடமுழுக்கு நிகழ்த்துகின்றனர்.

## 3. ஆடிப்பூரம்

இது சக்திக்குரிய விழாவாகக் கருதப்படுகிறது. இவ்விழாவினை 'முளைக்கொட்டுத் திருவிழா' என்கின்றனர். இவ்விழா ஆடிப்பட்டம் தேடி விதைத்தலை அடிப்படையாகக் கொண்டது. இவ்விழா நாளன்று பார்வதி அம்மனின் பாதத்தில் முளையோடு கூடிய சிறுபயறு படைக்கப்படுகிறது. அந்தணப் பிரமசாரிகட்குப் பூணூலும் கன்னிப் பெண்கட்கு மஞ்சள், குங்குமம், வெற்றிலை, பாக்கு, தக்கிணையும் தானமாக வழங்கப் பெறுகின்றன. பூசையின் முடிவில் உப்போடு கூடிய பாசிப்பயற்றை அன்பர்கட்கு

வழங்குகின்றனர். உலகில் தானிய வளம் பெருகி இன்புற வேண்டும் என்பதை இது காட்டும். அம்பிகை பூரநாளில் கடல் சூழ்ந்த உலகத்தைப் படைப்பதற்காகத் தோன்றினுள் என்பர் திரு முருகவேள்.[17]

## 4 ஆடிச்சுவாதி

சுந்தரரும் சேரமான் பெருமாள் நாயனுரும் பூதவுடலோடு திருக்கயிலையை அடைந்த நாள். சுந்தரர் திருமேனிக்குச் சிறப்புத் திருமுழுக்கு நடைபெறும். மாலையில் சுந்தரர் தங்கச் சப்பரத்தில் வருவார். இரவில் சேரமான் பெருமாள் உலா வருவார். 'சுத்த மாம் சுவாதி நாளில் சுந்தரர் கயிலை சேர்ந்தார்' என உமாபதி சிவம் தனிப்பாடலில் கூறியுள்ளார்.[18]

## 5. ஆவணி பதினுன்கு

ஆவணித் திங்கள் வளர்பிறை பதினுன்காம் நாளில் இவ்விழா நடைபெறும். பகலில் நடராருக்குச் சிறப்புத் திரு முழுக்கு நடை பெறும். இரவில் நடராசர் கிரிவீதி வலம் வருவார். இந்நாளினை நடராசக்குரிய இராக் காலம்என்பர் முருகவேள்.[19]

## 6 ஆவணி அவிட்டம்

நடராசருக்குப் பகலில் சிறப்புத் திரு முழுக்கு நடை பெறும். இரவில் நடராசர் எழுந்தருளிக் கிரிவீதி வலம் வருவார்.

## 7. ஐப்பசி — தீபாவளி

அதி காலை 3.30 மணிக்குப் பள்ளியறைத் தீபாராதனை நடை பெறும் மூலவர், சண்முகர் சிறப்புத் திரு முழுக்கும் மூர்த்திகட்குப் புத்தாடைசாத்துதலும் நிகழும்.

## 8. கார்த்திகைச் சோம வாரம்

கார்த்திகைத் திங்களில் வரும் திங்கட் கிழமைகள் திருவிழா வாகக் கொண்டாடப் படுகின்றன. காலையில் மூலவருக்குச் சிறப்புக் கலச பூசைத் திரு முழுக்கு நடை பெறும். மூர்த்திகட்குத் தங்க அங்கி சாத்துகின்றனர். இரவில் முதல் சுற்றுலையில் அகல் விளக்கு கள் ஏற்றி வைக்கப்படும். இரவு 8-30 மணிக்குச் செந்தில் நாயகர் பெரிய பூஞ் சப்பரத்தில் கிரிவீதி வலம் வருவார்.

## 9. தைப்பறி வேட்டை

தைத் திங்கள் இரண்டாம் நாள் மாலையில் அலை வாயு கந்த பெருமான் வெள்ளிக் குதிரை வாகனத்திலும் சுந்தரர் சிறிய பல் லக்கிலும் திருநெல்வேலிச் சாலையிலுள்ள வேட்டை வெளி மண் டபத்திற்கு எழுந்தருளுவர்.

இவ்விழா பெரிய புராணத்திலுள்ள சுந்தரர் வரலாற்று நிகழ்ச்சியின் அடிப்படையில் கொண்டாடப் படுகிறது. சேரமான் பெருமாள் சுந்தரருக்குப் பொருட்களைச் சிவார்ப்பண மாகக் கொடுக்காமையினால் சிவபெருமான் வழிப் பறி செய்து மீண்டும் கொடுத்தார் என்கிறார் திரு. மு. ப. இத்திருக்கோயில் ஊழியர்கள் முன்பு வேடமிட்டு நடித்தனர் என்பர்.

## 10. தைப் புனர்பூசம்

கி. பி. 1653 ஆம் ஆண்டு தைத் திங்கள் 23 ஆம் நாள் வெள்ளிக் கிழமை புனர்பூச நாளில் ஆறுமுகப் பெருமானை உலாந் தர் (டச்சுக் கொள்ளையர்) களிடமிருந்து மீட்டுக் கொண்டு வந்து மீண்டும் நிறுவிய நாள். ஆண்டு தோறும் இந்நிகழ்ச்சியை இந் நாளில் நினைவு கூர்வர். இவ்வாண்டில் கொண்டாடப்படுவது 326 ஆவது ஆண்டு விழா எனக் குறிப்பிடுகிறது கோயிலார் நாட் குறிப்பு.[20]

இந்நாளில் ஆறுமுகப் பெருமான் சிறப்புத் திரு முழுக்குப் பெறுகிறார். இரவு ஒன்பது மணிக்கு அலைவா யுகந்த பெருமான் தங்கச் சப்பரத்தில் ஊர்வலம் வருவார்.

## 11. தைப் பூசம்

சம்பந்தர் பூம்பாவையை எழுப்பப் பாடிய போது,

''தைப் பூசமும் காணாதே போதியோ பூம்பாவாய்'' எனக் கூறுவதிலிருந்து இந்நாள் கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முன்பே கொண்டாடப் பட்டதென அறிகிறோம். பழநியில் இவ்விழா சிறப் பாகக் கொண்டாடப்படுகிறது. இங்குக் காலையில் தீர்த்த வாரி நடை பெறும். மூலவரும், ஆறுமுகப் பெருமானும் சிறப்புத் திரு முழுக்கு, சிறப்பு அங்கி பெறுகின்றனர். அலைவா யுகந்த பெரு மான் வடக்குத் தெருவிலுள்ள தைப் பூச மண்டபப் படிக்கு எழுந் தருளுகிறார். இரவு ஒன்பது மணிக்குப் பெரிய பூஞ் சப்பரத்தில் தேர்த் தெருக்களில் உலா வருகிறார்.

பூச நாள், வியாழக் கிழமை பௌர்ணமியுடன் கூடிவரின் மிகு சிறப்புப் பெறும் என்கிறார் திரு. மு ப. திருச்செந்தூர் குரு (வியாழன்)விற்குரிய தலம் என்பர். குருவிற்குக் கடகராசி உச்ச இடமாகும். ஞாயிறு மகர (தை) ராசியிலிருந்து ஏழாம் பார்வை யாகக் கடகராசியைப் பார்க்கின்ற நாளில் இவ்விழாவை நடத்த வேண்டும் என்றும் கூறுகிறார். தைத் திங்களில் இரண்டு பூச நாட் கள் வருமாயின் பிந்திய நாளிலே திரு விழாக் கொண்டாட வேண் டும் என்பது விதி. அதில் சங்கிரம தோடம் ஏற்பட்டால் முந்தியதில் செயயலாம் என்கிறார் திரு. மு. ப.

தைத் திங்கள் இரண்டாம் நாளில் (பறி வேட்டை நாளில்) பூசமும் வருமாயின் முதலில் பறி வேட்டையை நிகழ்த்தி விட்டுப் பின் பூச நாளினைக் கொண்டாடுதல் வழக்கம்.

பார்வதி தேவியால் முருகனுக்கு வேல் கொடுக்கப்பட்ட நாள் இஃதென்று கூறுகிறார் திரு. கே. கே. பிள்ளை.[22] 'பூசம் நாம் புகுதும் புனல் ஆடவே' என்பது அப்பர் திரு வாக்கு.[3]

## 12 மாசி — மகாசிவனிரவு

மாசித் திங்கள் தேய் பிறை பதினான்காம் நாளிரவு சிவனிரவாகக் கொண்டாடப்படுகிறது. இவ்விரவில் விழித்திருந்து பூசை செய்வதால் பெரும் பேறு பெறலாம் என்பது மக்கள் நம்பிக்கை.

ஆறுமுகப் பெருமான் சிவ பூசை செய்யும் கோலம் நடைபெறும். அவருக்கு வலப்புறம் எழுந்தருளியுள்ள ஆன்மலிங்கத்தை எழுந்தருளச் செய்து திரு முழுக்கு, சிறப்புப் பூசை நடத்துவர்.

''மாசித் திங்களில் சதுர்த்தசி திதி இரண்டு வந்தால் முதலில் வருகிற திதியிலேயே செய்வது உத்தமம். இரவில் சதுர்த்தசி இருப்பது உத்தமம் என்கிறார் திரு. மு. ப.

இந்நாளிரவில் 12 மணியிலிருந்து நான்கு காலச் சிறப்புப் பூசை நடை பெறும். இப்பூசைகள் முடிந்தபின்பே இரகசியதீபாராதனை, பள்ளியறைப் பூசை, பைரவர் பூசை நடை பெறும்.

இவ்விழாவினைப் பற்றிக் கந்த புராணம் கூறும் கதை வருமாறு:[24]

ஒரு வேடன் மாசித் திங்கள் தேய் பிறைப் பதினான்காம் நாளன்று வேட்டைக்குச் சென்றான். பகல் முழுவதும் வேட்டையாடியும் ஒன்றும் கிடைக்கவில்லை. இரவில் மிகவும் களைத்து மிக்க பசியோடிருந்தான். இரவில் காட்டில் உலவும் கொடிய விலங்குகளிடமிருந்து தப்புவதற்காக ஒரு வில்வ மரத்தின் மேலேறியிருந்தான். தூங்கி விடாமலிருப்பதற்காக வில்வ இலைகளைப் பறித்துத் தரையில் எறிந்து கொண்டிருந்தான். மரத்தின் கீழே ஒரு லிங்க மிருந்தது. அவனது செயல் லிங்கத்திற்கு அருச்சனை செய்வதாக அமைந்தது. பட்டினி கிடந்து இரவில் கண் விழித்து அருச்சனை செய்ததால் அவன் நரகத்திற்குச் செல்வதினின்றும் தப்பிக் கயிலைக்குச் சென்றான்.

## குடமுழுக்கு

குட நீராட்டு, குட முழுக்கு என்ற பெயர்களில் வழங்கும் 'பாபிஷேககும் விழா' புதிய கோயில் கட்டப் பெறும் போதும், பழைய கோயிலைப் புதுப்பிக்கும் போதும் நடை பெறும்.[25] திரு ஞான சம்பந்தர் இதனைப் 'பெருஞ் சாந்தி' எனக் குறிப் பிட்டுள்ளார்.

புனித நீரைக் கும்பங்களிலிருந்து குறிப்பிட்ட நன்னாளில் நல் வேளையில் இராயகோபுரம், விமானங்கள் ஆகியவற்றின் உச்சியில் ஊற்றுவதே இவ்விழாவின் சிறப்பு நிகழ்ச்சி.

### இங்குக் குடமுழுக்கு நிகழ்ந்த ஆண்டுகள்[26]

கி.பி. 1654 சண்முகரை மீட்டு வந்து நிகழ்த்தியது.
கி.பி. 1675 – சண்முகர் ஜடிபந்தனக் குடமுழுக்கு[27]
கி.பி. 1686 நாச்சிமார் பிரதிட்டைக் குடமுழுக்கு
கி.பி. 1760 ஸ்தூபி சிகரம் முடித்துக் குடமுழுக்கு
கி பி. 1787— இரண்டு இராச கோபுரக் குடமுழுக்கு
கி.பி. 1803 – வீரவாகு, பைரவர் பிரதிட்டைக் குடமுழுக்கு
கி.பி. 1845 மூலத்தானம் முதலிய ஐந்து சந்நிதிகட்குத்திருவனந் தபுரம் தந்திரி அவர்களும் மற்றுமுள்ள மூர்த்தி கட்கு ஆதிசைவர்களும் குடமுழுக் காட்டினர்.
கி.பி. 1868— அஷ்டபந்தன மகா கும்பாபிடேகம்
கி.பி. 1887— ஜடிபந்தன, அஷ்டபந்தன மகாகும்பாபிடேகம்
கி.பி. 1909— மூல ஸ்தானப் புதிய பிம்பம் பிரதிட்டை மற்று முள்ள மூர்த்திகட்குக் குடமுழுக்கு.
கி.பி. 1923 அஷ்டபந்தன மகா கும்பாபிடேகம். தங்கக் கொடி மரம், செப்புக் கொடிமர பிரதிட்டை
கி. பி. 1954 குடமுழுக்கு கி. பி. — 1971 குடமுழுக்கு

### வேள்வி

குடமுழுக்குக் காலத்தில் வேள்விக் கூடத்தில் கீழ்க்கண்டோ ருக்கான வேள்விகள் நடைபெறும்.[28]

*1. விநாயகர் 2 ஆறுமுகப்பெருமான் 3 செந்தில்நாயகர் 4 எழுந் தருளும் மூர்த்திகள் 5 செந்தில் அம்பலவாணர், 6 வீரபாகுமூர்த்தி 7 சிவபரிவார மூர்த்திகள் 8 அறுபத்து மூவர் 9 குகபக்த மூர்த்தி (அருணகிரி நாதர், இடும்பன்) 10 விமானம் 11 சண்டேசுவரர். 12 அங்குர ரட்சா வேள்வி (சந்திரன், கிருத்திகை, ரோகிணி, ஆதி சேடன், நாகக்கன்னி)*

## மருந்து சாத்துதல்

கருவறையில் பீடத்தின்மீது வைக்கப்பட்டிருக்கும் திருவுருவங்கள் ஆடாமல் அசையாமல் உறுதியாக நிலைத்து இருக்க 'அஷ்டபந்தனம்' என்ற மருந்தைச் சாத்துவது மரபு. அஷ்டபந்தனம் என்றால் எட்டுப் பொருட்களால் கட்டுதல் பொருட்களாவன:[29] கொம்பரக்கு, சுக்கான்தூள், குங்கிலியம், நற்காவி, செம்பஞ்சு, சாதிலிங்கம், தேன்மெழுகு, எருமையின் வெண்ணெய். இம்மருந்துப் பொருட்களை இடிப்போர் பயபக்தியுடன் முருகன் பாடல்களைப் பாடியவாறு இடிப்பர்,

## கி பி 1971 நிகழ்ச்சிகள

**18 – 6 — 71** *அனுக்ஞை காலை 7 மணி கணபதி வேள்வி, யானைக்குப் பூசை. இரவு 7 மணி கன்னி விநாயகர் சந்நிதியில்வர்ணம்தனபூசை, கும்பபூசை, அக்கினிகாரியம், வேள்வி நிறைவு.*

**19 — 6 – 71** *மேலவாசல் விநாயகர் சந்நிதியில் நவக்கிரககும்பபூசை, நவதானியபூசை, ஒன்பது சிவாச்சாரியர்களுக்குத் தானம். இரவில் அச்சந்நிதியில் சாந்தி வேள்வி, மூர்த்தி வேள்வி, சம்ஹிதா வேள்வி, திசைவேள்வி.*

**20 — 6 — 71** *மேலவாசல் சக்திவிநாயகர் சந்நிதியில் வாஸ்து சாந்தி, பத, கும்பவேள்வி. சூந்து சுற்றுதல். மாலை 5 மணி சக்திவிநாயகர் முன் மண்ணெடுத்தல், சந்நிதிகளில் கும்பத்தை எழுந்தருளச் செய்து கும்பத்தில் ஆவாஹனம் செய்து வேள்விக் கூடத்தை யடைதல். இரவு 9 மணிக்குச் சோடச தீபாராதனை*

**21 – 6 — 71** *காலை 7 மணிக்குத் தூண்டுகை விநாயகர் சந்நிதியில் விசேடசந்தி. 10-30 மணிக்கு வேள்வி நிறைவு. மாலை 5-30 வேள்வி.*

**22 — 6 71**
**23 — 6 — 71** } *காலை வேள்வி / மாலை வேள்வி*

**21 - 6 71**
**23 6 — 71** } *மூர்த்திகட்கு மருந்து சாத்துதல். / சடத்துவ நியாசம்.*

**24 — 6 — 71** *அதிகாலை 3 மணிக்கு மகாபூர்ணாகுதி. 4-15 மணிக்குப் பிரதான கும்பங்களும் விமான கும்பங்களும் எழுந்தருளுதல்*

## குடமுழுக்கு நிகழ்த்துவோர்

வீரபாகு, வீரமகேந்திரர், செந்தில் நாதர், ஆறுமுகர் சனீசுவரர், பைரவர், கிழராசகோபுரம், குமரவிடங்கர், மேலவாசல் விநாயகர் ஆகிய மூர்த்திகளின் விமானங்களுக்குச் சிவாச்சாரியார்களும். மூலத் தானம், அம்மன், விநாயகர், பெரிய கோபுரம் ஆகியவைகட்குத் தந்திரி களும் பெருமாள் கோயில் விமானத்திற்கு வைணவ அர்ச் சகர்களும் ஒரே வேளையில் குட முழுக்கு நிகழ்த்துவர்.

## எழுந்தருளும் மூர்த்திகள்:

விநாயகர் — பெருச்சாளி; நால்வர் — மரச்சப்பரம்; ஆறு முகப்பெருமான் - தங்கச் சப்பரம்; குமரவிடங்கர் — சின்னத் தங்கச் சப்பரம்; செந்தில் நாதர் — வெள்ளிச் சப்பரம்; சின்ன நட ராசர் — கேடயச் சப்பரம்; வள்ளிதெய்வயானை — தங்கமயில்கள்; அலைவாயுகந்த பெருமான் — சின்னத் தங்கமயில் வாகனம், சண் டேசுவரர் - சிறியசப்பரம்

## ஆச்சாரியார் விழா

ஏனைய விழாக்களைப் போன்றே நடைபெறும். 25 — 7 — 71 அன்று நடை பெற்றது.

## தத்துவம்

இறைவன் பஞ்சபூதங்கள், ஞாயிறு, திங்கள். ஆன்மா என்ற எட்டுப் பொருள்களாயுள்ளான் எனக் கண்டோம் வேள்விக்கூட மேடை மண்; குடத்து நீர்-நீர்; வேள்வித்தீ-தீ; மந்திரஒலி வேதம் திரு முறை முழக்கங்கள்-காற்று; இடைவெளியான ஆகாயம் பரம் பொருள்; காலையில் ஞாயிறு வழிபாடு; மாலையில் திங்கள் வழிபாடு ஆசாரியார்கள், அடியார்கள். ஐம்புல அழுக்குகளைச் சிவமந்திரங் களால் தூய்மையான உயிராக்குவர் இஃது ஆன்மவழிபாடு.

''மகா கும்பாபிஷேகக் கிரியைகளில்'' கலா கர்ஷணம்'' ஸ்பரி சாகுதி, மகா கும்பாபிடேகம் ஆகியவை சிறப்பிடம் பெறும் இம் மூன்றும் சிவலிங்கத்திலுள்ள பிராசாத கலைகளையும் - ஆறு அத்து வாக்களையும், ஆன்மதத்துவம், வித்தியா தத்துவம், சிவதத்துவம் இவற்றினையும் நியாசங்கள் மூலமும், மூலமந்திர ஆவாஹனங் களாலும் கும்பத்தினிடத்தில் ஆகர்ஷணம் செய்தும், பின்னர் யாகசாலையிலிருந்து மூலஸ்தானத்திலுள்ள இறைவன்பால் இவற் றினைத் தொடர்புபடுத்தியும் மகா கும்பாபிஷேகத்தினுல் மந்திர பூர்வமான தெய்வ சக்திகளை மூலபிம்பங்களிடத்தில் சேரும்படி (லயாங்க கலாகர்ஷணத்தால்) பிரதிஷ்டை செய்வதால் மிகமுக்கிய தத்துவப் பொருள் நிறைந்ததாகின்றது''[30]

# ஆறாம் இயல்

## கட்டளைகள்

நாள் வழிபாடும் திருவிழாக்களும் சிறப்பாக நடைபெற மன்னர்களும், குறுநில மன்னர்களும், மடாதி பதிகளும், நிலக் கிழார்களும், பொதுமக்களும் நன்கொடைகள் வழங்கியுள்ளனர். குறிப்பிட்ட செயலுக்காக வழங்கப்படும் பணம் 'கட்டளைகள்' எனப் பெயர் பெறுகிறது. இக்கட்டளைகளை நான்கு பிரிவுகளாகப் பகுத்து ஆய்வதே இவ்வியலின் நோக்கம். பிரிவுகள் வருமாறு:

அ) நாள் வழிபாட்டுக் கட்டளைகள்

ஆ) ஒரு நாள் விழாக் கட்டளைகள்

இ) மண்டபப் படிகள்

ஈ) பிற கட்டளைகள்

இக்கோயிலுக்கு முதலில் கட்டளை வழங்கிய மன்னன் இரண்டாம் வரகுண வர்மன்[1]

## அ. நாள் வழிபாட்டுக் கட்டளைகள்

நாள் வழிபாட்டுக் கட்டளைகளைத் திருக்காலக் கட்டளைகள், திருமஞ்சனக் கட்டளை, புஷ்பக்கட்டளை எனப் பிரிக்கலாம். திருக் காலக் கட்டளைகளைக் காண்போம்.

### உதய மார்த்தாண்டக் கட்டளை

திருவிதாங்கூர் மன்னர் பால மார்த்தாண்ட வர்மா (1729 1758) இப் பூசைக்குரிய பொருட்களை அளித்து வந்தார். என்கிறார் ஜே. எம். சோமசுந்தரம்.[2] இக்கட்டளை தொடர்ந்து நடைபெறத் திருச்செந்தூரில் கீழைத் தேர்த் தெருவில் 'கட்டளை அலுவலகம்' ஒன்றையும் நிறுவினர் என்கிறார் வென்றிமாலை.[3]

சேர உதய மார்த்தாண்ட வர்மாவின் காலம் கி. பி. 1383 - 1444 என்கிறார் திரு கே.கே. பிள்ளை.[4] மார்த்தாண்ட வர்மா என்ற பெயர் பல சேர மன்னருக்கு வழங்கியமையால் இக்கட்டளையை வழங்கிய சேர மன்னர் இவர்தாம் என உறுதியாகக் கூற இயலவில்லை.

### இக்கட்டளை நின்று விட்டதேன்?

பகவதிக் கவுண்டர் திருச்செந்தூர்க் கோயிலின் செயல் அலு வலராக இருந்த காலத்தில் [கி. பி. 1940 — 1944] திருவிதாங்கூர்

திவானுக விருந்த சர். சி. பி. இராமசாமி ஐயரால் இக்கட்டளை நிறுத்தப்பட்டது என்கிருர்திரு வென்றிமாலை[5] நிறுத்தியதற்கான காரணங்கள் பலவாருகக் கூறப் படுகின்றன. அவை வருமாறு:

1 உதய மார்த்தாண்டத் தீபாராதனை காண வந்த திருவிதாங் கூர் அதிகாரிகட்குத் தக்க மரியாதை செலுத்தவில்லை. இத ஞல் கோபமுற்றனர்.[6]

2 இரண்டாம் சுற்றுலை அமைத்த காலத்தில் திருவிதாங்கூர் கட் டளை அலுவலகத்திற்கு இடம் ஒதுக்க மறுத்தனர்.[7] இதனுல் சீற்றமுற்றுத் திரும்பப் பெற்றனர்.

3 திருவிதாங்கூர் மன்னர் பிறந்த நட்சத்திரத்தன்று உதய மார்த்தாண்ட அபிடேகத்திற்குப் பால்குடம் வரும். ஒரு நாள் பா ல் வருவதற்குப் பிந்திவிட்டதால் அபிடேகத்தைப் முடித்து விட்டனர். இதனுல் மன்னர் சினம் கொண்டார்.[8]

திருவிதாங்கூர் மன்னர் ஏவலின்படி கோயிலுக்களித்தபொருட் களையும் யானையையும் திரும்பக்கொண்டு சென்றனர். குழம்பு ஊ ற் றி வைப்பதற்குரிய கல்தொட்டிகளையும் உடைத்தனர். ஒரு கல் தொட்டி மட்டும் தப்பிச் சிவன் கோயிலிலுள்ளது.

''உதய மார்த்தாண்ட காலத்தில் முப்பத்தாறு அந்தணர் களுக்கு உணவளித்து வந்தனர். ஆண்டு ஒன்றுக்கு ரூ 12,000 செலவிட்டனர். உதய மார்த்தாண்ட அபிடேகப் பொருட்களை (சந்தனம், எண்ணெய், பால், பஞ்சாமிர்தம்) வழங்கினர். நிவே தனத்திற்கு அரிசியும் வழங்கினர்'' என்கிருர் திரு. வென்றிமாலை.[9]

கி. பி. 1941 இல் பகவதிக் கவுண்டரால் வெளியிடப் பெற்ற திருச்செந்தூர்த் தலவரலாறு இக்கட்டளை திருவிதாங்கூர் எஸ்டேட்டு அதிகாரிகளால் நடைபெறுவதாகக் குறிப்பிடுகிறது.[10] எனவே, கி. பி. 1941 ஆம் ஆண்டிற்குப் பின்னும் கி. பி. 1944ஆம் ஆண்டிற்கு முன்னும் இது நிகழ்ந்திருக்கலாம்.

## பிற உதவியாளர்

உதய மார்த்தாண்டக் கட்டளைக்குத் திருவாளர்கள் கு. இராமசாமி ஐயர், இளையரசனேந்தல் சமீன்தாரர், சேவல் பட்டி சமீன்தாரர், குமாரசாமி முதலியார், திருவிதாங்கூர் எஸ்டேட் அதிகாரிகள், திருவேங்கடம் பிள்ளை ஆகியோர் உதவி வருவதாகத் தல வரலாறு கூறுகிறது.[11] திருக்கோயில் சொத்து விவரப் பதிவேடு பட்டர் புரம் பண்ணை திருவேங்கடம் பிள்ளை ரூபா ஆயிரம் நிபந்தமாகக் கொடுத்து உதய மார்த்தாண்ட காலத் தில் நாடோறும் நான்கு அந்தணர்கட்குச் சாப்பாடு கொடுக்க

ஏற்பாடு செய்துள்ளதைத் தெரிவிக்கிறது[12]. மேலும் சீவைகுண்ட இராமலிங்க முதலியார், கோமதியம்மாள், சேதுஅம்மாள் கட்டளை கள் கொடுத்ததாகவும் குறிப்பிடுகிறது[13] இக்கட்டளைகள் நின்று போயின. நாட்டு விடுதலைக்குப் பின்னர் சமீன்தார்களின் நிலம் பறிக்கப்பட்டதால் அவர்கள் கொடுத்து வந்த கட்டளைகளும் நின்று போயின.

## புதிய ஏற்பாடு

கி பி. 1971 ஆம் ஆண்டில் தேவதானத்தினர் உதய மார்த் தாண்டக் கட்டளை நடத்த விரும்புவோர் ரூ 1000 / — வழங்கித் தாங்கள் விரும்பும் நாளில் பூசைக்கு உதவலாம் என விளம்பரம் செய்தனர். இவ்வாறு உதபுபவர்க்குப் பரம் பரையாகப் பிரசாதம் அனுப்பி வைக்கப்படும் எனவும் அறிவித்தனர். கி. பி. 1978 டிசம்பர் முடிய 115நாட்களுக்குரிய பணம் பல மாவட்டங்களி லிருந்தும் கிடைத்துள்ளது. மீதி நாட்களுக்குரிய பணம் வந்து கொண்டிருப்பதாகவும் கூறுகின்றார் கண்காணிப்பாளர்.[14]

இப்புதிய திட்டப்படி ரூ 1000 / - கொடுத்தவர் எண்ணிக் கையை மாவட்ட வாரியாகக் காண்போம்.[15]

## மாவட்டமும் கட்டளைதார் எண்ணிக்கையும்

திருநெல்வேலி 32, சென்னை 30, மதுரை 10, கோயம்புத் தூர் 8, இராமநாதபுரம் 6, தஞ்சாவூர் 5, திருச்சிராப்பள்ளி 5, வடஆற்காடு 2, தென்னாற்காடு 2, கன்னியாகுமரி 2, புதுக் கோட்டை 1, சேலம் 1, செங்கற்பட்டு 1.

## வெளி மாநிலங்கள்

மைசூர் 2 கேரளா 2 ஆந்திரா 2

## வெளி நாடு

இலங்கை 4

உதயமார்த்தாண்ட காலத்தில் செவ்வாய், வெள்ளி கார்த் திகை நாட்களில் கந்தர்கலிவெண்பாப் பாராயணம் செய்யத்திருப் பனந்தாள்மடம் ஏற்பாடு செய்துள்ளது.[16] உதயமார்த்தாண்ட காலத்தில் சண்முகர் நிவேதனத்திற்கு நாள் ஒன்றுக்கு அமுது சேர்படி ஒன்று வீதம் 365 நாட்களுக்குமாக 5 கோட்டை 1 மரக் கால் 3படி நெல் வழங்கத் திருவாவடுதுறை யாதீனக் கட்டளை மடம் ஏற்பாடு செய்துள்ளது.[17]

## காலை சந்திக் கட்டளை

காலை சந்திக் கட்டளைக்கு "ஆவுடையப்பபிள்ளை, சங்கரநாராயண ஐயர், தியாகராயச் செட்டியார், இளையரசனேந்தல் சமீன்தார், எஸ்.பி. சுப்பிரமணியபிள்ளை, இராமநாதபுரம் சமீன்தாரர், சத்தி ஐயர் வகை, முத்து குமார சாமி பிள்ளை, ஊத்து மலை சமீன்தாரர் உதவி வருகின்றனர்" எனத் தலவரலாறு குறிப்பிடுகிறது.[18]

இப்போது நடைமுறையிலிருப்பது களக்காட்டுப் பண்ணை காலை சந்திப் பால் பாயாசக் கட்டளை இவற்றிற்குப் பொறுப்பேற்று நடத்திவரும் என். கிருஷ்ணசாமி சாத்திரி கூறுவதாவது:

"இக்கட்டளையின்படி மூலவருக்கு மூன்றும் காலை சந்தித் தீபாராதனையாகு முன் தங்கக் கொடிமரத்தருகில் நான்கு பிராமணர்களுக்குச் சாப்பாடும் பால்பாயாசமும் வழங்கப்படுகின்றன. மூலவருக்குப் பூசை செய்யும் முறைப் போற்றி வந்து தீர்த்தம் தெளிப்பதால் இதைச் 'சாட்சி போஜனம்' என்பர். இதன் பின் போற்றி மணியடிக்குச் சென்று பிராமணர் தானம் கொடுத்து நமஸ்காரம் பண்ணிய பின்னர் தான் கருவறைக்குச் சென்று காலைசந்திப் பூசை செய்கிறார். நாங்கள் நான்கு குடும்பத்தினர் இப்பொறுப்பை (உணவுக்கு ஏற்பாடு) ஏற்று ஆளுக்கு மூன்று மாதங்கள் நடத்திவருகிறோம். பாலுக்காக ஒரு நாளைக்கு நான்கு ரூபாவும் காய்கறி வகைக்கு மாதம் ரூபா 150/ வீதமும் ஆண்டுக்கு 20 கோட்டை நெல்லும் களக்காட்டுப் பண்ணை வகையினரால் வழங்கப்படுகின்றன." [19]

திருப்பனந்தாள் மடத்தினர் வெண்பொங்கல் படைக்கின்றனர்.[20]

## உச்சிக் காலக கட்டளை

"சுந்தரசுப்பிரமணிய ஐயர், குருவிகுளம் சமீன்தாரர், உலக நாத பிள்ளை, அய்யாச் சாமி பிள்ளை, சரவண சாமி ஐயர், தாணு சுப்பிரமணிய ஐயர், சிவகிரி சமீன்தாரர், செல்லத்தம்மாள் ஆகியோர் உதவிவருகின்றனர் எனத்தலவரலாறு குறிப்பிடுகிறது. இதற்காக நிலம் வழங்கியவர் பெயர்களையும் குறிப்பிடுகிறது.[21]

| | வழங்கியவர் | அளவு |
|---|---|---|
| 1. | உலக நாதபிள்ளை பலசரக்கு, திருநெல்வேலி | 1 ஏக்கர் 97 செண்டு நன்செய். |
| 2. | கோட்டாறு மகமை வெள்ளித்தாம்பாளக் கட்டளை | 111 ஏக்கர் 70 செண்டு (நிலம் கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ளது) |

வெள்ளித்தாம்பாளக்கட்டளையினர் உச்சிக் காலத்தில் பிராமணர் உணவுக்கு ஏற்பாடு செய்துள்ளனர். மூலவர் உச்சிக்காலப் பூசைக்கு, நடுவில் சுத்தான்னம் வைக்கப்படும் பெரிய குழியும் சுற்றிலும் பத்துக் குழிகளு முடைய வெள்ளித்தாம்பாளத்தை அளித்துள்ளனர்.[22]

## இராக்காலக்கட்டளை

தேவதானமே நடத்தும் இராக்காலக்கட்டளைக்குக் கும்பினிக் கட்டளை எனப்பெயர். ''கிழக்கிந்தியக்கம் பெனியார் உதவியுடன் தேசாந்திரிகளுக்குக் சாப்பாடு கொடுக்க ஏற்படுத்தப் பட்டது ''என்கிறார் திருவென்றிமாலை.[23]தேவதானஊழியர்கள் பலர்சோற்றுக்கட்டி பெறுகின்றனர். இதனை 'அப்பனை' என்பர் திருமுத்தாண்டி ஐயர் [24] மூலவருக்குரிய ஆடையினைத் திருவாவடுதுறை ஆதீனத்தார் இராக்காலத்தில் வழங்குகின்றனர்.[25]

இராக்கால அபிடேகத்தின் பின் மூலவருக்கு அணிசெய்யப் பன்னீர்ப் பூவினாலாய காதணிகளும் அவ்வாதீனத்தார் வழங்கி வருகின்றனர். இது வகைக்கு அரசாங்க தஸ்திக் ஆண்டொன்றுக்கு ரூ 200/- பெற்று வருவதாகவும் கூறினர்.[26]

## அர்த்தசாமக்கட்டளை

''பி. பாலசுப்பிரமணிய பிள்ளை, குஞ்சு ஐயர் வகையரு வழங்கிவருவதாகத் தலவரலாறு கூறுகிறது'[27] முதலில் குறிப்பிடப் பெற்றவர் ரூ 30/- மட்டும் உதவிவந்தார் எனவும் குஞ்சு ஐயர் வகையரு 61 ஏக்கர் 91 செண்டு புன்செய் அளித்துள்ளதாகவும் சொத்துவிவரப்பதிவேடு குறிப்பிடுகிறது.[28]

## ஏகாந்தக்கட்டளை

இக்கட்டளைக்காக ஊக்காடு சமீன்தாரர் ரூ 439/- வழங்கியதாகத் தலவரலாறு குறிப்பிடுகிறது.[29] தருமபுர ஆதீனத்தார் பரிவட்டம் வழங்குகின்றனர்.[30]

## திருமஞ்சனக்கட்டளை

அபிடேகவகைக்கு சி. பொன்னம்மைநாடத்தி உதவி வருவதாகத் தல வரலாறு குறிப்பிடுகிறது.[31] சொத்து விவரப்பதிவேடு நட்டாத்தி முத்து வைகுண்ட நாடார் உதவிவருவதாகக் குறிப்பிடுவதுடன் அபிடேக எண்ணெய் உதவி வகைக்குத் திருநெல்வேலி முத்துக்குமாரசாமியா பிள்ளை ரூ 500/- கொடுத்துள்ளார் எனவும் அம்மன் அபிடேக வகைக்கு ஊற்றுமலைச் சமீன்தார் ரூ 7000/- வழங்கியுள்ளார். எனவும் குறிப்பிடுகிறது. திருவாவடு துறை யாதீனத்தார் உச்சிக்கால அபிடேகத்திற்கு 3 லிட்டர் பாலும் இராக்

காலஅபிடேகத்திற்கு 3 லிட்டர் பாலும் வழங்கிவருகின்றனர். அபிடேக முடிவில் மூலவரை சிறு பயற்றுமாவிட்டுத் தேய்க்க் மாவும் குச்சிப் புல்லும் வழங்கி வருகின்றனர். பிச்சைப் பால் பெற்று வருபவர்க்கு மாதந்தோறும் கால் கோட்டை நெல்லும் வழங்கிவருகின்றனர். அம்மன் அபிடேகத்திற்கு நாடோறும் இரண்டு இளநீர்க் காய்களும் வழங்குகின்றனர்.[32]

தருமபுர ஆதீனத்தார் உதயமார்த்தாண்டம், இராக்கால அபிடேகத்திற்கு முறையே 1 லிட்டர் பால் வழங்குகின்றனர்.[33]

திருப்பனந்ததாள் மடத்தினர் அபிடேக நேரத்தில் உருத்திர பாராயணம் செய்ய இருவருக்குப் பணம் வழங்குகின்றனர்.[34]

காவடி, பால்குடம் செலுத்துவோர் அபிடேகத்திற்குரிய பால், பன்னீர், இளநீர் முதலியவற்றை அளித்து வருகின்றனர்.

## புஷ்பக் கட்டளை

திருவாவடுதுறை மடத்தினர் இவ்வூருக்கு மேற்கேயுள்ள ஆவுடையார் குளத்தை யடுத்து நந்தவனம் அமைக்க ஓதுவார்களுக்கு நிலம் விட்டுக் கொடுத்தனர். முப்பதாண்டுகட்கு முன் சுற்றுலைகளில் நீண்ட கற்களில் பூக்களைக் குவித்து மாலை கட்டி வந்ததை ஆய்வாளர் அறிவார். இப்போது நந்தவனங்கள் தென்னந் தோப்புகளாக மாறிவிட்டன.[35] இதனுல் பூசைக்கு பூ முட்டுப்பாடு ஏற்பட்டது. கி. பி. 1972 ஆம் ஆண்டில் தேவதானத்தினர், ''புஷ்பக் கட்டளை ஏற்படுத்த விரும்புவோர் ரூ 750/- செலுத்தி ஓர் ஆண்டில் தாங்கள் விரும்பும் நாளில் இக்கட்டளையை நிறைவேற்றலாம்'' என விளம்பரம் செய்தனர். இதிலிருந்து கிடைக்கும் வட்டியில் ரூ 45/- ஐ இரு ஓதுவார்களிடம் கொடுத்து நாள் வழிபாட்டிற்குரிய பூ மாலைகளைப் பெறுகின்றனர்.

கி. பி. 1978 டிசம்பர் முடிய புஷ்பக் கட்டளை செலுத்தியவர் எண்ணிக்கை 143. மாவட்ட வாரியாகப் பிரித்துக் காண்போம்.[36]

| | மாவட்டம் | எண்ணிக்கை |
|---|---|---|
| 1 | சென்னை | 34 |
| 2 | மதுரை | 24 |
| 3 | திருநெல்வேலி | 22 |
| 4 | இராமநாதபுரம் | 19 |
| 5 | திருச்சிராப்பள்ளி | 7 |
| 6 | கோயம் புத்தூர் | 6 |
| 7 | சேலம் | 6 |
| 8 | செங்கல்பட்டு | 4 |
| 9 | புதுக்கோட்டை | 3 |

| | | |
|---|---|---|
| 10 | தஞ்சாவூர் | 3 |
| 11 | வடவார்க்காடு | 2 |
| 12 | கன்னியாகுமரி | 2 |
| 13 | தென்ஞர்க்காடு | 1 |

**வெளி மாநிலங்கள்**

டில்லி 1 பாண்டிச்சேரி 1 ஆந்திரா 6

**வெளி நாடுகள்**

மலேசியா 1; கிழக்கு வங்காளம் 1

**ஒரு நாள் விழாக் கட்டளைகள்**

ஒரு நாள் விழாக் கட்டளைகளைக் கார்த்திகைக் கட்டளை, 108 திரு விளக்குப் பூசைக் கட்டளை, சுக்கில சட்டிக் கட்டளை, விசாகக் கட்டளை, பிரதோடக் கட்டளை என்ற பிரிவில் ஆய்வோம்.

**கார்ததிகைக் கட்டளை**

ஒவ்வொரு திங்களும் வரும் கார்த்திகை நாளன்று சிறப்பாகச் செய்யப் பெறும் பூசைக்குரிய செலவினைக் கார்த்திகைக் கட்டளை மடம் (திருவாவடுதுறை மடம். தூண்டு கை விநாயகருக்குப் பின் வடபால் அமைந்துள்ளது.) கொடுத்து வருகிறது.[37]

ஆயினும் தேவதானத்தினர் கி. பி. 1972 ஆம் ஆண்டில் விளம்பரம் செய்து பதின் மூன்று கட்டளை தாரரைப் பெற்றனர். அவர்கள் தலைக்கு ரூ 1000/- வழங்கியுள்ளனர். பெயர் விவரம் வருமாறு:[38]

''சித்திரை — திரு டி. பழநியப்பன், சென்னை
வைகாசி — திரு வி. கே. விஞயக மூர்த்தி, சத்திரப் பட்டி
ஆனி — திரு ஆர். முத்துலிங்கம், பெருவிளை
ஆடி — திரு ஆர். கே. ஜாணக்கியா செட்டி, சென்னை.
ஆவணி — திருமதி முத்து லட்சுமி, திருநெல்வேலி
புரட்டாசி திரு கே. எஸ். சண்முகவேல்நாடார், தூத்துக்குடி
ஐப்பசி — திரு பி. சாமியப்பக் கவுண்டர்
கார்த்திகை — திரு டி. கே. பழநியப்பன், சென்னை
மார்கழி திரு எஸ். பி. வேல் நாடார், பரமக்குடி
தை — திரு டி. கே அறம் வளர்த்த நாத பிள்ளை, மதுரை
மாசி — திரு சு. தெய்வயானை அம்மாள், அருப்புக்கோட்டை
பங்குனி — திரு டி. கே. சங்கர வடிவேலு, சென்னை.
கூடுதல் கார்த்திகை — திரு கே. டி. பலராம்ராசா,
இராசபாளையம்

## 108. திருவிளக்குப் பூசைக் கட்டளை

கி. பி. 1969 ஆம் ஆண்டு முதல் திங்கள் தோறும் கார்த்திகை நாளன்று இரவில் 108 மகாதேவர் முன்னிலையில் 108 விளக்குகளை வைத்து மகளிரால் நடத்தப்படுகிறது இப்பூசை. 108 அன்பர்கள் விளக்குகளை நன்கொடையாக வழங்கியுள்ளனர். எண்ணெய், பூ, பழங்கள், நிவேதனம் திரி, குங்குமம், பத்தி, சூடன் முதலிய வற்றிற்காக ஆகும் செலவினை ஈடுகட்டக் கட்டளை தாரர்களை விளம்பரம் மூலம் தேவதானத்தினர் பெற்றனர். ரூ 2000/- கொடுத்தோர் பெயர் விவரம் வருமாறு:[39]

''சித்திரை — திரு கே. பி. கந்தசாமி, தண்டுப்பத்து
வைகாசி — திரு பி. சிவசுந்தர நாடார் & சன்ஸ் சென்னை 17.
ஆனி — திரு எம். எஸ். இராமையா பிள்ளை, தூத்துக்குடி
ஆடி — திரு இராதா இண்டஸ்டிரீஸ்
ஆவணி — திரு கா. சு சண்முகவேல் நாடார், தூத்துக்குடி
புரட்டாசி — திரு ஆர். இராமச் சந்திரன், சென்னை.
ஐப்பசி - திரு ஆர். செல்லத்துரை, தண்டுப்பத்து
கார்த்திகை — திருஎஸ். எஸ். கந்தசாமி, கொம்மடிக்கோட்டை
மார்கழி — திரு பி. என். சுந்தரம், சென்னை
தை — திரு ஏ. எஸ் கே. இரத்தினசாமிநாடார், தூத்துக்குடி
மாசி திரு பி சிவந்தி ஆதித்தன், சென்னை
பங்குனி — திரு ஆர். ஏ. அருணாசலநாடார், தாம்பரம்.

ஒரு திங்களில் இரண்டாவதாக வரும் கார்த்திகைக்கு உதவி யவர் திரு என். பி என். குருசாமி நாடார், திருச்சி - 1.

மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை கூடுதலாக வரும் கார்த் திகைக்கு ரூபா 1000/- நன்கொடையளித்தவர்

திரு V. பிரம நாயகம் பிள்ளை, திருச்செந்தூர்.

சித்திரை மாதம் முதல் நாள் 108 திருவிளக்குப் பூசை நடத்த ரூ 2500/- உதவியவர் திரு ஏ. ஆர். ஏ. அண்ணாமலை நாடார்.

### சுக்கில சஷ்டிக் கட்டளை

வளர்பிறைச் சட்டியன்று தேவதானம் கூடுதலாகச் செல வழிக்கும் தொகையை ஈடு கட்ட இக்கட்டளைப் பணம் விளம்பரம் மூலம் பெறப்பட்டது ரூ 1000 - செலுத்தியோர் பெயர் விவரம் வருமாறு:[40]

''சித்திரை — திரு ஆர். எம். டி. இராமசாமிக்கவுண்டர், துறையூர்
வைகாசி - திருஎன் கே. கோபால கிருஷ்ண முதலியார், ஈரோடு
ஆனி - திரு ஆர். சி. சரவணன், சென்னை

ஆடி — திரு பி. எஸ். பாலசுப்பிரமணிய ஆதித்தன், சென்னை
ஆவணி — திரு டி. பழநியப்பன், வேலூர்
புரட்டாசி — திரு எம். நடராசப் பிள்ளை, அம்பாசமுத்திரம்
ஐப்பசி - திரு எம். எம். ஏ. சின்னப்பாத் தேவர், சென்னை
கார்த்திகை — திருஎன் ஆர்.கிருஷ்ணமராசா, இர்ராசபாளையம்
மார்கழி திரு எம். நடராசப் பிள்ளை, அம்பாசமுத்திரம்
தை திரு கிருஷ்ணசாமி செட்டியார், வேலூர்
மாசி — திரு கே. சதாசிவ முதலியார், வேலூர்
பங்குனி திரு எஸ். என். கந்தசாமிப்பாண்டியன்,
திசையன்விளை

விசாகக் கட்டளை

திருவாவடுதுறை யாதீனத்தின் விசாகக்கட்டளை மடம் இவ் வூர்த்தூண்டுகை விநாயகர் கோயிலுக்குத் தென்புறமுள்ளது. இக் கட்டளைக்குரிய நிலம் இம் மாவட்டத்திலேயேயுள்ளது. இக்கட்டளையிலிருந்து ஆண்டிற்கு ரூ 4666-43 செலவழிக்கின்றனர். 43 கோட்டை நெல்லும் ஓராண்டிற்கு ஒதுக்கியுள்ளனர். சண்முகர் அபிடேக நாளாதலின் அன்று நடை பெறும் அபிடேகத்திற்குரிய பொருட்களை இம் மடத்தினரே அளிக்கின்றனர். விசாகநாளன்று பன்னிரண்டு அந்தணர்களுக்கு உணவளிக்கின்றனர்.[41]

ஆயினும் ஏழு ஆண்டுகட்கு முன் தேவநானம் விளம்பரம் செய்து பன்னிரு நன்கொடையாளரைப் பெற்றது. தலைக்கு 1000/- வீதம் நன்கொடையளித்தவர் பெயர் விவரம் வருமாறு:[42]

"சித்திரை -- திரு ஆர், செல்லத்துரை, சென்னை
வைகாசி— திரு ஆர். பட்டாபி, சேலம்
ஆனி திரு மு. அழகப்பன், ஈரோடு
ஆடி— திரு டி. நடேசன், போளூர்
ஆவணி திரு நடேசன் செட்டியார், காரைக்குடி
புரட்டாசி— திரு அறிவுடை நம்பி, சென்னை-40
ஐப்பசி திரு ஏ. கணேசன், சென்னை- 72
கார்த்திகை— திரு எஸ். டி.ஏ.ஆர். அருணாசலம் செட்டியார்
திருச்சி- 18

மார்கழி திரு என். எம். துரை ராஜ், சிங்கப்பூர்
தை — திரு பி. பழநியாண்டி பிள்ளை, நாகர்கோயில்
மாசி— திரு பி.கே.விநாயகமூர்த்தித்தரகனுர், இராசபாளையம்
பங்குனி ஸ்ரீ வேம்பய்யர் சாசுவததர்ம சாசனம் கிருஷ்ண
புரம், கடையநல்லூர்.

பிரதோடக் கட்டளை

திருவாவடுதுறை ஆதீனத்தாரின் பிரதோடக் கட்டளை மடத்தினர் (இவ்வூர்த் தூண்டுகை விநாயகர் கோயிலுக்கு வடபுறமுள்ளது) பிரதோடச் செலவினை ஏற்றுவருகின்றனர். பலி பீடங்களுக்குரிய எண்ணெய், திருக்கண் சாத்துதல், வீரபாகுஅபிடேகம், சண்முகர் நிவேதனம் ஆகிய செலவுகளை ஏற்று நடத்துகின்றனர் பிரதோடநாளில் இவ்வகை கட்காக ரொக்கமாக ரூ 25-75 செலவழிக்கின்றனர்[43]

சேத்தூர் சமீன்தாரும் இக்கட்டளையைச் செய்துவந்ததாக மணியம் கூறுகின்றார்:[44]

தேவதானம், விளம்பரம் மூலம் ஏழு ஆண்டுகட்கு முன் ரூ 1000/-வீதம் செலுத்திய இக்கட்டளைதார்களைப் பெற்றது. இதுவரை ஐவரே பணம் செலுத்தி யுள்ளனர். ஏனைய கட்டளைகளைப் போல் இக்கட்டளையில் மக்கள் ஆர்வம் கொள்ள வில்லை. நன்கொடையாளர் பெயர் விவரம் வருமாறு:[45]

''வைகாசி திரு கே.டி.பி. இராசுவரன், ஈத்தாமொழி
ஆடி— திரு கே.பி. பெத்து ராசா, இராசபாளையம்
புரட்டாசி திரு பி என்.எஸ் இராமம்மாள் டிரஸ்ட், இராசபாளையம்
மாசி— திரு சி.எஸ். பஞ்சாட்சரம், சித்தூர்
பங்குனி— திரு இராமம்மாள்டிரஸ்ட், இராசபாளையம்

## 1 தைஉத்தர மலரஞ்சலி

இந்நாள் நடைபெறும் மலரஞ்சலிக்குரிய மலர்க்கூடைகளை விளம்பரம் செய்வதன் மூலம் தேவதானத்தினர் அவ்வப்போது பெறுகின்றனர்.

## 2 தை அமாவாசைச் சிறப்பு:

திருச்செந்தூர் வாணிகர்கள் பல ஊர்களிலுமுள்ள வாணிகர்களிடமிருந்து பொருள் திரட்டிப்பின் வரும் சிறப்புக்களைச் செய்து வருகின்றனர்.[46]

1 காலையில் பால் குடங்கள் தாங்கி வீதிவலம் வந்து திருமுழுக்குக்கு அளிக்கின்றனர்.

2 மூலவர், சண்முகர் அபிடேகத்திற்குரிய பொருட்கள் வழங்கி அலங்காரம், நைவேத்யம், அருச்சனை முதலிய செலவினை ஏற்கின்றனர்.

3 உச்சிக் காலத்தில் ஏழைகளுக்கு உணவளிக்கின்றனர்.

4 இரவில் கோயிலில் வரிசையாகப் பத்திர தீபமேற்றுகின்றனர்.

5 இரவில் ஆறுமுக அருச்சனையும் நடத்துகின்றனர்.

6 துணிக்கடைக்காரர்கள் பட்டு, பரிவட்டங்களை நன்கொடையாக வழங்குகின்றனர்.

கடந்த 113 ஆண்டுகளாக இக்கட்டளையை நிறைவேற்றி வருகின்றனர்.

### 3 ஆண்டிறுதிநாட் கட்டளை

பங்குனி மாதம் இறுதி நாளன்று களப சீபலி எழுந்தருளுவதற்குரிய செலவினை இவ்வூர்த் திருவாவடுதுறை யாதீனத் திருப்பணிக்கட்டளை மடத்தினர் (தூண்டிவிநாயகர் முன் மணல் மேட்டின் தொடக்கத்திலுள்ளது) ஏற்று நடத்தி வருகின்றனர்.

### 4 மாதக் கடைசிவெள்ளிக் கட்டளை

நாகர்கோயில் இல்லத்தார் நடத்திவருகின்றனர்.

### இ. மண்டபப் படிகள்

ஆவணி, மாசித்திங்கள்களில் நடைபெறும் பெருவிழாக்களில் மண்டபப்படிகளை மன்னர், குறுநிலமன்னர், மடாதிபதிகள் மக்கள் ஆகியோர் நிறைவேற்றி வருகின்றனர். குறிப்பிட்ட மண்டபத்தில் குமரவிடங்கப் பெருமான் வள்ளி தெய்வயானையம்மையோடு எழுந்தருளுகிறார். அபிடேகம், அலங்காரம், நைவேத்தியம் முதலிய செலவுகளை மண்டபப் படிக்காரர் செலவிடுகின்றனர்.

**மண்டபங்கள் இருக்குமிடங்கள்**

| திருநாள் | இருப்பிடம் |
|---|---|
| 2 | தூண்டுகைவிநாயகர் கோயிலுக்குப் பின்னால் வடபுறமுள்ள மண்டபம் |
| 3 | வடக்குமாடவீதியின் கீழ்புரம் உள் சேனைத் தலைவர் மண்டபம் |
| 4 | தெற்குரத வீதியின் கீழ்புறம் தென் சிறகிலுள்ள மூப்பனார் மண்டபம் |
| 5 | சந்நிதித் தெரு முகப்பில் வடபுறம் உள்ள சேதுபதி மண்டபம் |
| 6 | பெரிய தேருக்குக் கீழ்புறம் கீழரத வீதியிலுள்ள திருவாவடுதுறை அருட்பணிக் கட்டளை மடம். |
| 7 காலை | தூண்டுகை விநாயகர்முன்வடக்கில் அமைந்துள்ள பிள்ளையன்மண்டபம் |

| | | |
|---|---|---|
| | இரவு | பந்தல் மண்டப முகப்பில் வடபுற முள்ள வெங்குபாட்சா மண்டபம் |
| 8 | ஆவணியில் மாசியில் | பந்தல்மண்டப நடுவிலுள்ளமேடை சிவக்கொழுந்தீசர் கோயில் மண்டபம் |
| 9 | | பூச்சிக்காடு அருணசலத் தேவர் வகையரு மண்டபம் சந்நிதித் தெருவிலுள்ளது |
| 10 | | கீழமாட வீதியிலுள்ள முதலியார் மண்டபம் |
| 11 | பகல் | சந்நிதித்தெருவில் உள்ள யாதவர் மண்டபம் |
| | இரவு ஆவணியில் | தெப்பக்குளத்தருகில் பட்டர்புரம் பண்ணையார் மண்டபம் |
| | மாசியில் | நகரத்தார் மண்டபம். |
| 12 | | வடக்குரத வீதியிலுள்ள செங்குந்த முதலியார் மண்டபம் |

### மண்டபப்படி நடத்துவோர்

முதல் திருநாளன்று உற்சவர் எழுந்தருளுதல் இல்லை. எனவே இரண்டாம் திருநாள் முதல் பன்னிரண்டாம் திருநாள் வரையுள்ள மண்டபப்படி நடத்து வோரைப் பார்ப்போம்.

**இரண்டாம் திருநாள்:**

கி. பி. 1941 ஆம் ஆண்டில் வெளியான தலவரலாறு இரண்டாம் திரு நாள் மண்டபப்படி நடத்துவோரைக் குறிப்பிடவில்லை' இம்மண்டபப்படியைக் குலசேகர பட்டினம் பண்டார சிவன் பிள்ளை நடத்தி வந்தார் என்றும், இப்போது சீவைகுண்டம் தாசில் ஆண்டியப்பப் பிள்ளை நடத்திவருவதாகவும் கோயில் மணியம் கூறுகிறார்.

**மூன்ரும் திருநாள்:**

தல வரலாறு இதற்கும் பெயர் குறிப்பிடவில்லை. இம்மண்டபடியைப் பேட்டை T. S. சண்முக முப்பனர் நடத்தி வருவதாகவும் இக்கட்டளைக்காக ஆளூரில் 8 ஏக்கர் 93 செண்டு நில மிருப்பதாகவும் இந்நிலத்தினை மேற்பார்வையிடும் தர்மகர்த்தா சரிவரச் செயல் படாமையினல் தேவதானத்தினர் வழக்குத் தொடுத்துள்

ளனர் என்றும் சொத்தினை இப்போது தேவதானம் மேற்பார்வை யிட்டு மண்டபப்படி நடத்த சேனைத்தலைவர்களிடம் பணம் கொடுத்து வருகிறது என்றும் திரு ஐயாசாமி கூறுகிறார்.

**நான்காம் திருநாள்:**

தலவரலாறு இதற்கும் பெயர் குறிப்பிடவில்லை. முந்நூறு ஆண்டுகளுக்கு முன் இக்கோயிலை நிர்வகித்த குலசேகரன்பட்டினக் குறு நில மன்னராயிருந்த செந்தில் காத்த மூப்பனார் வழியினர் இம்மண்டபப்படியை நடத்திவருகின்றனர். திருச்செந்தூரிலிருந் து புதுக்குளம் வரையுள்ள பகுதியை இவர்கள் ஆண்டதாக திரு எம்.எஸ். தனுக்கோடிப்பிள்ளை தெரிவிக்கிறார்.

**ஐந்தாம் திருநாள்**

இராமநாதபுரம் சமஸ்தானம் இம்மண்டபப்படியை நடத்தி வருகிறது. சேதுபதிகட்கும் இக்கோயிலுக்கும் தொடர்பிருந்து வருகிறது.[48]

**ஆறும் திருநாள்:**

இவ்வூரிலுள்ள திருவாவடுதுறை யாதீனத்தின் செந்தில் அருட்பணிக் கட்டளைமடத்தினர் இம்மண்டபப்படியை நடத்து கின்றனர். ஆறும் திருநாளிரவில் குமரவிடங்கப் பெருமானும் செந்தில் நாயகரும் இங்கு எழுந்தருளுகின்றனர். இரு உற்சவ மூர்த்திகளும் எழுந்தருளும் மண்டபம் இஃதொன்றே யாகும்.

இக்கோயிலின் கோபுரம் கட்டித்திருப்பணி செய்து ஆளுகை யையும் தம் கீழ் திருவாவடுதுறை மடத்தினர் வைத்திருந்தனர் என்பதற்கு இந் நிகழ்ச்சி யைச் சான்று காட்டுகின்றனர்.

அறுபதுபடி அரிசியைச்சோறாக்கி நண்பகலில் அன்னதானம் அளிக்கின்றனர் இம்மடத்தினர்.

நண்பகலில் (ஊடல்) நிவேதனத்தைக் காயாமொழி ஆதித்த நாடார்கள் படைக்கின்ற . ர். பந்தல் மண்டபத்தில் தண்ணீர்ப்பந் தலும் நடத்துகின்றனர்.

**ஏழாம் திருநாள்:**

கி பி. 1653 இல் காவைவடமலையப்பபிள்ளையன் மணல் மேட் டின் தொடக்கத்தில் ஒரு மண்டபம் அமைத்து ஏழாம் திருநாளன் று காலையில் சண்முகரை எழுந்தருளச் செய்தார். கி. பி. 19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வீரபாண்டிய கட்டப்பொம்மன் மேல மாட வீதியில் ஒரு மண்டபத்தைக் கட்டித்தன் மண்டபத் திலேயே சண்முகரை முதலில் எழுந்தருளச் செய்யும் முயற்சியை

மேற் கொண்டார்; உருகு சட்ட சேவையில் கட்டப்பொம்மன் காணிக்கை வைத்தழைத்த போது சண்முகரைப் பட்டர்களால் அசைக்க முடிய வில்லை. பிள்ளையன் வழியினர் காணிக்கை வைத்த போது சண்முகர் எழுந்தருளினார். மணல்மேட்டிலிருந்து சண் முகர் இறங்கிய போது பெரும்புயலும் மழையும் வரவே சண் முகரைப் பிள்ளையன் மண்டபத்திலேயே இறக்கினர்.[49] இந்நிகழ்ச்சி யைக் குறித்து ஒருபுலவர் பாடியுள்ளார்.[50]

ஏழாம் திருநாளன்றிரவில் பந்தல் மண்டப (சிவன்கோயி உ முன்புள்ளது) முகப்பிலுள்ள வெங்கு பாட்சா மண்டபத்தில் சண் முகர் எழுந்தருளுகிறார். ஏழாம் நாள் தீ வட்டிக்குரியஎண்ணெய்ச் செலவைத் திருவிதாங்கூர் மன்னர் கொடுத்து வந்தார்.[51]

**எட்டாம் திருநாள்:**

ஆவணித் திருவிழாவின் போது பந்தல் மண்டபத்தின் நடு விலுள்ள மண்டபத்திலும், மாசித்திருவிழாவில் சிவன்கோயில்மண் டபத்திலும் சண்முகர் அபிடேக அலங்காரம் பெற்றுப் பச்சை சாத்தி எழுந்தருளுகிறார். இம்மண்டபப்படியை ஊத்துமலை சமீன்தாரர் நடத்தியதாகத் தலவரலாறு குறிப்பிடுகிறது[52] ஆவணித்திருவிழாவின்போதுசீவைகுண்டம் திருசுந்தரராமசுப்பிர மணியபிள்ளை வகையினர் நடத்தி வருகின்றனர்.

மாசித் திருவிழாவின் போது பச்சை சாத்தி அ பி டே க ச் செலவினை திரு.எம்.மனகாவலம்பிள்ளை குடும்பத்தார் ஸ்ரீராம்பாப்புலர் பேருந்து நிறுவனம்) நடத்தி வருகின்றனர். முன்பு திருவிதாங்கூர் மன்னர் கொடுத்து வந்ததாகக் கூறுகிறார் வென்றிமாலை.[53]

**ஒன்பதாம் திருநாள்:**

இத்திருநாள் மண்டபப்படியைச் சந்தர சுப்பிரமணிய ஐயர் நடத்தி வருவதாகத் தலவரலாறு கூறுகிறது[54] கட்டப்பொம்மன் மரபைச் சேர்ந்தவர் நடத்தி வந்தனர். இப்போது பூச்சிக்காடு அருணாசலத்தேவர் குடும்பத்தார் நடத்திவருகின்றனர்.

**பத்தாம் திருநாள்**

கீழ மாடவீதியில் வடபுறமுள்ள முதலியார் மண்டபப்படியை குமார சுவாமி முதலியார் நடத்தி வருவதாசத் தலவரலாறு கூறு கிறது[55]

**பதினொன்றாம் திருநாள்:**

திருநெல்வேலி மாவட்ட யாதவர்கள் இம் மண்டபப்படியை நடத்து கின்றனர்.

இரவில் நடைபெறும் ஆவணித்தெப்பத் திருவிழாவை முன்பு பட்டர்புரம் பண்ணை திருவேங்கடம் பிள்ளை நடத்தி வந்தார்.[56] இப்போது ஆவணியில் தெப்பமில்லை. மாசியில் திருநெல்வேலி நகரத்தார் நடத்தி வருகின்றனர்.

**பன்னிரண்டாம் திருநாள்:**

இம்மண்டபப்படியைச் செங்குந்த முதலியார்கள் நடத்தி வருகின்றனர்.

**கந்த சட்டி விழா**

முதல் திருநாள் மண்டபப்படியைத் திருவாவடு துறையாதீனத்தினர் நடத்திவருகின்றனர். மூன்றும் திருநாள் செலவினைதிரு முத்துக்கிருஷ்ண முதலியாரும் ஐந்தாம் திருநாள் செலவினை திரு வீரபாகு பிள்ளையும் திருக்கல்யாணச் செலவினை (ஏழாம்நாள்) எட்டையபுரம் ஜமீன் தாரரும் ஏற்று நடத்தி வருவதாகத்தலவரலாறு குறிப்பிடுகிறது[57] இப்போது வேள்விச் செலவினை திரு எம்.எம்.ஏ. சின்னப்பாத்தேவர் குடும்பத்தினர் ஏற்றுள்ளனர்.

மண்டபப்படிதாரர் தம்கட்டளைகளை நிறுத்தி விட்டால் தேவதானம் பொது நிதியிலிருந்து செலவழித்து வருகிறது.

## கலை நிகச்சிகளுக்குதவுதல்

இதனைக் கட்டளையாகவோ, மண்டபப்படியாகவோ கருதாவிடினும் கடந்த சில்லாண்டுகளாகப் பணம்படைத்தோர் பலர்தம் செலவில் கலை நிகழ்ச்சிகள் நிகழ்த்த ஏற்பாடு செய்துள்ளனர். கி.பி. 1978 ஆம்ஆண்டு மாசித்திருவிழாவில் உதவியவர் பெயர்கள் வருமாறு.[58]

| திருநாள் | நிகழ்ச்சி | உதவியவர் |
|---|---|---|
| 4 | சிறப்புநாதசுர இசை | திரு ஏ. கணேசன், மரவாணிகம் சென்னை |
| 5 | சிறப்பு நாதசுரஇசை | திரு கே.எஸ் சண்முகவேல் நாடார், தூத்துக்குடி |
| 6 | நாடகம் | திரு எஸ் எஸ். கந்தசாமி பாண்டியன் கொம்மடிக்கோட்டை |
| 7 | இன்னிசை | திரு எம்.எம் ஏ. சின்னப்பாத் தேவர் |
| 8 | பக்திகால நிகழ்ச்சி | திரு ஏவி.ஆர்.எம். சங்கர நாராயணன், வீரவநல்லூர் |
| 9 | இன்னிசை | திரு எஸ். கோபால கிருஷ்ணயாதவ் கோயில்பட்டி |

| | | |
|---|---|---|
| 10 | இன்னிசை | திரு எம் எம்.ஏ. சின்னப்பாத் தேவர் |
| 11 | சிறப்பு நாத சுரம் | திரு பி கோவிந்தசாமிப் பிள்ளை சிங்கப்பூர் |

(ஈ) பிறகட்டளைகள்

## அன்னதானக் கட்டளை

நாள் வழிபாட்டிற்கும் திருவிழாவிற்கும் வரும் அன்பர்கட்கு உணவளிப்பதில் திருப்பனந்தாள் மடத்தினரும் திருவாவடுதுறை மடத்தினரும் பெரும் பங்கு வகிக்கின்றனர்.

### திருப்பானந் தாள்மடம்

(சந்நிதித்தெருவில் வேளாளர் ஐக்கிய சங்கத்திற்குப் பின்புறம் திருப்பனந்தாள்மடம்நாடோறும் ஆறு தேசாந்திரிகளுக்கு உணவு வழங்குகின்றது. ஒவ்வொரு திங்களிலும் கார்த்திகை நாளன்று 75 பேருக்கு உணவளிக்கின்றனர். ஆவணிமூலநாளன்று 300 திரி சுதந்திரர் கட்கும், ஆடிச் சுவாதியன்று 40 பேர்கட்கும், கந்தர் சட்டி விழா ஆறுநாட்களிலும் நாடோறும் 30 பேர்களுக்கும், தெய்வ யானை திருக்கல்யாணத்தன்று காலையில் 250 பேர்கட்கும் உணவளிக்கின்றனர்.

குமரகுருபரர் குரு பூசையைச் சிறப்பாக நடத்துகின்றனர்.

### கோமதீசுவரி டிரஸ்டு:

கீழரதவீதியில் செந்தில் துறவியால் ஏற்படுத்தப்பட்ட கோமதீச்வரி அறக்கட்டளையினர் ஞாயிற்றுக் கிழமை தோறும் 100 சோற்றுக்கட்டிகள் பரதேசிகளுக்கு அன்னதானமாக வழங்கு கின்றனர்[67]

### திருவாவடுதுறை ஆதீனம்:

திருவாவடுதுறை யாதீனம் வடக்கு ரதவீதியில் அன்னதானக் கட்டளைமடம் (தற்போது பாப்புலர் அச்சக முள்ளது) அமைத்து அன்பர்கட்குபின்வரும் நாட்களில் உணவளித்து வருகின்றனர். ஆவணி, மாசிப்பெரு விழாக்களின் ஏழாம் திருநாள் தொடங்கிப் பத்தாம் திருநாள் முடிய அறுபதுபடி அரிசியை சோறுக்கி நண்பகலிலும் அதே அளவு இரவுணவும் அளிக்கின்றனர் பன்னிரண்டாம் திருநாளன்று அந்தணர் உணவுக்காகப் பதினெட்டுப் படியரிசி வழங்குகின்றனர்.

### பசுப் பாதுகாப்புக் கட்டளை:

பசுமடம் என்ற பெயருள்ள இடங்கள் பல இவ்வூரிலுள்ளன முன்பு பசுக்களைப் பாதுகாத்துப் பாலினைக்கோயிலுக்கு அளித்து வந்தனர் என அறிகிறோம். திருவாவடு துறையாதீனத்தினர் பசு

மடம் வைத்துப் பசுக்களைப் பாது காத்துப் பஞ்சகவ்வியங்களை நாடோறும் கோயிலுக்கு வழங்கி வருகின்றனர். திருவாதிரைத் திருநாளன்று பசுத்தீபாராதனைக் குரிய காராம் பசுவினையும் இவர்களே கொண்டு வந்து நிறுத்துகின்றனர்[69]

திருப்பனந்தாள் மடத்தினரும் பசுப்பாது காப்பிற்காக ஆண்டொன்றுக்கு ரூபா ஆயிரம் கோயிலுக்கு வழங்குகின்றனர்[62]. கீழரதவீதியில் சாத்தான்குளம் கு. ம. கோபாலகிருஷ்ண பிள்ளையின் பசுமடம் கி. பி. 1928 ஆம் ஆண்டுமுதல் இயங்கிவருகிறது. உதய மார்த்தாண்ட அபிடேகத்திற்கும் இராக்கால அபிடேகத்திற்கும் முறையே ஒரு லிட்டர் பால் வழங்கிவருகின்றனர். கோடீச்வரி அறக்கட்டளையிலிருந்து நான்கு பசுக்கள் இம்மடத்திற்கு அளிக்கப்பட்டதாகத் தெரிகிறது[63].

## படிக்காசுக் கட்டளை

திருப்பனந்தாள் மடத்தினர், 'திருச்செந்தூரில் மார்கழி மாதத்தில் போற்றிமார் பட்டர் படிக்காசுநிதி' என ரூ 2000/- முதற்பொருள் வைத்து அதிலிருந்து வரும்வட்டியைக் கொண்டு நிர்வாகச் செலவுபோக ரூ 90/- மட்டும் வழங்கி வருகின்றனர். மூலவருக்குப் பூசை செய்யும் போற்றிமார்களுக்கு நாளொன்றுக்கு ரூ 1-50 வீதம் 30 நாட்களுக்குமாக ரூ 45/-ம் சண்முகருக்குப் பூசை செய்யும் பட்டர்களுக்கு நாளொன்றுக்கு ரூ 1-50 வீதம் 30 நாட்களுக்கும் ரூ 45/-ம் ஆக ரூ 90/- வழங்குகின்றனர்[64].

# ஏழாம் இயல்

## அணி கலன்கள்

நாள் வழிபாட்டிலும், திரு விழாக் காலத்தும் பயன்படுத்தப் படும் அணிகள் பற்றியும் கலன்கள் பற்றியும் ஆய்வதே இவ்விய லின் நோக்கம். இவ்வியல் கீழ்வரும் பகுப்புக்களைப் பெறுகிறது.

அ) அணிகள்
ஆ) கலன்கள்
இ) வாகனங்கள்
ஈ) பேணும் முறை
உ) சில முடிவுகள்

### அ. அணிகள்

இத்திருக்கோயிலிலுள்ள அணிகளின் மதிப்பு ஏறத்தாழ எண்பது இலட்ச ரூபா என மதிப்பிடப்பட்டுள்ளது.[1] இக்கோயிலின் சொத்து விவரப் பதிவேட்டில் ஏறத்தாழ நானூறு பக்கங்கள் அணிகலன்கள் பற்றிக் கூறுகின்றன. ஆயினும் அவை இன்னாரிட மிருந்து பெறப்பட்டவை என்ற குறிப்பில்லை. அருணகிரி நாதர் திருச்செந்தூர் முருகனைப் பாடும் போது,

> ''தண்டையணி வெண்டையங் கிண்கிணிச தங்கையும்
> தண்கழல்சி லம்புடன் கொஞ்சவே''[2]

என அணிகளின் சிறப்பையும் சேர்த்துப் பாடுகிறார்:

### அணிகள் பெற்ற வரலாறு

மூலவர், சண்முகர் ஆகியோரது அணிகளை இக்கோயில் பெற்ற விதம் பற்றிப் பலவாறு கதைகள் கூறப்படுகின்றன;

### சிவப்புக் கல் பெற்ற கதை:

''மூலவருக்குரிய மணி முடியில் பதிப்பதற்குரிய சிவப்புக் கல்லை எங்கிருந்து பெறுவதெனச் சிற்பிகள் சிந்தித்தனர். செந்தில் முருகன் சந்நியாசி வடிவில் திருவனந்தபுரம் சென்று இரவிலே காவலரை மயக்கி திருவிதாங்கூர் மன்னர் அரண்மனையிலிருந்து சிவப்புக் கல்லை எடுத்து வந்தார்'' என்கிறார் திரு இராமானந்த சாத்திரி.[3] இது சிவப்புக் கல்லைத் தேடும் போது திருவிதாங்கூர் மன்னர் நன்கொடையளித்த செய்தியைக் குறிப்பிடலாம்.

### பதக்கம் பெற்ற கதை

''சண்முகர் கட்ட பொம்மன் கனவில் தோன்றி, 'என் குறத்தியணிய உன் மனைவியின் பதக்கத்தைக் கொடு' என வேண்டினார். மன்னனும் மகிழ்ந்து ஈந்தான்'' என்கிறார் திரு வீரமல்லுசாமி.[4]

## கட்டாரி பெற்ற வரலாறு

கட்டப்பொம்மன் வெள்ளையரிடம் தோல்வியுறுவது உறுதியானவுடன் தான் வழிபட்ட சுப்பிரபணியர், சண்முகர், வள்ளி, தெய்வயானை செப்புத் திருமேனிகளையும் தங்கத்தினலாய கட்டாரியையும் இக்கோயிலுக்குக் கொடுத்தனுப்பினன் என்கிறார் முத்துக்குமார சாமி.[5]

## தங்கப் பதக்கம் பெற்ற வரலாறு

''பாண்டித் துரைத் தேவர் (மதுரைத் தமிழ்ச் சங்கம் நிறுவியவர்) திருச்செந்தூருக்கு வந்து காலையில் கடலில் நீராடிய போது மார்பிலணிந்திருந்த பதக்கம் கடலினுள் விழுந்து விட்டது. எவ்வளவு தேடியும் கிடைக்க வில்லை. மாலையில் மன உறுதியுடன் முருகனை எண்ணிக் கடலில் இறங்கினர். காலில் பதக்கம் தட்டுப் பட்டது. தன் மார்பிலணிந்தது எச்சிலாயிற்றென்று கருதி வேறொரு பதக்கம் செய்தனுப்பினர்.[6]

## வைர வேல் பெற்ற வரலாறு

இந்நூற்றாண்டில் வாழும் வைரவன் செட்டியார் சண்முகருக்கு வைரவேல் செய்தளிக்க விரும்பினர். எந்த அளவில் (உயரம்) செய்வதெனச் சிந்திக்கும் போது அருகிலிருந்த தென்னையிலிருந்து ஓர் ஓலை விழுந்தது. அவ்வோலையையே அளவாக வைத்துச் செய்து முடித்தார். அது சண்முகர் உயரத்திற்கு ஏற்ற அளவில் அமைந்தது என்கிறார் திரு சொக்கலிங்கம்.[7]

## பீடங்கள் வழங்கியவர்

சண்முகர் காலடியில் வைக்கப்படும் ஐந்து கிலோ நிறையுள்ள தங்கப் பீடத்தையும் மூலவருக்கு வைக்கப்படும் பீடத்தையும் திருவாவடுதுறை மடத்தைச் சார்ந்த அறுபத்து மூவர் தம்பிரான் செய்தளித்தார் என்கிறார். திருதேசிகமூர்த்தி.[8] வள்ளிதெய்வயானை அம்மன்களுக்குப் பத்ம பீடம் செய்ய தேவதானம் ஏற்பாடு செய்து வருகிறது.

## திருத்தோட்டு மணி பெற்ற வரலாறு

''சண்முகருக்கு அணிவிக்கப் பெறும் திருத்தோடுகளின் நடுவில் துளையிருந்தது. அதைச் செம்மணியினல் அடைக்க விரும்பிய சண்முகர் செங்கோட்டை திரு இராமையர் கனவில் தோன்றி 'உனது காதுகளிலணிந்துள்ள கடுக்கன்களைக் கழற்றி எனது காதணிகளில் வை' என்றார். அவரும் அவ்வாறே கொண்டு வந்து வைக்க அத்துளை அடைபடுமளவு அக்கல் பொருத்தமாக அமைந்தது என்கிறார் திரு வென்றிமாலை.[9]

## கிழக்கிந்தியக் கம்பெனிக் காசுமாலை

இது 59 காசுகளைக் கொண்டது.

### அட்டபந்தனக் காசு மாலை

கி. பி. 1909 ஆம் ஆண்டு மூலவர் சிலை புதிதாகச் செய்யப் பெற்று அஷ்ட பந்தன கும்பாபிடேகம் செய்தனர். அக்காலத்தில் அறங்காவலராயிருந்த மேலச் சேவல் வேத மூர்த்தி முதலியார் குட முழுக்குக்காகப் பலவிடங்களிலுமிருந்துபொன்னும்பொருளும் பெற்றார். இக்கால இருபத்தைந்து காசு நாணய அளவில் தங்கக் காசுகளைச் செய்து இக்கோயில் ஊழியரனைவருக்கும் தலைக்கு ஒரு காசு கொடுத்தார். மீதமிருந்த 208 காசுகளைக் கொண்டு சண் முகருக்கு காசு மாலை யொன்று செய்தளித்தார். இஃது அட்ட பந் தனக் காசு மாலை யென வழங்கப்படுகிறது.[10]

**அமெரிக்கன் டாலர் மாலை:**

ஒரு டாலரின் எடை $2\frac{1}{2}$ பவுன். இது 100 அமெரிக்கன் தங்க டாலர்களால் செய்யப் பெற்ற காசு மாலையாகும். சிறப்பு நாட்களில் சண்முகருக்கு அணிவிக்கப் பெறுகிறது.

### சில அணிகளும் கொடுத்தவர் பெயர்களும்

சில அணிகலன்களை இன்னார் கொடுத்தார் எனக் குறிப்பிடு கின்றனர். கொடுத்த ஆண்டு செய்தி முதலிய குறிப்புக்கள் தெரிய வில்லை.[11]

| அணியின் பெயர் | வழங்கியவர் |
|---|---|
| திருக் குழைக் கூட்டம். | கொத்த மங்கலம் திரு குட்டையன் செட்டி யார். |
| கல் ஒட்டியாணம். | கொழுமத்தைச் சேர்ந்த ஓர் அம்மையார் |
| உருத்திராக்கமாலை | திரு மணி முதலியார் (1974) |
| தட்டு மணிப் பதக்கம் | பேட்டை திரு சண்முக மூப் பனார் |
| தங்கக் கட்டி வேலாயுதம். | பேட்டை உள்ளி வியா. பாரிகள் மகமை. |
| கௌரி சங்கர் பதக்கம். | திரு பிரமானந்த ரெட்டி (பாரத முன்னாள் அமைச்சர்) |
| வைர நெற்றிப் பட்டை. | திருச்செந்தூர் சங்கர நாரா யண தீட்சிதர். |
| அம்மன் திருப்பாதங்கள் | திரு கே. எஸ். சண்முக வேல் நாடார் தூத் துக்குடி. |

| | |
|---|---|
| அபய வரதக் கைகள் | மேற்குறிப்பிட்டவர் |
| சண்முகர் தங்கப்பதக்கம் | திரு. ஏ. கே. தங்க சாமி செட்டியார், மதுரை |
| சண்முகர் திருப்பாதங்கள். | திரு. சங்கர வடிவேலுப் பிள்ளை. |
| பதக்கம் | திருவாவடுதுறை யாதீனம் |
| பதக்கம் | தருமபுர ஆதீனம். |
| சிறிய தங்க மயில் | திரு. எம். எம். ஏ. சின்னப்பா தேவர் |
| சிறிய தங்க மயில் | திரு. பா. சிவந்தி ஆதித்தன். |
| தங்கம், வெள்ளிக் கவசங்கள் | தேவதானம் (கி. பி. 1960) |

## கொடுத்தவர் பெயர் தெரியாத அணிகள்

கல் பதித்த கிரீடங்கள், சூரியக் கொண்டைகள், பதக்கங்கள், கச்சப்புரச் சங்கிலிகள், நெற்றிப் பட்டங்கள், பவள மாலைகள், முத்து வடங்கள், தங்க மாலைகள் (பல வடங்களில்,) கமகரி மாலைகள், மகரி கண்டி மாலைகள், தங்க ஒட்டியாணங்கள், கம்மல் கள், கல் பதிக்கப்படாத தங்கக் கிரீடங்கள், தங்கத் திருமாங்கல் யங்கள், அமெரிக்கன் டாலர் க்காசு மாலை, காசு மாலைகள், உருத்தி ராக்க மாலைகள், வில்வ தள மாலைகள், கண்ட சரங்கள், மூக்குத்தி கள் காஞ்சிக்காய் மணி மாலைகள், கொலுசுகள், மாவிலைக் கொத்து, தர்ப்பைக் கட்டு, சண்முகர் ஆயுதங்கள், தங்கக் கிளிகள், தங்க எலுமிச்சம் பழங்கள், சிவப்புப் பந்து.

## செங்கல் பெற்ற வரலாறு

சில ஆண்டுகளுக்கு முன் (ஆண்டு தெரிய வில்லை) வடநாட்டி லிருந்து வந்த துறவி யொருவர் பளிங்குக் கல் ஒன்றை இக்கோயில் அறங்காவலரிடம் கொடுத்து மூலவருக்குப் பின்புறமுள்ள மாடக் குழியில் வைத்துப் பூசை செய்யுமாறு கூறினர். அவ்வாறு பூசை செய்தால் பளிங்குக் கல் மரகதக் கல்லாக மாறி விடும் என்றாராம். அக்கல் இன்னும் அங்கிருப்பதாகத் தெரிவிக்கிறார்.[12]

## சீபலி நாயகர்கள்

சீபலி நாயகர்களைத் தங்கத்திலும் வெள்ளியிலும் அமைந் திருப்பது இக்கோயிலின் சிறப்பாகும்.

## அரிதான பொருட்கள்

தங்கத்தினால் செய்யப் பெற்ற சில அணிகளின் பயனைக் காண் போம்.[13]

| அணி | பயன் |
|---|---|
| 1. தங்க ஊசி | கீழே விழுந்த சோற்றினைக் குத்தி எடுத்தல் |
| 2. தங்க மீன்கள் | குடமுழுக்கின் பேபது குடத்துள் இடல் |
| 3. தங்க ஆமை | மேலது |
| 4. தங்கச் சாமரை | பூசை முடிவில் கவரி வீசுதல் |
| 5. தங்கத் தாமரைப் பூக்கள் | குடமுழுக்கின் போது நீரிலிட |
| 6. நவரத்தின மோதிரங்கள் | குடமுழுக்கின் போது பட்டர் அணிதல் |
| 7. காண்டா மிருகக் கொம்பு (தங்கப் பிடியுடன்) | பெரு விழா எட்டாம் நாள் சண்முகர் அபிடேகத்தில் இதன் மீது நீர்விடல் |

## நிறைவேற்றப் படா உபயங்கள்

அன்பர்கள் மூலவருக்கும் சண்முகருக்கும் நவரத்தினக் கிரீடங்கள் செய்யவும், முத்தங்கி செய்யவும் பின்வரும் பொருட்களை வழங்கியுள்ளனர்.

1 உலாந்தா வைரங்கள்
2 இலங்கை வைரங்கள்
3 பவளக் குச்சிகள்
4 சயாம் ரூபிகள்
5 பலவகை முத்துக்கள்
6 பச்சைக் கற்கள்

## சோதனைக்குச்சிகள்

தங்கத்தோடு சேர்க்கப்பெற்ற செம்பின் அளவை மாற்றுரைத்துக் காண்பதற்காகப் பத்துத் தங்கக் குச்சிகள் அணிகளின் பட்டியலில் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது. இக்குச்சிகள் பல்வேறு அளவு செம்போடு சேர்த்துச் செய்யப் பெற்ற தங்கக் குச்சிகளாம்.

## காணிக்கைத்தங்கம்

அன்பர்கள் காணிக்கையாக உண்டியலில் இட்ட தங்கம் இது வரை 15 கிலோ சேர்ந்துள்ளது.[15] நவரத்தினக் கிரீடம், முத்தங்கி செய்ய இதனைப் பயன்படுத்தலாம். கி.பி. 1980 ஆம் ஆண்டில் அரசுத் தங்கக் கடன் பத்திரம் வழியாக 4 கிலோ தங்கம் வர வேண்டியதுள்ளது. காணிக்கையாக வரும் தங்க அணிகளில் பல

முலாம் பூசப்பட்டவை யாகவும் உள்ளன. இவற்றை 24 காரட் தங்கரேக்குகளாக மாற்றி இரண்டு கிராம் எடையில் தனித்தனித் தகடுகளாக்கிப் புத்தக வடிவில் வைத்துள்ளனர். கலப்பற்ற தங்கத்தைப் பிறகோயில்களுக்குக் கடனுகக் கொடுத்து வாங்கும் வழக்கம் உண்டு என்கிருர் திரு. சிவக் கொழுந்து.[16]

## வெள்ளியங்கி

கரியமாணிக்கப் பிள்ளையார், வீரபாகு, வீரமகேந்திரர், அருணகிரிநாதர், வெங்கடாசலப் பெருமாள் ஆகியோருக்கு வெள்ளியினுலாய கவசங்கள் உள்ளன. முழு அங்கி சாத்தும் சிறப்பு நாட்களில் இவர்கட்கு இக்கவசங்களிடப் பெறும். கி,பி. 1960 ஆம் ஆண்டில் இவை தேவதான நிர்வாகத்தால் செய்யப்பட்டன.[17]

## நாள்வழிபாட்டு அணிகள்

நாள் வழிபாட்டில் உதயமார்த்தாண்ட அபிடேகத்தின்பின் கீழ்க்காணும் முறையில் அணிகள் சாத்தப்படுகின்றன.[18]

| மூலவர் | சண்முகர் | நாச்சிமார் |
|---|---|---|
| தங்கத்திருவடிதாரம் | தங்கத்திருவடிதாரம் | திருப்பாவாடை |
| தங்கத்திருப்பாதம் | தங்கத்திருமார்புதாரம் | திருமார்புதாரம் |
| தங்கத்திரு மார்புதாரம் | நாகபரதக்கை | செண்டுக்கை. |
| தங்கச்சக்திவேல் | அங்குசக்கை | தொங்குகை |
| தங்கச் செபமாலைக்கை | தங்கப்பதுமபீடம் | (எல்லாம்தங்கம்) |
| தங்கக்கடிகக்கை | | |
| தங்க வரதக்கை | | |

## சிறப்பு அங்கி

விசாகம், பிரதோடம், சஷ்டி, கார்த்திகை மாதக் கடைசி வெள்ளி முதலிய சிறப்பு நாட்களில் சாத்தப்படுவது சிறப்பு அங்கி. இதற்காகத் தனிக் கட்டணம் செலுத்திஞல் எந்த நாளாயினும் சிறப்பு அங்கி (முழு அங்கி என்பர்) சாத்தப்படும். நாள் வழிபாட்டு அணிகளோடு கீழ்க்காணும் அணிகளும் சாத்தப்படும்.[19]

| மூலவர் | சண்முகர் |
|---|---|
| சிவப்புக் கல் பதித்தஅரதன முடி. | தங்க வரதக்கை |
| | தங்க அபயக்கை |
| 39 கல் இரட்டை வடச் சங்கிலி | தங்க அடிக்கை |
| பிரபை யாழி | தங்கக் கட்டி வேலாயுதம். |
| வெள்ளிக் கால்கள் | தங்க முலாம் பூசியகத்தி |
| செம்பு நட்டுக் கால் | தங்கத் தகடு |
| | பொதிந்த சேவல் கொடி |

உருத்திராக்க மாலே
(தங்கத்துள் பொதியப்(பட்ட 42 மணிகள்)
சுப்பிரமணியர் உருவமுள்ள
தங்கப் பதக்கம்

வைரவேல்
வைர அபயக்கை
அரதன முடி
விபூதிப் பட்டை வைரக்கல்
உருத்திராக்க மாலை
தங்கப் பூணூல்
நவகண்டி மாலே
அமெரிக்கன் ½ டாலர்
(100 கொண்ட) தங்கக் காசு மாலே
கெச்சப்புறப் பதக்க மாலே.

## திருவிழாக்காலத்துக்குமரவிடங்கர் அணி

ஆவணி மாசிப் பெருந்திரு விழாக்களிலும் ஏனைய எழுந்தருளும் நாட்களிலும் குமர விடங்கரும் நாச்சிமார்களும் பின் வரும் அணி களைப் பெறுகின்றனர்.[20]

(1) இரத்தினக் கிரீடம் 1, (2) நாச்சிமார் சூரியக் கொண் டைகள் 2 (3) பிந்து சரக் கோவை 1 (4) அங்கி முதலியன 6 (5) திரு முலேத் தளம் 2 (6) ஒட்டியாணம் 3 (7) சமுதாடு கத்தி முதலியன 3 (8) தங்க எலுமிச்சம் பழம் 1 (9) வெள்ளிக் கிளி 1 (10) அரதனக் குலிசாயுதம் 1 (11) நற்பவளவடம் (5 வடம்) 2 நற்பவளவட்டம் (4 வடம்) 1 நற்பவளவட்டம் (3 வடம்) 1 (12) மோகன மாலே (108, 47 முத்துக்கள்) 2 (13) நல் முத்து மாலே 11 வடம் 1 (14) நாச்சிமார் குழை 4 (15) நாச்சிமார் செவி மடல் 2 (16) நாச்சிமார் மூக்குத்தி 1 (17) பதக்க மாலே 7 (18) ரவாய்ப் பதக்க மாலே 1 (19) வெள்ளி அபிடேகக் கிரீடம் 1 (20) வெள்ளி நாச்சிமார் கிரீடம் 2 (21) இரத்தினத் தலேப்பாகை1 (22) வெள்ளி உரி 1.

## சண்முகர் திருவிழா அணிகள்

ஆவணி, மாசித் திரு நாட்களில் 7, 8 ஆகிய திரு நாட்களில் குமர விடங்கர் எழுந்தருளல் இல்லே. ஆரும் திருநாளன்றிரவிலே குமர விடங்கருக்குப் பூட்டிய அணிகள் சண்முகருக்காகத் திரும்பப் பெறப்படும். பெரிய செப்பு என்னும் பெட்டியிலுள்ள அணிகளே யும் சேர்த்து 101 உருப்படிகள் சாத்துகின்றனர்.[21] இவை திருவா திரையன்று நடராசருக்குச் சாத்தப்படுகின்றன.

## செந்தில் நாயகர் அணி

சிறப்பு நாட்களில் செந்தில் நாயகர் 32 மணிகள் கொண்ட தங்கத் தால் பொதியப்பட்ட உருத்திராக்க மாலே பூண்டு எழுந் தருளுகிருர்.

## (ஆ) கலன்கள்

இத்தலைப்பில் தங்கம் மற்றும் வெள்ளியினாலாய கலங்கள் (பாத்திரங்கள்) மட்டுமே ஆய்வுக்குக் கொள்ளப்படுகின்றன. செம்பு, பித்தளை, வெண்கலம் ஆகியவற்றால் ஆகிய பாத்திரங்கள் கொள்ளப் பட்டில.

### தங்கப்பாத்திரங்கள்:

**1. தங்கக்குடங்கள்**

தாரை வேள்விமற்றும் குடமுழுக்கு நாட்களில் இரண்டு தங்கக் குடங்கள் பயன்படுத்தப் பெறுகின்றன. ஒவ்வொன்றும் 2881 கிராம் எடையுள்ளது.[22]

**2 தங்கத் தேங்காய்கள்**

அமைச்சர் போன்றோர் கோயிலுக்கு வருகை தரும் போது தங்கக் குடத்தின் மீது தங்கத் தேங்காய் வைத்து பூரண கும்ப மரியாதையளிப்பது இங்குள்ள வழக்கம். தாரை வேள்விக்கும் தங்கக் குடங்கள் மீது தங்கத் தேங்காய்களை வைப்பதுண்டு.[23]

**3, தங்கக் கலசங்கள்:**

பதினெட்டுத் தங்கக் கலசங்கள் உள்ளன, வேள்வியின் போது தங்கக் குடத்தைச் சுற்றிலும் அஷ்டவித்தியேசுவரர்க் குரிய கல சங்கள் வைக்க இவை பயன்படுகின்றன.

**4. தங்கக் கெண்டிகள்:**

தங்கக் கொடிகள் இரண்டு உள்ளன. இவை போற்றி, பட்டர் களால் பயன்படுத்தப்படுகின்றன.

**5. தங்க எலுமிச்சம் பழங்கள்:**

மூன்று எலுமிச்சம் பழங்கள் உள்ளன. பெருவிழாக் காலத்து குமர விடங்கர் கையில் கொடுக்கப்படுகின்றன.

**6. தங்கத் தீபாராதனைத்தட்டு**

இது பிரதோடத்தன்று பயன்படுத்துவதற்காகச் சேத்தூர் சமீன்தாரால் வழங்கப்பட்டது.[24]

**7. தங்கத் தாம்பாளங்கள்:**

இவை திரு விழாக் காலத்துப் பயன்படுத்தப் பெறுகின்றன.

### 8. தங்கக் கோப்பைகள்:

இவையும் திருவிழாக் காலத்துப் பயன்படுகின்றன.

### 9. தங்க விளக்கு

மூலவருக்கு அருகில் வாடா விளக்காகப் பயன் படுத்துவதற்காக ஊர்க்காட்டு அரசியால் வழங்கப் பெற்றது.[25] இவ் விளக்கினை இப்போது ஏற்றி வைப்பதில்லை. தேய்மானம் ஏற்பட்டால் தேவதானம் ஒத்துக் கொள்வதில்லை என்று ஒரு போற்றி கூறினர்.[26]

## வெள்ளிப் பாத்திரங்கள்

வெள்ளியினால் செய்யப்பட்ட பாத்திரங்கள் சிறப்பு நாட்களில் பயன் படுத்தப் படுகின்றன. கி. பி. 1978 ஆம் ஆண்டில் சென்னை வாசி யொருவர் ரூ 35000/- பெறுமானமுள்ள வெள்ளிப் பாத்திரங்களை வழங்கியதாகத்திரு விட்டலம் போற்றி தெரிவிக்கிறார்.[27]

### 1. குத்து விளக்குகள்

சிறப்பு நாட்களில் வேள்வி நடத்துமிடங்களில் ஏற்றி வைக்கப் படுகின்றன.

### 2. கற்பூரத் தட்டுகள்

சிறப்பு நாட்களில் பயன் படுத்தப் படுகின்றன.

### 3. திருநீற்று மடல்கள்:

இவை நாள் வழிபாட்டில் அன்பர்கட்குத் திருநீறு வழங்கப் பயன் படுத்தப் படுகின்றன.

### 4. சோடச (பதினாறு) தீபங்கள்

இவை நான்கு ஆண்டுகட்கு முன் தேவதானத்தினரால் செய்யப் பட்டவை.[28] சிறப்பு நாட்களில் பயன்படுத்தப் பெறுகின்றன. ஏழு மலர்த் தட்டு, நாகத் தட்டு, புருட மிருகத் தட்டு, மயில் தட்டு, அம்ச தீபம், குக்குட தீபம், ஒன்பது மலர்த் தட்டு, ஏழு மலர்த் தட்டு, ஐந்து மலர்த் தட்டு, மூன்று மலர்த் தட்டு, ஒரு மலர்த் தட்டு, கும்ப தீபம், ஆமை தீபம், மேரு தீபம், நட்சத்திர தீபம், கற்பூர தீபம்.

### 5. சோடசத்திற்குப் பின் காட்டப் பெறுவன:

குடை, கண்ணாடி, விசிறி, சுருட்டி ஆகியவையும் வெள்ளியினால் செய்யப்பட்டுள்ளன.

## 6. கொப்பரைகள்

வெள்ளிக் கொப்பரைகள் பத்தொன்பது உள்ளன. குட முழுக்கு மற்றும் சிறப்பு நாட்களில் பயன் படுத்தப் படுகின்றன.

## 7. கெண்டிகள்

இவை நாள் வழிபாட்டில் போற்றி மற்றும் பட்டரால் அர்க் கியம் கொடுக்கப் பயன் படுத்தப் படுகின்றன.

## 8. வெள்ளி வேல்கள்

சிறப்பு அங்கியின் போது வீர வாகு, வீர மகேந்திரர் ஆகியோ ருக்குச் சாத்தப் படுகின்றன. அன்பர்கள் சிறிய வெள்ளி வேலினை உண்டியலில் காணிக்கையாகச் செலுத்துகின்றனர். அனைத்தை யும் பயன்படுத்தல் இயலாதாகையால் உருக்கி வேறு பாத்திரங் களாகச் செய்து விடுகின்றனர்.

## 9. ஏகதாரை அண்டா

தாராபிடேகத்தின் போது மூலவர் தலைக்குமேல் முக்காலியின் மீது வைக்கப் பட்டுப் பாலினை ஒழுக்குவதற்குப் பயன் படுகிறது. ஓரடி விட்டமுள்ளது. துளை பெரிதாக இருப்பதால் தருப்பைப் புல்லையிட்டுப் பாலாபிடேகம் செய்கின்றனர்.

## 10. சகஸ்திர தாரைத் தட்டு

எட்டாம் திரு நாளில் காண்டா மிருகக் கொம்பின் மீது நீருற்றி அபிடேகம் செய்யும் போது இதன் மீது வைத்து ஊற்று கின்றனர்.

## 11. குடங்கள்

வெள்ளிக் குடங்களில் சில வெள்ளையர்களால் காணிக்கையாக வழங்கப் பட்டன. கி. பி. 1803 இல் திருநெல்வேலி மாவட்டக் கலெக்டராயிருந்த எஸ். ஆர். லூசிங்டன் என்பார் இக்கோயிலில் நடைபெற்ற எட்டாம் திரு நாளன்று வந்ததாகவும் சண்முகருக்கு விசிறி கொண்டு வீசுவதைக் கண்டு 'உங்கள் சுவாமிக்கு வியர்க் குமோ?' எனக் கேட்டதாகவும் பட்டர்கள் மாலைகளை அகற்றி விட்டு ஒரு புதிய துண்டினால் சண்முகர் மீது ஒற்றி வியர்வையைக் காட்டியதாகவும் அது கண்டு வியந்த லூசிங்டன் தன் தவறுக்கு வருந்தி வெள்ளிக் குடம் பரிசளித்ததாகவும் கூறுகின்றனர்.[29] மற்றும் சிலர் தன் நீங்கா நோய் நீங்கப் பெற்றதற்காகச் செய்து கொடுத்தார் எனவும் கூறுகின்றனர்.[30] இக்குடம் கலச மாட்டு நாளில் வெளியே எடுக்கப் படுகிறது.

நாள் வழிபாட்டில் பார்வதி அம்மன் முன் கலச பூசைக்காக வெள்ளிக் குடம் வைக்கப் படுகிறது. சண்முகர் அபிடேக நாட் களில் சண்முகர் கலசம் வைக்குமிடத்தில் (பகா மண்டபத்தில் தென் கிழக்கு மூலேயிலுள்ளது) வெள்ளிக் குடமும் சுற்றிலும் எட்டுக் கலசங்களும் வைக்கப் படுகின்றன.

## 12. வெளளிச் செம்புகள்

இவை அட்ட வித்தியேசுவரர்க்குரிய கும்பங்களாக வெள்ளிக் குடத்தினைச் சுற்றிலும் வைக்கப் பயன் படுகின்றன. இவை நாள் வழிபாட்டில் இடம் பெறுகின்றன.

## 13. வெள்ளிக் கிண்ணங்கள்:

அர்க்கியத்திற்குப் பயன் படுகின்றன.

## 14. மயில் கடடியதடி

கட்டியம் கூறுவோர் இதனைக் கையில் பிடித்துக் கொண்டு கட்டியம் கூறுகின்றனர்.

## 15. சேவல் கட்டியதடி

சுவாமி எழுந்தருளும் போது கட்டியங்காரர் பயன் படுத்துகிறுர்.

## 16. யாழி முகச் சோட்டாத்தடி

இவ்வகையில் இரண்டு' சிறப்பு நாட்களில் சுவாமி எழுந்தரு ளும் போது முக்காணியரால் பிடிக்கப் படுகின்றன. இதனைப் பிடித்துச் செல்வோருக்குச் சோற்றுக் கட்டிகள் வழங்குகின்றனர்.

## 17. கத்தி

வெள்ளியினலாய வாள் இது. சுவாமியின் முன் முக்காணியர் அழகுக்காகப் பிடித்துச் செல்கின்றனர்.

## 18. சமையல் பாத்திரங்கள்:

சிறப்பு நாட்களில் வெள்ளி நிறை காதுச் சட்டிகள், வட்டில் கள், உத்திராணிகள் ஆகியவை பயன் படுத்தப் படுகின்றன.

## 19. தீவட்டிகள்

வெள்ளிக் கைப்பிடியுடன் நான்கு தீவட்டிகள் உள்ளன. திரு விழாக் காலத்து அன்பரால் பிடித்துச் செல்லப் படுகின்றன.

## 20. பிரதோடக் குடை

பிரதோடத்தில் சீபலி எழுந்தருளும் போது மயில் மீது வெள்ளிக் குடை வைத்து வந்தனர். இப்போது இது பழுது பட்டுள்ளதால் பயன் படுத்தப் படவில்லை.[31]

## 21. தாம்பாளங்கள்

சிறப்பு நாட்களில் திருக்கண் சாற்றவும், பிரசாதங்கள் வழங்கவும் வெள்ளித் தாம்பாளங்கள் பயன் படுத்தப் படுகின்றன. கோட்டாறு மகமை வெள்ளித் தாம்பாளம் நாள் வழி பாட்டில் மூலவர் உச்சிக் கால நிவேதனத்திற்காகப் பயன்படுத்தப் படுகிறது.

## 22 ஆமைத்தகடு

வேள்வி நடத்தும் ஆசாரியார் அமர்வதற்குப் பயன் படுத்தப் படுகிறது.

## 23. வலம்புரிச்சங்கு

நாள்வழிபாட்டில் திருக்காலங்களின் முடிவில் மூலவரைப் பூசைசெய்யும் போற்றி இச்சங்கில் தீர்த்தநீர் கொண்டுவந்து அன்பர்கள் மீது தெளிக்கிறார். இவ்வகைச் சங்குகளில் தங்கப் பிடியுடன் கூடியவையும் அரதனங்கள் பதிக்கப்பட்டவையும் உள.

### (இ) வாகனங்கள்

வாகனங்களைத் தங்கமுலாம் பூசப்பட்டவை எனவும் வெள்ளித் தகடுகளால் பொதியப்பட்டவை எனவும் தந்தங்கள் பதிக்கப் பட்டவை எனவும் பகுக்கலாம்.

## 1. தங்கத்தாலான வாகனங்கள்

**தங்கரதம்** *(நி. ப. எண் 20)*

கி.பி. 1970 ஆம் ஆண்டில் மக்களின் நன்கொடையால் பெறப் பட்ட தங்கத்தைக் கொண்டு செய்யப்பெற்றது. ஏறத்தாழ 12அடி உயரமுள்ளது. இதற்காக ஏழு கிலோ நிறையுள்ள தங்கம் பயன் படுத்தப்பட்டுள்ளது. மாயவரம் இரத்தினம் செட்டியார் தங்கத்தைத் தகடுகளாக்கி வழங்கினார் என்பர்[2]. ஒவ்வொரு திங்களிலும் கார்த்திகை நாளன்று செயந்திநாதர் இதில் எழுந்தருளி கிரிவீதிவலம் வருகிறார். அன்பர்கள் தங்கத்தேரிழுக்க விரும்பினால் ரூ 500 - செலுத்திவிரும்பும் நாளில் இழுத்துக் கொள்ளலாம். வாணிக வளர்ச்சிக்காகவும், நலத்திற்காகவும் தங்கத்தேர் இழுக்கின்றனர்.

பிரும்மா வெள்ளிக் குதிரைகளை இயக்குவது போல் தேரின் முன்னால் அமைக்கப்பட்டுள்ளது. மேலேயுள்ள அறுகோணவடிவில் ஆறுபடைவீடுகளில் காட்சிதரும் முருகன் திருக்கோலங்கள் அமைக்

கப்பட்டுள்ளன. மேல்தட்டில் தொங்க விடப்பட்டிருக்கும் தங்கக் குண்டுகளின் அசைவு தேரினை அழகுசெய்கிறது. உச்சியில் தங்கக் குடையுமுள்ளது.

**தங்கக்கைலாயம்**

இது பெருவிழாவில் ஒன்பதாம் திருநாள் இரவு வாகனமாகப் பயன்படுகிறது. ஏறத்தாழ ஐந்தடி உயரமுள்ளது. இராவணன் கைலையைப் பெயர்த்தெடுக்க முற்பட்ட செயல் முன்புறம் அமைத்துக் காட்டப்பட்டுள்ளது (நி. ப. எண் 19)

**தங்கச்சப்பரம்**

பெருவிழாவில் ஏழாம் திருநாளன்று மாலையில் சண்முகர் எழுந்தருளப் பயன்படுகிறது. சிறப்புநாட்களில் செந்தில் நாயகர் எழுந்தருளச் சிறிய சப்பரம் ஒன்றும் உள்ளது. இவற்றிலுள்ள தங்கம் சுரண்டி எடுக்கப் பெற்ற சுவடுகள் தென்படுகின்றன[33]

**தங்க மயில் வாகனங்கள்**

பெருவிழாவில் ஐந்தாம் திருநாளன்று இரவில் சுவாமியும் அம் மனும் தனித்தனியாக எழுந்தருள இரண்டு பெரியதங்க மயில் வாகனங்கள் உள்ளன. ஏறத்தாழ ஏழடி உயரமுள்ளவை பிரதோட காலத்தில் தங்கச் சீபலி எழுந்தருளச் சிறிய மயில் வாகனம் ஒன்றுமுள்ளது. இதன் உயரம் ஏறத்தாழ $1\frac{1}{2}$அடி.

**தங்க முத்துக்கடாவாகனம்**

நடுவில் ஆட்டுக்கடாவும் இருபுறங்களிலும் மயில்களும் கொண்டு விளங்குகிறது. இதனைத் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் செய்து வழங்கினர் என்பர் திரு. தேசிக மூர்த்தி[34].

**தங்க அன்னவாகனம்**

மயில்வாகனத்திலேயே அன்னத்தின் தலையைப் பொருத்தி யமைக்குமாறு செய்துள்ளனர். இது மூன்றும் திருநாள் இரவில் அம்மன் எழுந்தருளும் வாகனமாகும்.

## வெள்ளிவாகனங்கள்

**குதிரைகள்**

சுவாமி பரிவேட்டைக்கு எழுந்தருளும் போது பயன் படுத்தப் படும் வாகனம். எட்டாம் திருநாளன்றிரவு குமரவிடங்கர் ஒரு குதிரையிலும் அலைவாயுகந்தபெருமான் ஒரு குதிரையிலுமாக எழுந்தருளுகின்றனர். இவ்வாகனங்கள் ஏறத்தாழ ஆறடி உயர முள்ளவை.

**சப்பரங்கள்**

பெருவிழாவில் எட்டாம் திருநாளன்று காலையில் சண்முகர் வெள்ளைசாத்தி எழுந்தருளும் போது வெள்ளிச் சப்பரத்திலேயே எழுந்தருளுகிறார் பெருவிழாக்காலத்தில் விநாயகர், நால்வர், சண்டிகேசுவரர் ஆகியோர் சிறிய வெள்ளிச் சப்பரங்களில் சுவாமியின் முன் எழுந்தருளுகின்றனர். சிறிய வெள்ளிச்சப்பரங்கள் ஏறத்தாழ மூன்றடி உயரமுள்ளவை. பள்ளியறைக்குச்சொக்கரைக் கொண்டுசெல்லும் வெள்ளிப்பல்லக்கும் இரண்டடி உயரமுள்ளதே யாகும்.

இக்கோயிலின் சுற்றுக்கோயிலாக வெயிலுகந்தம்மன் கோயில் விழாவிற்குரிய இடபம், சிம்மம், வேதாளம், மான், பூதம் பூங்கோயில் ஆகியவெள்ளிவாகனங்களும் சிவக்கொழுந்தீ சுவரர் கோயில் மண்டப அறைகளில் பூட்டிவைக்கப் பெற்றுள்ளன.

**வெள்ளித் தேர்**

கி.பி. 1970 ஆம் ஆண்டில் செய்யப்பட்டது. உயரம் ஏறத் தாழப்பன்னிரண்டடி இருக்கலாம். பெருவிழாவில் ஆறும் திருநாளன்றிரவில் குமரவிடங்கர் இதில் எழுந்தருளுகிறார்.

**தந்தத்தாலானவை**

மரத்தினுல் செய்யப்பட்டு தந்தங்களினுல் இழைக்கப்பட்ட கேடயச்சப்பரம் ஒன்றும் தந்தச்சப்பரமும் ஒன்றும் உள்ளன. இவை பெயரளவில் தந்தச்சப்பரங்கள் என்றுள்ளன. இவற்றிலுள்ள தந்தங்கள் உரித்தெடுக்கப் பட்டுள்ளன. இவற்றைத் திரு விதாங்கூர் மன்னர் வழங்கினுர் என்பர் திரு வென்றிமாலை[35]

## (ஈ) பேணும் முறை

**பொறுப்பு**

இத்திருக்கோயிலின் அணிகலன்களும் வாகனங்களும் முக் காணியர் பொறுப்பிலேயேயுள்ளன. அணிகலன்கள் கடற்கரைக் கோயில் கருவூலத்திலும் வாகனங்கள் மேலக்கோயில் எனப்படும் சிவன்கோயில் மண்டப அறைகளிலும் வைத்துப்பேணப்படுகின்றன முக்காணியர் மூன்று திங்கட்கு நால்வராக முறைவைத்துப்பேணி வருகின்றனர்.

**சரிபார்த்தல்**

கி.பி. 1951ஆம் ஆண்டில் அறநிலையத்துறையினரால் அணி கலன்கள் சரிபார்க்கப்பட்டுஆறுபடிகளில்எழுதிவைக்கப்பட்டன[36].

**வழக்கு**

கி.பி. 1966ஆம் ஆண்டில் சிலநகைகள் காணுமற்போயின இப்போது தேவதானக் கருவூலக்கணக்கரும் புதிதாக நியமனம் பெற்றுள்ள நகைக்கண் காணிப்பாளரும் பதிவேடுகளில் பதிந்து கொண்டு நகைகளைக் கொடுத்து வாங்கி வருகின்றனர். தேவதானத் திடமிருந்து சாவிகளைப்பெற முக்காணியர் முயல்கின்றனர்[37].

**பதிவேட்டில் ஒப்பமிடுவோர்**

நகைகளைப்பெறும் போது ஒப்புக்கொண்டோம் எனப்போற் றியும் பட்டரும் கையொப்ப மிடுகின்றனர். ஒப்புக்கொடுத்தோம் என ஸ்தலத்தார் (முக்காணியர்) நால்வர் ஒப்பமிடுகின்றனர்.

மீண்டும் கொடுக்கும் போது ஒப்புக் கொடுத்தோம் என ஸ்தலத்தார் கையொப்பமிடுகின்றனர்.

சாட்சிகளாக மூலவர் மணியம், சண்முகர் மணியம், நகரும் பாரா, அங்கி துப்புரவு, மணியடிபாரா' மகாமண்டபக்காவலர் நடராசர் பாரா, கருவூலம் பாரா ஆகியோர் கையொப் பமிடுகின்றனர்[38].

# எட்டாமியல்

## காணிக்கை

"நாம் நமக்குப் பிடித்தவர்களைப் பார்க்கச் செல்லும் பொழுது அவர்களுக்குப் பிடித்தவற்றையோ அதிசயமான பொருள்களையோ வாங்கிச் செல்வது வழக்கம். அந்த அடிப்படையில் தான் இறைவனுக்குக் காணிக்கை செலுத்தும் முறையில் தேனும் தினை மாவும் படைத்து வழிபட்டனர். காணிக்கை தருவது இன்று தோன்றியதில்லை. அது தொடர்ந்து வரும் செயல்" என்கிருர் அ. விசயலக்குமி.[1]

### காணிக்கையின் வேறுபெயர்

காணிக்கையை இப்பகுதி மக்கள் 'நேர்ந்திக்கடன்' என்றும், 'நேர்ச்சை' என்றும், 'நேமிசம்' என்றும் வழங்குகின்றனர்.

### நேர்வதற்குக் காரணம்:

இக்கோயிலில் செலுத்தப்படும் காணிக்கைக்குரிய காரணங்கள் உட்தலைப்பின் கீழ் ஆராயப்படுகின்றன. பொதுவாகப் பிள்ளைப் பேறு கருதியும் நோய் நீக்கம் கருதியும் குடும்ப வளர்ச்சி கருதியுமே காணிக்கைகள் கொடுக்கப் படுகின்றன.

### காணிக்கையின் வகைகள்

இக்கோயிலில் செலுத்தும் காணிக்கைகளைப் பத்துவகைகளாகப் பகுத்து ஆயலாம். அவையாவன:

1 முடி இறக்குதல்
2 காவடி எடுத்தல்
3 பால் குடம் எடுத்தல்
4 கால்நடைகள் மற்றும் பறவைகள் அளித்தல்
5 உண்டியல் போடுதல்
6 விளைபொருட்கள் அளித்தல்
7 பணவிடை (Money order)
8 துலாபாரம்
9 சோறு வழங்குதல்
10 பிறவகை

1 முடி இறக்குதல்

இதனை 'மொட்டைபோடுதல்' என்பர். என்னுடைய ஆணவத்தையும் அகங்காரத்தையும் இராஜபோகத்தையும் உன் முன்ஞல் இறக்கி வைக்கிறேன் என்று தான் கோவில்களிலே முடி

இறக்குகிறார்கள் என்கிறார் திரு. கண்ணதாசன்.[2] ஆய்வாளர் விசாகத்த திருநாளையொட்டி முடி இறக்குபவர் பலரைப்பேட்டி கண்டறிந்த செய்திகளின் முடிவு வருமாறு;[3] தகவலாளிகளின் எண் 15.

1 குழந்தை பிறக்க வேண்டும் என வேண்டியவர் 6 (இருவர் ஆண் குழந்தை பிறக்க வேண்டினர்)
2 நோய் நீக்கும் கருதி வேண்டியவர் - 4.
3 குடும்ப விருத்திக்காக என்றவர் - 1
4 ஊமைக் குழந்தை பேச வேண்டும்[4] என வேண்டியவர் - 1.
5 மனக்கவலை தீரவேண்டியவர் - 2.
6 வாணிகம் பெருக வேண்டியவர் - 1.

மாவட்டவாரியாகப் பார்த்தால்

1 இராமநாதபுர மாவட்டம் — 6
2 திருநெல்வேலி மாவட்டம் 5
3 திருச்சி மாவட்டம் — 1
4 தஞ்சை மாவட்டம் — 1
5 மதுரை மாவட்டம் — 1
6 கன்னியாகுமரி மாவட்டம் — 1

இவருள் இராமநாதபுரம் மாவட்டத்தைச் சார்ந்தவர் தம் குடும்பத்தோடு முடி இறக்கு கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. பலன் கிடைத்ததா?' என்ற வினாவிற்கு அனைவரும் 'ஆம்' என்றே பதிலளித்தனர். சிலர், முருகன் கனவில் காட்சி கொடுத்தார் என்கின்றனர்.

கடந்த ஓர் ஆண்டில் முடிகாணிக்கையின் மூலம் இக்கோயிலுக்குக் கிடைத்த வருமானம் ரூபா 1, 36, 222, மொட்டை போடுகிறவர் ரூபா 1.25 கோயிலுக்குச் செலுத்துகின்றனர். மொட்டை போடுமிடத்தில் உரிமம் (License) பெற்ற சவரத் தொழிலாளர் உள்ளனர்.

2 காவடி தோன்றிய வரலாறு

''கா'' என்ற சொல்லைக் காவடி என்ற பொருளில் திருவள்ளுவர் பயன்படுத்தி யுள்ளார்.[5] ''நெடுந்தூரம் வழி நடந்து கோயிலுக்கு வரும் பக்தர்கள் ஆண்டவன்பூசைக்கானபொருட்களையும் தம் தேவைக்கான பொருட்களையும் தனித் தனியாகக் கட்டி ஒரு தடியின் உதவி கொண்டு தோளின் இருபுறங்களிலும் தொங்க விட்டுச் சுமந்து வந்திருக்கக்கூடும். இதுவே காவடியின் தோற்றம் என்கிறார் அன்ன காமு.[6] காவடியின் முன்னோடி அன்னக்காவடியாகும். இப்பொழுது நடைமுறையிலுள்ள காவடியை வேடிக்கைக்காவடி என்பர்.[7]

**காவடியும் புராண வரலாறும்**

காவடி பற்றிப் பழனித் தலவரலாறு பின் வருமாறு கூறுகிறது:

''பழனிமலையும் இடும்பன்மலையும் சிவகிரி, சக்திகிரி எனக்கயிலாயத்திலிருந்தன. அவற்றைச் சிவன் அகத்தியருக்குக் கொடுக்க அவைகளைப் பொதிகைக்குக் கொண்டு போக நினைத்து அவர் இடும்பாசுரனுக்கு ஆணையிட அவைகளைக் கொண்டு போகும் வழியில் களைப்படைந்து இப்போதிருக்கும் இடத்தில் இடும்பன் இறக்கி வைக்க ------- சிவகிரியின் மீது முருகன் தோன்ற அசுரனுக்கும் இளஞ்சேய்க்கும் போர் நிகழ்ந்தது. அசுரன் உயிர் நீப்ப இடும்பியின் (இடும்பன்மனைவி) முறையீட்டால் உயிர் மீண்டும் பெறவும், அவன் பெற்ற இருவரத்தால் ஆண்டவன் மலையில் இடும்பன் சந்நிதி என்ற இடத்தில் வாயில் காவலனாக ஒரு இடம் பெற்றுத் தான் இருமலைகளையும் எடுத்து வந்தது போன்று காவடியுடன் தமது பிரார்த்தனைகளைக் கொண்டுவரும் அடியார்கள் முருகன் அருள் பெற வேண்டு மென்ற பிரார்த்தனையும் கைவரப் பெற்றான்.''[8]

**காவடியின் வகைகள்:**

காவடியின் தண்டின் இரு புறங்களிலும் கட்டப்படும் பொருளைக் கொண்டு அக்காவடி பெயர் பெறுகிறது. காட்டாக, பால்கட்டப்படுமானால் 'பால்காவடி' எனப்படும். பன்னீர்க்காவடி புஷ்பக்காவடி, இளநீர்க்காவடி, வேல்காவடி, சர்க்கரைக்காவடி, சாம்பிராணிக்காவடி, மச்சக்காவடி, சர்ப்பக்காவடி எனப் பல பெயர்கள் பெறும்.

**இளநீர்க்காவடி**

இக்காவடி மட்டும் பழமையான தோற்றம் கொண்டு விளங்குகிறது. கம்பு அல்லது பனைமட்டையைக் காவடித் தண்டாகக் கொண்டு இருபுறங்களிலும் இளநீர்க்காய்களைக் கட்டிக்கொண்டு மேளதாளங்களின்றி 'வேல், வேல், வேல், வேல்' என்று கூவிக் கொண்டு வருகின்றனர். வைகாசி விசாகத்திருநாளில் இத்தகைய காவடிகள் ஏராளம் வருகின்றன. இவ்விள நீர் முருகன் அபிடேகத்திற்குப் பயன் படுகின்றது.

**மச்சக்காவடி:**

இக்காவடி வைகாசி விசாகத்திருவிழாவில் விரல் விட்டு எண்ணக்கூடிய அளவிலேயே வருகின்றன. கடந்த ஆண்டில் இரண்டு காவடிகளே வந்தன .இக்காவடி பற்றித் திருநெல்வேலிக் கெசட்டுக் கூறுவதாவது.

''பழைய சோற்றினை இக்கடவுளுக்குப் படைக்கும்
போது, ஆவிபறக்கும் சுடுசோருக மாறுகிறது.
பொரித்து உப்பிடப்பட்ட மீன்கள் மீண்டும்
உயிர் பெற்றுக் கடலில் குதிக்கின்றன.''[9]

மச்சக் காவடி யொன்றை ஆய்வாளர் கடந்த விசாகத் திரு விழா வன்று கண்டு பின்பற்றிச் சென்ருர். கடலில் இடுப்பளவு ஆழத்தில் இறங்கி நின்று காவடித் தண்டில் காவித்துணியால் பொதியப்பட்ட மண்சட்டியை எடுத்துத் துணியை அவிழ்த்து சட்டியைத் தலைக்கு மேலாகத் தூக்கி ஆட்டும் போது முக்கால் அடி நீள முள்ள மீன் கடலில் துள்ளி விழுவதைக் கண்டார்.

'மீனைக்கறி சமைத்துக்கொண்டுவருவார்களா?' என திருசுப்பையா (காவடிகட்டுபவர்) விடம்வினவிய போது அவர் கூறியதாவது:

> ''மீனை மூன்று இடங்களில் லேசாக வெட்டி உப்பிட்டு சட்டியில் மஞ்சள் தண்ணீரில் போட்டுக் காவடித்தண்டில் கட்டிக் கொண்டுவருவர். பக்தியினுல் மீன்கள் உயிர் பெறுகின்றன''[10].

அருகிலிருந்த ஒருவர், (பெயர் குறிப்பிடவிரும்பவில்லை) ''மீனை வெட்டும் போது கத்தியால் பாவனையாகவே (காயப்படுத்தாமல்) வெட்டுவர்'' என்ருர்[11].

**சர்ப்பக்காவடி**

நல்லபாம்பினைக் காவடியில் கட்டிக்கொண்டுவந்து காணிக்கை செலுத்துவது 'சர்ப்பக்காவடி' எனப்பெறும். ''பாம்பு தீமைகளைக் குறிப்பிடும், மும்மலங்களுள் ஒன்றைக் குறிப்பிடும்'' என்கிருர் குளோதி[12]. இத்தகைய காவடி எடுப்பவரைப்பேட்டி காண இயலவில்லை. ஆயினும் இக்காவடிபற்றியறிந்த நீலகண்டத் தேவர் கூறியதாவது:

> ''சர்ப்பக் காவடி எடுப்பவர் கடும் விரதமிருப்பார். காட்டினுள் (ஊருக்கு வெளியே) தங்கி ஆறுநாட்கள் உண வருந்தாமல் முருகனை வேண்டி உருகிநிற்பார். ஆரும்நாள் அவர்கள் கனவில் முருகன் தோன்றி ஓர் இடத்தைக் குறிப்பிட்டு அவ்விடத்திலுள்ள பாம்பைக் கொண்டு வருமாறு கூறுவார். விரதமிருப்பவர் தாரை தப்படை ஒலிமுழங்க அவ்விடம் சென்று பச்சை மட்கலத்துள் பாம்பினை அடைத்துக் (பாம்பு தானுகவே வெளியேவந்து மட்கலத்துள் புகும் என்பர்) காவடியில் கட்டிக் கொண்டு வருவர். வள்ளியம்மன் குகை அருகில் மட்கலத்தைத் திறந்து விடுவர். பாம்பு வெளியேறி ஓடும்''[13]

இக்காவடி அரிதாகவே (ஆண்டிற்கு ஒன்று அல்லது இரண்டு) வருகின்றது.

காவடி கட்டுமிடம்

ஆத்தூரில் (இவ்வூருக்குப்பதினைந்து கி.மீ. வடக்கே தண் பொருநையாற்றின் கரையில் உள்ளது) காவடி கட்டுதலையேசிறப் பாகக்கருதுகின்றனர். வரும்வழியில் சண்முகபுரத்தருகே உதய முறைக்காரிக்கு முருகன் காட்சிகொடுத்த இடத்தில் வழிபட்டு வருகின்றனர். தண்பொருநைக்கரையின் குறிப்பிட்ட துறையில் காவடிகட்டுகின்றனர். இத்துறை பற்றித் திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்கம் கூறும் செய்தியின் சுருக்கம் வருமாறு

> ''வேலன் என்னும் பறையன் தண்பொருநையில் நீராடும் போது முதிய அந்தணர் ஒருவர் நீரில் தவறிவிழுந்து தத் தளித்தார். தன்னைக் காப்பாற்றுமாறு வேலனை வேண்டினர். வேலன் தான் பறையன் என்றும் அதனால் அந்தணரைத் தொடக்கூடா தென்றும் கூறினன். அந் தணரோ, 'நீ முருகன் திருப்பெயரைக் கூறிக் கொண் டிருப்பதால் தொடலாம்' என்றார். வேலன் அந்தணரைக் கரையிலேற்றி அவர்காலில் விழுந்தான். அந்தணர் நின்ற விடத்தில் செந்திலாண்டவன் மயில் வாகனத்தில் காட்சி கொடுத்தார். தன் சந்நிதிக்கு வருமாறு பணித்தார். வேலன் செந்தூர் சென்றான். அங்குவாழ்ந்த அந்தணர் அவனை விரட்டினர். அப்போது மூலஸ்தானத்திலிருந்து 'ஓம்' என்ற ஒலியெழுந்தது. அந்தணர் அவனை அனுமதித் தனர்''[14].

இக்கதை உளவியல் அடிப்படையி லமைந்தது என்பர் டாக்டர் ஹண்டு[15].

திருச்செந்தூரில் காவடிகட்டுவதற்கு இரண்டு இடங்கள் குறிப்பிடப் பட்டுள்ளன. ஒன்று ஊருக்கு வெளியே (மேற்கே தெப்பக்குளக் கரையிலுள்ள முருகாகோயில்). இங்குக் காவடி கட்டுபவர், ஊரினை வலம்வந்து கோயிலுக்குச் செல்கின்றனர். ஏனைய இடம் தூண்டுகை விநாயகர்கோயில். இங்குக் கட்டுபவர் முதற் சுற்றுலையாகிய கிரிவீதியை வலம்வந்து இரண்டாம் சுற்றுலையையும் சுற்றி சீபலி மண்டபத்தில் காவடியை இறக்கி வைக்கின்றனர்.

### காவடி கட்டும் முறை

காவடியெடுப்பவர் ஆறுநாட்கள் வசதிக்கேற்ப நோன்பு கொள்கின்றனர். சிலர் உண்ணு நோன்பு கொள்கின்றனர். சிலர் ஒரு நாளைக்கு ஒரு பொழுதுமட்டும் பச்சரிசிச் சோற்றினை உண்டு விரதமிருப்பர். பால்காவடியெடுப்பவர் விரத மிருக்கும் காலத்தில் பாலினைப்பருகுவதில்லை. ஏழாம்நாள் காலையில் காவடியிலுள்ள வேலுக்குப் பூசைசெய்து இரு சிறிய செம்புகளில் நேர்ந்த பொருளினை நிரப்பிக் (பால், பன்னீர், சாம்பிராணி போன்றவை) காவித்துணியால் பொதிந்து காவடித் தண்டின் இருபுறங்களிலும் கட்டி சங்கும் சேகண்டியும் ஒலிக்கத் தோளில் தூக்கிவைத்துச் சிந்துப் பாட்டுப் (இக்காலத்தில் திரைப்படப்பாடல்பாடப் படுகின்றன) பாடி ஆடிக்கொண்டே கோயிலினுள் செல்கின்றனர். காவடியெடுப்பவர் காவியாடை அணிவர். ''காவியுடுப்பது தாங்கள் அக்கடவுளின் அடியார்கள் என்று தெரிவதற்காகவேயாகும்'' என்கிறார் திரு செந்துறை முத்து[16].

### காவடி வருமானம்

இக்கோயிலுக்குக் காவடியினால் வரும் வருமானம் மிகக் குறைவான அளவேயாகும் கடந்த ஆண்டில் (1-7-77-30-6-78) காவடிக்காணிக்கை ரூ 2013 மட்டுமே[17]- மச்சக்காவடி, சர்ப்பக் காவடிகட்குக் கூடுதலாகக் கட்டணம் வசூலிக்கின்றனர். ஏனைய காவடிகட்குக் காவடியொன்றுக்கு ரூ2 திருப்பணிக் கட்டணமாகவும் ரூ 3/- தேவதானக் கட்டணமாகவும் வசூலிக்கின்றனர்.

## 3 பால் குடம்

காவடி யெடுப்பவர் நோன்பு கொள்வது போன்றே பால் குடமெடுப்பவர்களும் நோன்பு கொள்கின்றனர். காவடி கட்டுவது போன்றே பால் குடமும் கட்டுகின்றனர். காவடி கட்டுமிடங்களே பால் குடம் கட்டுமிடமாகவும் அமைகின்றன. காவடி போன்றே மேளதாளம், சங்கு சேகண்டி, வழிநடைச் சிந்துஆகிய ஒலிகளோடு கோயிலுள் செல்கின்றனர்.

பால் குடங்கள் எடுப்பவரில் பெரும்பாலோர் உதயமார்த்தாண்ட அபிடேகம் அல்லது உச்சிக் கால அபிடேகத்திற்கே பால் வழங்குகின்றனர். பெரும்பாலான பாற் குடங்கள் இரண்டு லிட்டர் பால் கொள்ளுமளவே உள்ளன.

தை அமாவாசை யன்று வாணிகர்கள் பெருங் கூட்டமாகப் பால் குடங்கள் எடுக்கின்றனர்.

### எடுக்கக் காரணம்

பெரும் பாலானவர் நோய் நீக்கம் கருதியே பால் குடம் எடுக்கின்றனர். பலர் இளம் வயதில் நேர்ந்ததை பல ஆண்டுகள் கழித்து திருமண நாள் குறிக்கு முன் முருகன் கடனைச் செலுத்தி விட வேண்டுமென எண்ணி நிறைவேற்றுகின்றனர்.

### வருமானம்

கடந்த ஆண்டில் பால் குடம் மூலம் இக்கோயிலுக்குக் கிடைத்த பணம் ரூபா 1063/-[18] பால் குடம் ஒன்றுக்குத் திருப்பணிக் கட்டணமாக 50 காசுகளும் தேவதானக் கட்டணமாக ரூ 1-00 உம் வசூலிக்கின்றனர்.

## 4 கால் நடைகள் அளித்தல்

ஆடுகள் (வெள்ளாடு, செம்மறியாடு), பசுக்கள். எருமைகள், மான், குதிரை, யானை ஆகியவற்றைக் காணிக்கையாகச் செலுத்துகின்றனர். கால் நடை காணிக்கையாகக் கொடுத்தவருள் பதினைந்து பேர்களை ஆய்வாளர் பேட்டி கண்டறிந்தார்.[19]

### கால் நடை கொடுக்கக் காரணம்

1. ஆண் குழந்தை தங்க வில்லை என்பதால். I.
2. தொழு விருத்திக்காக. II;
3. கன்று ஈனுவதற்காக. I.
4. தலையீத்து தங்காததால். I.
5, முருகன் கனவில் வந்து கேட்டதால். I.

முருகன் கனவில் வந்து கேட்டதாகக் கூறிய அரியத் தேவர் (கீழ மணக்கரை, முகவை மாவட்டம்) கூறிய செய்தியாவது:

> ''25 ஆண்டுகளாக எனக்குக் குழந்தையில்லை. முருகன் கனவில் தோன்றி இனி உனக்குக் குழந்தை பிறவாது. எனக்கு ஓர் ஆடு வேண்டும் என்று கேட்டதால் இவ்வெள்ளாட்டுக் கிடாயைக் கொடுக்கிறேன்.''

இவர் முதுகுளத்தூர் மேகலா ஸ்டுடியோவில் மனைவி மற்றும் வெள்ளாட்டுடன் நிழற் படமெடுத்து சட்டத்துள் அடைத்துக் கொடுத்துள்ளார்.[20]

### பறவைகள் அளித்தல்

சேவல், மயில் ஆகிய பறவைகள் காணிக்கையாக வருகின்றன. நோயிலிருந்து முருகன் காத்ததால் வழங்குவதாகப் பெரும்

பாலோர் கூறினர். திரு விழாக் காலத்தும் மாதக் கடைசி வெள்ளிக் கிழமைகளிலும் ஏராளமான சேவல்கள் காணிக்கையாக வருகின்றன.

### வருமானம்

கடந்த ஆண்டில் கால் நடை மற்றும் பறவைகள் விற்பனை மூலம் தேவதானத்திற்குக் கிடைத்த வருமானம் ரூ 1, 77, 740 என்கிறார் திரு கைலாசம்.[21] விழா முடிந்தவுடன் மறுநாளிலே பந்தல் மண்டப முகப்பில் ஏலம் கூறி விற்கின்றனர். கி. பி. 1978 ஆம் ஆண்டிற்கு முன் மாடுகளை ஏலத்தில் வாங்கியவர்கள் கேரளாவிற்கு (இறைச்சிக்காக) அனுப்பி வந்தனர். கடந்த ஆண்டில் காஞ்சிப் பெரியவர் வேண்டுகோளுக்கிணங்கப் பசுக்களை வாங்குபவர் (வளர்ப்பதற்காக வாங்குவதாகத்) தாசில்தாரிடம் சான்றிதழ் பெற்று வந்து ஏலம் கேட்டு வாங்க வேண்டுமெனத் தேவதானம் விதி வகுத்துள்ளது.

### 5 உண்டியல்

உண்டியலில் நாணயங்களாகவே பெரும்பாலோர் காணிக்கை செலுத்துகின்றனர். நோயுற்றோர் நோயுற்ற உடலுறுப்பைப் போன்று வெள்ளியிலும் தங்கத்திலும் செய்து செலுத்துகின்றனர். வெள்ளி மீன்கள் (மீன் பிடிக்கச் செல்வோரிடுவன) வெள்ளிக் கப்பல்கள் (புதிதாகப் படகு கட்டியவர் கடலில் விடு முன்) செலுத்துகின்றனர். மூக்குத்தி, கம்மல், வளையல், காதணி, தாலி போன்றவையும் போடப்படுகின்றன. கடந்தஆண்டில் உண்டியல் மூலம் வருமானம் ரூ 11, 19, 845 — 31. என்கிறார் திரு கைலாசம்.[22]

வெள்ளி வேல்கள் ஏராளமாக உண்டியலில் போடப்படுகின்றன. நோய் நீங்கவும் குடும்பம் செழிக்கவுமே இவ்வாறு உண்டியலில் காணிக்கை செலுத்துகின்றனர்.

### 6 விளை பொருட்கள் அளித்தல்

சண்முக விலாச மண்டபத்தில் நாள் தோறும் மக்கள் தங்கள் வயலில் விளைந்த நெல், நவதானியங்கள் தேங்காய், புளி, பருத்தி' பழவகைகள், காய் வகைகளையும் தாங்கள் அறுவடை செய்து பலனை அனுபவிக்கு முன் காணிக்கையாகச் செலுத்துகின்றனர்.

இவ்வாறு செலுத்தப்படும் பொருட்களைச் சண்முக விலாசத்திலேயே இரவில் ஏலம் விடுகின்றனர். 'உபயம்' என்ற பெயரில் கடந்த ஆண்டில் தேவ தானம் பெற்ற வருமானம் ரூ15, 465 —69 என்கிறார் திரு கைலாசம்.

## 7. பணவிடை (money order)

மாதத்தின் அனைத்துநாட்களிலும் பணவிடைகள் வருகின்றன. இதற்காகத் தனி எழுத்தர் பதிவேடுகளில் நாணய மதிப்பு வாரியாகப் பதிந்து வருகிறார். மாதத்தின் முதல் வாரத்தில் ஊதியம் பெற்றவுடன் ஒரு ரூபா அனுப்புவர் எண்ணிக்கை மிகுதியாக உள்ளது. 4.12.78 அன்று வந்த பணவிடையின் மதிப்பு ரூ 534—90 நாணய மதிப்பு வாரியாகப் பிரித்தால் பின் வருமாறு அமையும்.[4]

*1—00 × 160 = 160—00; 1.05 × 1 = 1.05; 1.25 × 7 = 8.75 1.50 × 1 = 1.50; 2 × 27 = 54; 2.25 × 4 = 9.00, 2.50 × 1 2 50 3.00 × 7 = 21—00; 3.10 × 1 = 3—10, 5.00 × 12 = 60—00, 6.00 × 2 12—00; 10.00 × 2 = 20—00; 11.00 × 3 = 33—00; 4 00 × 1 = 4—00; 15 00 × 2 = 30—00; 20.00 × 2 = 40—00; 25.00 × 3 = 75—00. ஆக 534—90*

## 8 துலா பாரம்

காணிக்கையாக நேர்ந்தவர் தன் உடலின் எடைக்கு எடை வெல்லம், பழம், நாணயங்கள் முதலியவற்றைக் காணிக்கை செலுத்துவது 'துலாபாரம்' எனப்படும். ஓராண்டில் அரிதாக இது நிகழ்கிறது. குருவாயூரில் நாள் வழிபாட்டில் இவ்வாறு செலுத்துவோர் தொகைமிகுதி. இங்கும் நிறுப்பதற்குரிய தராசினை ஓரிடத்தில் நிலையாக வைத்தால் இத்தகைய காணிக்கை பெருக வாய்ப்பு உண்டு.

## 9. சோறு வழங்குதல்

வயிற்றுவலி போன்ற நோயிலிருந்து விடுதலை கிடைத்தால் இக்கோயிலில் விற்கப்படும் சோற்றுக் கட்டிகளில் குறிப்பிட்ட அளவு கட்டிகள் விலைக்கு வாங்கி ஏழைகட்கு அன்னதானமாக வழங்குகின்றனர். சிலர் குறிப்பிட்ட எண்ணிக்கையுடைய துறவிகளுக்கு இலையிட்டு அரிசி, காய்கறி, தக்கிணை படைக்கின்றனர். இதைப் பெறுவதற்காகக் காவியுடையில் திரியும் பண்டாரங்கள் பரதேசிகள் கூட்டம் கூட்டமாக உள்ளனர்.

ஞாயிற்றுக் கிழமை தோறும் நண்பகலில் இவ்வூர்க் கீழரத வீதியிலுள்ள கோடீச்வரி அறக்கட்டளையினர் நூறு சோற்றுக் கட்டிகளை ஏழைகளுக்கு வழங்கி வருகின்றனர்.[25] உணவு விடுதிகளில்லாத காலத்தில் இத்தகைய அன்னம் பாலிப்புக் கட்டளைகள் வெளியூரிலிருந்து வருபவர்க்கு மிகவும் உதவின.

## 10. பிறவகை

உண்டியல் உதவியாளர் அருணாசலம் கூறிய செய்தியாவது:[26] ''சில நாட்களில் (அரிதாக) ஒலிப்பதிவுக் கருவிகள் (Tape-Recorder) காணிக்கையாக வருவதுண்டு. தொழிற் சாலைகளின் பங்குகள் (Share) அளிக்கப்படுவதுண்டு. லாட்டரிச் சீட்டுகள் கொடுக்கப்படுவதுண்டு. திருப்பணி உண்டியலில் வைரக்கற்கள், முத்துக்கள் முதலியனவும் விழுவதுண்டு. மரத்தடிகளைக் காணிக்கையாகச் சில மரக்கடைகாரர் கொடுக்கின்றனர். ஒரு தடவை 2500 செங்கல்கள் வந்தன.''

இதிலிருந்து மக்கள் தங்கள் தொழில் விருத்திக்காகத் தாங்கள் விரும்பும் பொருட்களையெல்லாம் வழங்குவதை யறிகிறோம். இத் திருக்கோயில் விசேஷங்களின் நாட்குறிப்பிலிருந்து அறியலாகும் காணிக்கைகள் வருமாறு;[27]

1 காதுகுத்துக் கட்டணம் ரூ 0.75. (கடந்த ஆண்டு வருமானம் ரூ 12,910 — 50.)

2 காசிகங்கை அபிடேகம். கட்டணம் ரூ 0.25

3 பாக்கு வைத்தல். கட்டணம் ரூ 1.00.

4 திருமணம், பூணூல் திருமணம், சஷ்டியப்த பூர்த்தி சதாபிடேகம் ஆகியவை நடத்த அனுமதிக் கட்டணம் ரூ5—00.

5 பன்னீர்ப் பாட்டில் 1 க்கு ரூ 2—00 (பன்னீர் விலை ரூ 1.00 பாட்டிலைத் திருப்பியளித்தால் ரூ 0—75 பெறலாம்) தேவதானமே பன்னீர் தயாரிக்கிறது. இதற்காக ரோஜாச் செடிகள் கோயில் நந்த வனங்களில் வளர்க்கப் படுகின்றன

6 நூல் வழங்கல் — கந்தர் சஷ்டிக் கவசம், கந்தர் கலிவெண்பா முதலிய நூல்களைத் தங்கள் செலவில் அச்சிட்டு இலவசமாக வழங்குவதற்காகத் தேவதானத்திடம் ஒப்படைக்கின்றனர். நகைக் கண்காணிப்பாளர் கூறிய செய்தியாவது:[28]

''வெள்ளியினாலும் வேறு உலோகங்களாலும் செய்யப்பட்ட விளக்குகள் மற்றும் பாத்திரங்கள் காணிக்கையாக வருகின்றன. பெரும்பாலோர் பாத்திரங்களில் தம் பெயரைக் குறிப்பிடுகின்றனர். கடந்த ஆண்டில் ஒரு நிறுவனத்தினர் ரூ 35,000 பெறுமானமுள்ள வெள்ளிப் பாத்திரங்களை வழங்கினர். அணிகலன்கள் அரிதாக வழங்கப் படுகின்றன.''

பாத்திரங்கள் காணிக்கையில் கி. பி. 1803 இல் திருநெல்வேலிக் கலெக்டராயிருந்த எஸ். ஆர் லூசிங்டன் கொடுத்த வெள்ளிக் குட்த்தை இன்னும் பேணி வருகின்றனர்.[29] பழுது பட்ட பொருட்

களை அதன் அருமை கருதி உருக்காமலிருத்தல் நல்லது. தங்க மயில், வெள்ளிக் குடம் போன்ற பொருட்களைக் காட்சியில் வைத்தால் இன்னும் ஏராளமான மக்கள் காணிக்கை கொடுப்பர்.

### குழல் விளக்குகள் வழங்குதல்

தங்கள் நிறுவனங்களின் பெயரையும் ஊரையும் விளம்பரம் செய்து குழல் விளக்குகளைப் பலர் வழங்குகின்றனர்.

### மாவிளக்கு எடுத்தல்:

தேனையும் தினைமாவினையும் பிசைந்து உருண்டையாக்கி மேலே குழியாக்கி நெய்ஊற்றித் திரியிட்டுக் கொளுத்தி வைக்கின்றனர். தங்கக் கொடிமரத்தருகே இத்தகைய மாவிளக்குக் காணிக்கை எடுப்பவரைக் காணலாம். நோயுற்ற உறுப்பின் மேலே இத்தகைய மாவிளக்கினை (இலையில்) வைத்து இரு கைகளால் தாங்கிக் கொள்கின்றனர். நோய் நீக்கம் கருதியே இவ்வாறு செய்கின்றனர்.

### யானை வழங்குதல்

தண்டுப்பத்துத் திரு எம். ஐயாச்சாமி நாடார் கி. பி. 1969 இல் பிடி (பெண் யானை) ஒன்றினை வழங்கினர்.

# ஒன்பதாம் இயல்

## வழிபாடு தடைப்பட்ட ஆண்டுகள்

இக்கோயிலில் கி. பி. 1649 ஆம் ஆண்டிலிருந்து கி. பி. 1651 ஆம் ஆண்டு வரை நாள் வழிபாடும் திருவிழாக்களும் இல்லாமல் போயின. இக் காலத்தைப் பற்றித் தலபுராணம் பாடிய வென்றி மாலைக் கவிராயர் பாடியுள்ள பாடலின் அடிகள் வருமாறு:

> "சந்திரனில்லாத வானம் போலவும் சைவ நெறியில்லா வையகம் போலவும், ஐந்தருவுடைய இந்திரனில்லாத அண்டர்பதி போலவும்"[1]

மேற்சுண்ட பாடலில் கோயிலில் திருவுருவங்கள் இல்லாத நிலையைக் குறிப்பிடுகிறார்.

**வழிபாடு தடைப்படக் காரணம்:**

உலாந்தர் எனப்படும் டச்சுக்காரர் இக்கோயிலின் சிலைகளைக் கி. பி. 1649 ஆம் ஆண்டு கவர்ந்து சென்றனர். கி. பி. 1651 ஆம் ஆண்டு சிலைகளை மீண்டும் பெற்றதால் வழிபாடு மீண்டும் தொடங்கியது[2]

**நிகழ்ச்சி பற்றிக் கூறும் நூல்கள்:**

இந் நிகழ்ச்சி பற்றிப் பல நூல்கள் குறிப்பிட்டாலும் குறிப்பிடத்தக்க ஆறு நூல்கள் மட்டும் ஈண்டு எடுத்துக் கொள்ளப் படுகின்றன.[3] அந்நூல்களின் பெயர்களாவன:

1. திருநெல்வேலிக் கெசட்டு
2. திருச்செந்தூர்
3. திருச்செந்தூர் வள்ளி மணாளன் கோயில் வரலாறு
4. செந்திலாண்டவன் மகிமை
5. திருச்செந்தூர்க் கோயிலும் செந்திக் காத்தான் செட்டிக் குடும்ப வரலாறும்.
6. க. அ. நீலகண்ட சாத்திரியின் கட்டுரை (கலைமகள் தொகுதி 16)

சிலைகளைக் கவர்ந்து சென்ற செய்திகள் 'அ' பிரிவிலும் மீட்டுக் கொண்டு வந்த செய்திகள் 'ஆ' பிரிவிலும் ஆயப்படுகின்றன.

### அ. பிரிவு

**சிலைகளைக் கவர்ந்து சென்ற செய்திகள்:**

**1 திருநெல்வேலிக் கெசட்டு கூறும் செய்தி**

கி. பி. 1919 இல் வெளியான கெசட்டு இதழில் கீழ்க்காணும் செய்தி காணப்படுகிறது.[4]

"முந்நூறு ஆண்டுகளுக்கு முன் கடற் கொள்ளைக் காரரான உசிலம் படையினர் திருச்செந்தூரில் தங்கிக் கோயிலின் சிலையைத்தங்கத்தால் செய்யப்பட்டதெனக் கருதி கவர்ந்து சென்றனர். உசிலம்படை என்பது பொருள் விளங்காத சொல். கதை கூறுபவர் இச்சொல்லால் முகமதியரையும் பிரெஞ்சுக் காரரையும் குறிப்பிடுகின்றனர். கி. பி 1785 இல் பெர்லினில் வெளியிடப்பட்ட இந்தியாவின் நிலநூல் வரலாறு' என்னும் நூலின் ஆசிரியர் எம்.ரென்னல் என்பார் திருச்செந்தூரில் வழி வழியாகக் கூறப்படும் கதை[5]யைப் போன்று எழுதியுள்ளார். இதைத் தாம் ஒரு டச்சு மாலுமியிடமிருந்து அறிந்ததாகக் கூறுகிறார். அம்மாலுமி, கி. பி. 1648 இல் டச்சுக்காரர் திருச்செந்தூர் கோயிலில் தங்கி அக்கோயிலை அளிக்க முழு மூச்சுடன் முயன்றதாகவும், அம் முயற்சியில் ஓரளவே வென்றதாகவும்' கூறியுள்ளார். சிலை கவரப் பட்டதை அவர்கள் வெற்றியின் ஒரு பகுதியாகக் கொள்ளலாம்."

2 திருச்செந்தூர்

திருச்செந்தூர் பற்றி ஆங்கிலத்தில் எழுதிய திருஜே.எம் சோம சுந்தரம் தம் முதற் பதிப்பு நூலில் திருநெல்வேலிக்கெசட்டு கூறிய செய்தியை அப்படியே எடுத்தாண்டுள்ளார்.[6]

> ரென்னல் இவ்விடத்தைத் தூத்துக்குடி என்று அழைத்தாலும் வரைபடங்களிலிருந்து இவ்விடம் திருச்செந்தூரே என்பது புலனாகிறது"

என்றும் குறிப்பிட்டுள்ளார். இரண்டாம் பதிப்பில் க. அ. நீலகண்ட சாத்திரி எழுதிய செய்திகட்கு முதலிடம் கொடுத்து கெசட்டு கூறும் செய்திக்கு இரண்டாமிடம் கொடுத்துள்ளார்.[7]

3 திருச்செந்தூர். வ. ம. கோ. வரலாறு

இவரும் வழி வழியாகக் கூறப்படும் கதையையே எழுதியுள்ளார். "ஆறுமுகப் பெருமானது திருவுருவம் அவர்களது உள்ளத்தைக் கவர்ந்து விட்டதால், அவ்வுருவத்துக்குத் தீங்கு ஒன்றும் இழையாதபடி தங்கள் மரக்கலத்தில் ஏற்றிக் கொண்டு புறப்பட்டனர்" என்கிறார்.[8] அனைத்துச் சிலைகளையும் கவர்ந்ததாகக் கூறவில்லை.

4 செந்திலாண்டவன் மகிமை

இந்நூலின் ஆசிரியர் திரு டி. எச். விவேகானந்தம் வழி வழிக் கதையையே எழுதியுள்ளார். ஆறுமுக நயினார் திருவுருவத்தை வடக்கயிற்றில் கட்டிக் கடலினுள் இறக்கினார். மழை நின்றது. புயல் மட்டுப்பட்டது. ஆறுமுக நயினாரை எடுக்க முயன்றனர். நகர்ந்தபாடில்லை. வடக்கயிற்றை அறுத்துவிட்டுப் போய் விட்டனர் என்கிறார்.[9]

5 தி. கோ. செ. செ. கு. வ

திருச்செந்தூர்க் கோயிலும் செந்திக் காத்தான் செட்டிக் குடும்ப வரலாறும் என்னும் ஏட்டின் ஆசிரியர் கூறும் செய்தி யாவது:

''4960 சிவசங்க வருடம் (கி. பி. 1760 - இந்நூலில் குறிப் பிடப் படும் ஆண்டுகள் தவறானவை என்பதை நூலின் முன்னுரை யால் அறியலாம்) நவாப் கஜினிமுகமது டச்சுப் பாய்க்கப்பல்மூலம் வந்து ஐம்பொன்னால் செய்யப்பட்ட ஆறுமுக நயினாரைக் கொள்ளை அடித்துப் பாய்க் கப்பலில் சென்றான்.''[10]

பாய்மரம் ஒடிந்ததால் படிமத்தைக் கடலில் போட்டதாகக் கூறுகிறார்.

6. க. அ. நீலகண்ட சாத்திரி

'திருமலை நாயக்கரும் ஐரோப்பியரும்' என்ற தலைப்பில் கலை மகளில் எழுதிய கட்டுரையில் கூறுவதாவது:''

> ''கி. பி. 1645 இல் உலாந்தர் காயல் பட்டினத்தில் தங்கினர். பரங்கியர் (போர்ச்சு கீசியர்) உலாந்தர் தோணி களைப் பிடித்துச் சரக்குகளை அபகரித்தனர். நாயக்கரும் உலாந்தர்களைக் காயல் பட்டினத்தினின்றும் ஒழித்து விடும் படி கட்டளையிட்டார். கி. பி. 1648 ஆம் ஆண்டு ஜூன் மீ இலங்கைக்கு ஓடினர்.
>
> கி. பி. 1649 பிப்ரவரியில் 436 ஐரோப்பியர் 180 சிங் களவரோடு 6 ஆம் தேதிமணப்பாரின் (மணப்பாடு இவ்வூரி லிருந்து பத்துக்கல் தொலைவிலுள்ளது) எதிரில் வந்தனர். 8 ஆம் தேதி புறப்பட்டு வீராம் பட்டினத்திற்கும் (இக் கோயிலிலிருந்து கடற்கரையில் ஒரு கல் தொலைவிலுள்ளது) திருச்செந்தூருக்கும் இடையே இறங்கினர். 20 ஆம் டீ திருச்செந்தூர்க் கோயிலில் தங்கினர். 22 ஆம் டீ நாயக் கர் சார்பாகக் காயல் பட்டினத்து மனிதர் வந்து கோயிலை விட்டு காலி செய்ய வேண்டினர். ஊரிலுள்ள ஜனங்கள் 4 யானை 50,60 குதிரை 500 ஆட்களோடு 25 டீ சண் டையிட்டனர். நாயக்கர் பட்டாளத்தில் சுமார் 300 பேர் மாய்ந்தனர். உலாந்தர் படைகளில் மூன்று (சிங்களவர்) பேர் பட்டனர் . . . . 28 ஆம் டீ இலங்கை திரும்ப எண் ணினர். மார்ச் 1 இல் நாயக்கர் நஷ்ட ஈடு செய்தவுடன் கோயிலை ஒரு பங்கமுமின்றித் திரும்பக் கொடுப்பதாகவும் எழுதினார் (டச்சுக் கவர்னர்)புறப்படும் போது கற்சிலையான மூலவிக்கிரக முட்படக் கோயிலிலுள்ள விக்கிரகங்கள் எல் லாவற்றையும் தயக்குச் சேர வேண்டிய பணத்திற்குப் பணயமாகத் தம்முடன் கப்பலில் எடுத்துச் சென்றார்.

## (ஆ) சிலைகளை மீட்டல்

சிலை மீட்ட செய்தி பற்றி இக்கோயிலில் கல் வெட்டொன்று காணப்படுகிறது.

### 1. திருநெல்வேலிக் கெசட்டு

இப்பகுதியை யாண்ட நாயக்கரின் பிரதிநிதியான வடமலையப்ப பிள்ளையன் கடவுள் தம் கனவில் கூறிய படி கடலில் சென்று சிலையை மீட்டினார்.[12] இந்நிகழ்ச்சியை நினைவுபடுத்த வடமலையப்ப மண்டபம்கட்டித் திரு விழாக் காலத்துச் சண்முகரை எழுந்தருளச் செய்தார்.

### 2. திருச் செந்தூர்

ஜே. எம். சோம சுந்தரம் சிலை மீட்ட செய்தி பற்றி முதற் மதிப்பில் திருநெல்வேலிக் கெசட்டு கூறும் செய்தியையும்,[13] இரண்டாம் பதிப்பில் க. அ நீலகண்ட சாத்திரி கூறும் செய்திகளையும் கூறியுள்ளார்.[14] எனவே இவர் கனவுச் செய்தியை விட வரலாற்றுச் செய்திக்குச் சிறப்பிடம் கொடுத்துள்ளாரென அறியலாம்.

### 3. தி. வ. கோ. வ

திருச்செந்தூர் வள்ளி மணாளன் கோயில் வரலாற்று ஆசிரியர் ச. முத்துக் குமார சாமி கூறும் செய்தியின் சாரம் வருமாறு:

> ''வடமலையப்ப பிள்ளையன் குறுக்குத் துறைக் கற்பாறையில் மூலவர் சிலையைச் செதுக்க ஏற்பாடு செய்தார். ஆறுமுக நயினார் (சண்முகர்) படிமத்தையும் செய்தான். (இப்படிமம் இப்போது பாளையங்கோட்டைத் திரிபுராந்தீசுவரர் கோயிலில் உள்ளது). பிள்ளையன் கனவில் ஆறுமுகப் பெருமான் காட்சி தந்தார். அவர் கூறிய படி சிலையை எடுத்தார். முதலில் நடராசர் படிமமும் பின்னர் ஆறுமுக நயினார் படிமமும் அகப்பட்டன.[15]

### 4. செந்திலாண்டவன் மகிமை

ச. முத்துக் குமார சாமி கூறியவாறே கதை எழுதியுள்ளார். ''ஏழாம் திரு விழா முதற் காட்சிக் (சிவப்புச் சாத்தி) கோலத்தில் முன் புறம் முருகனாகவும் பின் புறம் நடராசராகவும் தோன்றுவது கடலிலிருந்து எடுக்கப்பட்ட சம்பவத்தை விளக்குகிறது.'' என்கிறார்.[16]

5. தி. கோ செ. செ. கு. வ.

இந்நூலில் கூறப்பட்ட செய்திகள் எல்லாம் குலசேகரன் பட்டினம் செந்திக் காத்தான் செட்டியைச் சிறப்பிப்பதாகவேயுள்ளன. திருவிதாங்கூர் மகாராசா ஆறுமுக நயினார் விக்கிரகம் வடித்துக் கொடுத்ததாகவும், அதை வண்டியிலேற்றிக் கொண்டு குறுக்குத் துறைக்கு வந்தவுடன் அச்சு முறிந்து விட்டதாகவும், சபதி (படிமம் வார்த்தவர்)க்கு அருள் வந்து முருகன் தான் 16 ஆம் கம்பத்தின் (வதனாரம்பம்) எதிராகக் காத வழி தூரத்தில் உள்ளதாகவும், ஆலந்தலைப் பிச்சைப்பார்னந்தையும்ஆதித்தநாடாரையும்அழைத்துப் போய் எடுக்குமாறு கூறியதாகவும் குறிப்பிடுகிறது. அவ்வாறே ஆலந்தலைப்பிச்சைப் பார்னந்தும் ஆதித்த நாடாரும் சென்று கடலில் கண்டெடுத்தனர் என்கிறார் இந்நூலின் ஆசிரியர் "4962ல் சீவ சங்க வருடம் (கி. பி. 1762) வைகாசி மாதம் மூல நட்சத்திரத்தில் ஆறுமுக நயினாரையும் புதுச்சேரி (நள்ளாறு) நடராசரையும் பிரதிஷ்டை செய்தனர்" என்கிறார்.[17] இவர் குறிப்பிடும் நாளில் இக் கோயிலில் சிறப்பு விழா இல்லை. தை மாதமே புனர் பூச நாளில் விழா நடை பெறுகிறது.

6. க. அ. நீலகண்ட சாத்திரி

"கி. பி. 1650 பிப்ரவரியில் வடமலையப்ப பிள்ளையன் உலாந்தரிடமிருந்து விக்கிரகங்களைத் திரும்ப வாங்கி வர நான்கு மனிதரை இலங்கையிலுள்ள காலி என்னும் ஊருக்கு அனுப்பும்படியாய்க் காயல் பட்டணத்து அதிகாரியான நாராயண முதலியாருக்கு உத்தரவு அனுப்பினார். உலாந்தர் இலட்சம் ரீல் (பணம்) கேட்டனர் பின்னர் அகப்பட்ட விலைக்கு விற்று விட்டு வியாபாரம் தொடங்கினர்.

"கி. பி. 1651 ஜனவரி மீ கடைசியில் விக்கிரகங்களை உலாந்தர் காயல்பட்டினத்திற்கு அனுப்பித்திருச்செந்தூர்க் கோயிலுக்கு மறுபடியும் கொண்டு சேர்த்தார்கள். திருச்செந்தூர்ச் சாசனம் கூறும் கி. பி. 1653 கும்பாபிடேகத் தேதியைக் குறிப்பது போலும்.

உலாந்தர் விக்கிரகங்களைக் கொண்டு போகும் போது புயற் காற்றால் அவை கடலில் மூழ்கினவென்றும் அவை கிடக்குமிடத்தை முருகன், கனவில் வடமலையப்ப பிள்ளையனுக்குக் கூறியதன் பேரில் அவர் போய் அவைகளை மீட்டாரென்றும் உள்ள கதைகளைப் பார்த்தால் நம் நாட்டுச் சரித்திரத்திற்கும் புராணங்களுக்கும் உள்ள சம்பந்தம் ஒருவாறு விளங்கும்."[18]

***சில முடிவுகள்:***

1. உலாந்தர்கட்குச் சிலைகளைக் கொள்ளையிடுவதில் முகமதியர் உதவி செய்திருக்கலாம்.

2. சண்முகர் சிலையில் கடலில் கிடந்ததற்கான அடையாளம் (உப்பு நீரால் அரிக்கப்பட்ட புள்ளிகள்) இருப்பதால் அதை மட்டும் கடலில் எறிந்து விட்டு ஏனைய சிலைகளை இலங்கைக்குக் கொண்டு சென்றிருக்கலாம்.

3. கல் வெட்டில் (காணப்படும் ஆண்டு — கி. பி. 1653 — குடமுழுக்கு நிகழ்த்திய ஆண்டைக் குறிப்பிடலாம்.

4. மூலவர் சிலை கற்சிலையாதலின் அதனை உடைத்திருக்கலாம்

# பத்தாமியல்

*குறிஞ்சிக் கடவுள் கடற்கரையில் அமர்வானேன்?*

'சேயோன் மேய மைவரை உலகம்' என்பது தொல்காப்பியம். குறிஞ்சிக் கடவுளான முருகன் இங்குக் கடற்கரையில் அமர்ந்துள்ளார். மயில் குறிஞ்சிப் பறவை. மயிலின் நீல நிறம் காணப்படுவதால் நீலக் கடலில் எழு பால சூரியனாக முருகனை நினைக்கும் தன்மை நக்கீரர் காலத்திலேயே வந்து விட்டது.

> ''உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
> பலர் புகழ் ஞாயிறு கடற்கண் டாங்கு''[1]

என்கிறார் நக்கீரர்.

பரணர் பாடலில் திருச்செந்தூர், மருதமும் குறிஞ்சியும் மயங்கிய ஊர் என்பதைக் கண்டோம். ''வயலுழவரின் ஓசைக்கு அஞ்சிப் பறந்த மயில், அலையருகே தெய்வம் பொலியும் குன்றினிடத்தே வந்து தங்கியது''[2] என்பதால் சங்க காலத்திலேயே கடற்கரையில் தெய்வமாகிய முருகன் விளங்கும் குன்று இருந்தமை புலனாகும். இதைச் சந்தன மலை (கந்த மாதன பர்வதம்) என்பர்.

கடற்கரையில் முருகனை அமைத்ததற்குப் பிரட்டு குளோதி கூறுவதாவது:

> ''இப்பகுதி அடிக்கடி கடல் கோளுக்கு
> இலக்காகி யிருக்கும். அதைத் தடுக்கும்
> சக்தியுடையவன் பாலனாகிய முருகனே
> (சிவனுக்கு வயதாகிவிட்டது) எனக்
> கருதி யிருக்கலாம்.''

கடலுக்கு அஞ்சியே கங்கைப்பூசை இங்கு நடைபெறுகிறதுஎன்றார்.

''செந்தில் மா மலையுறும் செங்கல்வ ராயன்'' என்பது இராமலிங்கர் திருவாக்கு. எனவே, அலை வாயிலில் அமர்ந்த பிரான் குறிஞ்சிக் கடவுளாகவே கொள்ளப்படுகிறான். இம்மலையிலேயே வள்ளி திருமணம் நடை பெற்றதாகத் தல புராணம் கூறும்.

*சங்க இலக்கியம் கூறும் முருகன் யார்?*

இங்குள்ள முருகனைச் சங்க இலங்கியங்கள் 'சேய்' என்றும் 'நெடுவேள்' என்றும் குறிப்பிடுகின்றன. கோயில் பற்றிய செய்தியில்லை. இவ்வூர்த்தூண்டுகை விநாயகர்கோயில் சிலை கந்து (கட்டுத்தறி) போன்ற அமைப்புடையது. அதையே ஆதியில் முருகனாகக் கருதி வழிபட்டிருக்காலம். வேலினை நட்டுவழிபட்டதை இங்குள்ள அத்திரதேவர் (நி.ப. எண் 9) படிமம் நினைவூட்டுகிறது.

சிலப்பதிகாரம் செப்புவதுபோல் 'வேற்கோட்டம்' (வேலுக்குக் கோயில்) அமைந்திருக்கலாம். மேலும் (பால)சுப்பிரமணியப் படாரர் என்ற பெயர் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டுக் கல்வெட்டி லேயே காணப்படுகிறது. அதற்குமுன் 'அறுமுகச் செல்வேள் அணிதிகழ் கோயிலாக' இருந்திருக்கலாம். அறுமுகச் செவ்வேள் என்னும் பெயர் சிலப்பதிகாரத்தில் உள்ளது. நக்கீரரும் தம் திரு முருகாற்றுப் படையில் அறுமுகனது பெருமையையே பாடியுள்ளார்

தற்போதுள்ள அறுமுகன் சிலை கி.பி. பத்தாம் நூற்றாண்டில் எழுந்தருளும் மூர்த்தியாகத் திருவிதாங்கூர் மன்னரால் வழங்கப் பட்டிருக்கலாம்.

### கோயில் அமைப்பு

இது குகைக்கோயில் என்பதாலும் மலையைக் குடைந்து பெரிய மண்டபங்கள் அமைக்க இடமின்மையாலும் ஆகம முறைப்படி அமையவில்லை. கீழ வாயில் அடைபட்டுள்ளது தெற்குவாயிலே சிறப்பிடம் பெற்றுள்ளது. இராயகோபுரம் அமைப்பதற்கு வாய்ப் பான பாறைகள் மேட்டுநிலமாகிய மேற்குப்புறம் அமைந் திருந்ததால் மேலக்கோபுரம் அங்கு அமைக்கப்பட்டுள்ளது.

அறுமுகப் பெருமானுக்கு எதிரே நாழிக்கிணறு அமைந் திருப்பதுபோல பால சுப்பிரமணியர் சந்நிதிக்கெதிரில் வதனாரம்ப தீர்த்தம் அமைந்துள்ளதும் குறிப்பிடத் தக்கது. பாறைகளிருப் பதால் இங்கு இப்போது நீராடுவாரிலர்.

சீபலிமண்டபம் இரண்டாம் சுற்றாலையில் அமையக் காரண மாயிருந்தவர்கள் போற்றிகள். நாற்பதாண்டு கட்கு முன் இம் மண்டபம் கட்டப்பட்டதும் போற்றிகள் இச்சுற்றாலையில் சீபலியை எழுந்தருளச் செய்ய முயன்றனர். ஆதிசைவர்கள் எதிர்ப்புத் தெரிவித்ததால் பழைய முறைப்படி முதலாம் சுற்றாலையிலே சுற்றி வருகின்றனர்.

### மூன்றாமியல் (திருவுருவ அமைப்பு)

மூலவர் திருவுருவ அமைப்பும் ஆறுமுகப்பெருமான் திருவுருவ அமைப்பும் ஏனைய முருகன் கோயில்களில் காணப்படாத தனிச் சிறப்பு வாய்ந்த தன்மையைக் கண்டோம்.

இருவரையுமே மூலவராகக் கருதலாம். பாலசுப்பிரமணி யருக்குச் செயந்திநாதர் என்ற பிரதிபிம்பமும், அறுமுகப் பெருமானுக்குக்குமரவிடங்கர் என்ற பிரதிபிம்பமும் உள்ளன.

அலைவாயுகந்த பெருமான் ஆதியிலுள்ள பாலசுப்பிரமணியரின் பிரதிபிம்பமாக இருக்கலாம். அம்மன்சிலைகளும் ஆலயங்களும் பிற் காலத்திலேயே ஏற்பட்டன.

**நான்காமியல்** (நாள் வழிபாடு)

பாலசுப்பிரமணியரையும் ஆறுமுகப்பெருமானையும் தனித்தனி மூலவராகக்கருத நாள்வழிபாடும் இடமளிக்கிறது.

1 பாலசுப்பிரமணியருக்குப் போற்றிமாரும் அறுமுகனுக்கு ஆதிசைவரும் பூசனைபுரிகின்றனர்.
2 சுப்பிரமணியர் தவக்கோலத்தில் காட்சிதருகிறார் சண்முகரோ இல்லறக்கோலத்தில் வள்ளி தெய்வயானையோடு காட்சிதருகிறார் சண்முகர் பாலசுப்பிரமணியரது தோற்றத்திலில்லை.

3 சுப்பிரமணியர் உணவில் உப்பு, புளி, காரம் சேர்ப்பதில்லை. சண்முகருக்கு அவை சேர்க்கப் படுகின்றன.

4 சீபலிகளிலும், சுப்பிரமணியருக்குத்தங்கம், வெள்ளிச் சீபலிகள் உள. சண்முகருக்குச் செப்புச் சீபலி உள்ளது.
5 சுப்பிரமணியருக்கு நிவேதனம் சமைப்பவர் போற்றிகள், ஆறுமுகனுக்கு முக்காணியர்.

6 அபிடேகத்தால் நாள்வழிபாட்டில் சுப்பிரமணியரும் ஆறுமுக அருச்சனையால் சண்முகரும் சிறப்புப் பெறுகினறனர்,

**ஐந்தாமியல்** (திருவிழாக்கள்)

திருவிழாக்களிலும் ஒரே நேரத்தில்இரண்டு பிரதிபிம்பங்களும் (செயந்திநாதர், குமரவிடங்கள்) எழுந்தருளுதல் தமிழகத்தில் வேறெங்கும் காணமுடியாத காட்சி. எட்டாம் திருநாளன்று சுப்பிரமணியர் பிரதிபிம்பமான அலைவாயுகந்தபெருமானும் சண்முகர் பிரதிபிம்பமான குமரவிடங்கரும் ஒன்றுபோலவே வெள்ளிக் குதிரை வாகனத்தில் வலம் வருகின்றனர்.

ஏழு, எட்டுத் திருநாட்களில் ஆறுமுகப் பெருமான் எழுந்தருளும் போது மூலவர் பூசை நின்று விடுதல் குறிப்பிடத்தக்கது.

வள்ளி, தெய்வயானை திருமண நிகழ்ச்சிகட்கு ஆறுமுகப் பெருமான் பிரதிபிம்பமான குமரவிடங்கர் எழுந்தருளுகிறார்.

சுப்பிரமணியர் பிரதிபிம்பமான செயந்திநாதர் அந்தணர் வாழும் வீதிகள் வழியே வலம்வருகிறார். சண்முகர் பிரதியான குமரவிடங்கரோ அனைத்துச் சாதியினரின் மண்டபங்களிலும் எழுந்தருளுகிறார்.

பிரட்டு குளோதி கூறுவது போல் ஆவணித் திருநாள் பாலசுப்பிரமணியருக்காக ஏற்பட்டதாகும்.

ஏற்பட்டகாலத்தில் அலைவாயமர்ந்த பெருமான் எழுந்தருளி யிருக்கலாம், அவருக்குப் பக்க நாச்சிமார் (வள்ளி, தெய்வ யானை யம்மை) இல்லாமையினால், செயந்தி நாதர் பக்க நாச்சிமாரோடு அமைக்கப்பட்டிருக்கலாம்.

பெருவிழாக்களில் ''வேதாந்தி கட்கு ஒரு திருவிழாவாகச் செயந்தி நாதர் எழுந்தருளுகிறார். ஆகமவாதிகட்கு ஒரு திருவிழா வாகக்குமரவிடங்கர் எழுந்தருளுகிறார்'' எனத் திரு. இராமானந்த சாஸ்திரி கூறுவது பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

மேலும், முருகன் ஆண்டியாகவும், அரசனாகவும் காட்சி தரு கிறான். குறவர் மகள் வள்ளியம்மையையும் தேவேந்திரன் மகள் தெய்வயானையம்மையையும் மணந்தவன் ஆயிற்றே. இவ்வூரில்இரு கோலங்களையும் ஒரு சேரக் காணும் வாய்ப்பு உள்ளது.

பாலசுப்பிரமணியரைத் தவக்கோலத்திலிருப்பதால்கடற்கரை யாண்டியாகவும், சண்முகரைச் செந்திலாண்டவனாகவும் கண்டு அருள் பெறலாம்.

## சிலமுடிபுகள்

இங்கு இரு மூலவர் ஏற்படக் காரணமானவர் கேரள மன்னர் என ஊகிக்கலாம் (பக்கம் 66-67இல் நிகழ்ச்சி உள்ளது.) இக்கோயி லில் இன்னும்கேரளமுறைகள் மாறுபட்டில. தரிசனத்திற்குச்செல லும் மக்கள் கோயிலுக்குள் தம்மேற்சட்டையை அகற்றிவிட்டே செல்லவேண்டும்.

செந்தில் நாயகரைமிகு பக்தியோடு சுமக்கும் உரிமை இன்னும் இவ்வூர்த் திரிசுதந்திரர் (முக்காணியர்) வசமே உள்ளது. உள்ளூர்ச் சிவன் கோயிலிலிருந்த சுப்பிரமணியர் சிலையைக் கடற்கரைக் கோ யிலில் முக்காணியரே நிறுவியதாகக் குலசேகரன் பட்டின ஏடு குறிப்பிடுகிறது.

ஆறுமுகப்பெருமானுக்குப் பெருவிழாக் காலத்தில் நார்ப்பெட் டிகளில் உணவு படைத்தல் அவரை எளியோருக் கெளியவனாகக் காட்டுகிறது'

தானத்தில் சிறந்தது அன்னதானம். இவ்வூருக்கு வரும் அன் பர்கட்கு உணவளிக்கத் திருவாவடுதுறை ஆதீனம், திருப்பனந் தாள் ஆதீனம், தருமபுர ஆதீனம் மற்றும் அறநிலையங்கள் உதவி வருதலைக் கண்டோம். மேலும் இத்திருக்கோயிலில் வழங்கப்படு மளவு சோற்றுத்திரளை (கட்டி) வேறு முருகன் கோயில்களில் வழங்கப்படுவதில்லை.

இவ்வூரில் வாழ்ந்த மக்களனைவருமே இத்திருக் கோயிலோடு தொடர்பு கொண்டு வாழ்ந்தனர். இது குடிதழுவிய கோயிலாக விளங்கி வருகிறது.

# குறிப்புகள்

## முதலியல்

பக்கம் 1.

1. ரா. சண்முக சுந்தரஞ் செட்டியார், திருச்செந்தூர்த் தல வரலாறு. ப. 4.
2. அக நானூறு, பரணர் பாடல், பா. 266. அடிகள் 17 — 20.
   ''கழனி யுழவர் கலி சிறந் (து) எடுத்த
   கறங்கிசை வெரீஇப் பறந்த தோகை
   அணங்குடை வரைப்பகம் பொலிய வந்திறுக்கும்
   திருமணி விளக்கின் அலைவாய்''
3. M. S Purnalingam, History of Tamil Literature, P. 16
4. வால்மீகி இராமாயண வசனம், கிஷ்கிந்தா காண்டம், ப. 158

பக்கம் 2.

5. அருணகிரி நாதர், திருச்செந்தூர்த் திருப்புகழ், பா. 17. (தரும புர ஆதீனப் பதிப்பு. 1959.)
6. R. P. Kangle, The Kautiliya Arthasastra, Part II, P. 97
7. அருணகிரி நாதர், அ. நூ., பா. 34.
   ''மதலைதவழ் உததியிடை வருதரள மணி புளின, மறைய வுயர் கரை'' ...
8. பகழிக் கூத்தர், திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ், பா. 88.
   ''திரைமுத்(து) எறியும் திருச்செந்தூர்ச்
   செல்வா சிற்றில் சிதையேலே''
9. நக்கீரர், இறையனார் களவியலுரை, ப. 5 (கழகப் பதிப்பு)
10. அருணகிரி நாதர், அ. நூ., பா. 79
11. 'அலை வாய்க் கரை' என்ற பெயர், இன்றும் அருகிலுள்ள வீரபாண்டியன் பட்டினத்து மக்களால் வழங்கப்படுகிறது.
12. அக நானூறு, பா. 266, அடிகள் 20.
    ''திருமணி விளக்கின் அலைவாய்ச் சேய்''

பக்கம் 3.

13. தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியருரை களவியல், ப. 99.
    ''வரை வயிறு கிழித்த நிழல்திகழ் நெடுவேல்
    திகழ்பூண் முருகன் தீம்புனல் அலைவாய்''
14. நக்கீரர், திருமுருகாற்றுப் படை, திருச்சீரலைவாய்ப் பகுதி அடி. 125
    ''...அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே''
15. கச்சியப்ப சிவாசாரியார், கந்தபுராணம், கடவுள் வாழ்த்து 13 ஆம் பாடல்.
    ''சீரலை வாய்வரு சேயைப் போற்றுவோம்.''
16. ஆய்வாளர் மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தில் தமிழ் விரிவுரையாளராகப் பணி புரியும் பேராசிரியர் ந. சேதுரகு நாதனை 14 - 3 - 78 அன்று பேட்டி கண்டறிந்தது.

17. ரா. பி. சேதுப் பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், ப. 56.
18. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை, திருநெல்வேலிச் சில்லாக் கோவில் வரலாறு, ப. 80.
19. நடேசக் கவுண்டர், புஜங்க மொழி பெயர்ப்பு பா. 7
"உயிருக்கொ ருயிர்செம்பொ னடிபற் றுவோமே"
20. சிலப்பதிகாரம், வஞ்சிக் காண்டம், குன்றக் குரவை, பா. 7.
"சீர்கெழு செந்திலும்........
21. M. A. Rangacharya, A Topographical list of the Inscriptions of the Madras presidency collected till 1915, 2070, 526, 156. of 1908.

பக்கம் 4.

22. குமரகுருபரர், கந்தர் கலி வெண்பா, கண்ணி. 109.
"ஆறு திருப் பதிகண் டு) ஆறெழுத்தும் அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே"
வழிபடும் இடம் படைவீடென்பர் டாக்டர் தி. வைத்தமாநிதி.
23. யோகியர் கூறும் ஆறு ஆதாரங்களாவன:
1. மூலாதாரம் 2. சுவாதிட்டானம் 3. மணி பூரகம்
4. அனுகதம் 5. விசுக்தி 6. ஆஞ்ஞை.
24. திருமுருகாற்றுப் படைத் தெளி பொருள், அ. உத்தண்ட ராம பிள்ளை, அணிந்துரை, ப. 11.
25. அகம், பரணர் பாடல் பா. எண் 266. முற்குறிப்பு.
26. குமரகுருபரர் அ. நூ., கண்ணி 105.
"சைவக் கொழுந்தே தவக்கடலே வானுதவும்......"

பக்கம் 5.

27. குலசேகரப் பட்டினத்துச் சரவண முத்து ஞானியார்.

வரலாறு:

திருச்செந்தூருக்குத் தெற்கே பதின்மூன்று கிலோ மீட்டர் தொலைவிலுள்ள குலசேகரன் பட்டினத்தில் ஏறத்தாழ நானூறு ஆண்டுகளுக்கு முன் செந்தில் காத்த மூப்பனாரின் முன்னோர் குறு நில மன்னராக விளங்கினர். அவ்வூரில் முத்தணைந்த பெருமாள் பிள்ளை அம்மன்னருக்குத் தலைமை அமைச்சராக விளங்கினார். மந் திரங்களில் வல்ல இவர் செந்தில் முருகனிடம் மாறாத பக்தி கொண்டிருந்தார். மலையாளம் பூதப்பாண்டி என்னும் ஊரில் பொல்லாப் பிள்ளை ஆசான் என்ற மந்திரவாதி இருந்தான். இலங்கைக் கண்டியில் வாழ்ந்த அரசிளங் குமாரியை ஏவல் மூலம் கொண்டு வரப் பூதங்களை அனுப்பினான். குலசேகரன் பட்டினம் வழியாகப் பூதங்கள் வான் வழியே இளவரசியைத் தூக்கி வந்தன. நிரீட்சண முத்திரையால் கட்டிலைக் கீழே இறக்கி வைத்தார். மீண் டும் கண்டியில் கொண்டு விடும் படி பூதங்களுக்குக் கட்டளை யிட்டார்.

பூதங்கள் பொல்லாப் பிள்ளை ஆசானிடம் நிகழ்ந்ததைக் கூறின. ஆசான் வைரவரை ஏவினுன். வைரவர் ஞானியார் வீட்டிலேயே தங்கி விட்டார். ஆசான் ஞானியாரைக் காண வந்தான். ஞானியார் அவன் குடும்பம் முழுவதையும் ஓர் அறையிலே காட்டினுர். ஆசான் சரணுகதியடைந்தான்.

ஞானியார் நாடோறும் கடற்கரை வழியே எட்டுக் கல் நடந்து வந்து செந்தில் முருகனை வழிபடுவார். ஒரு தடவை மழைக் கால இருட்டில் வழியறியாது மயங்கினுர். முருகப் பிரான் ஒரு வழி காட்டி உருவில் விளக்கேந்தி, சேகண்டி தட்டிக் கொண்டே வந்தார். ''அப்பா, உனக்கு வயதாகி விட்டது. இனி நீ திருச்செந்தூர் வர வேண்டா. இராக்கால மானதும் நானே உன் வீடு தேடி வருவேன்'' என்ருர் செந்திலாண்டவன். அந்நாள் முதல் ஞானியார் தம் பூசையறையில் முருகன் திருவுருவை வைத்து வழிபட்டார். இன்றும் அக்கோயிலுக்குப் படுக்கை வீட்டுக் கோயில் என்று பெயர். ஞானியார் குடும்பத்தில் வந்தவர் இன்றும் அங்குப் பூசை செய்கின்றனர். அவர் கைப்பட எழுதிய ஏடுகள் பல இன்னும் அவர்கள் வழியினரால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. (நன்றி: T. H. விவேகானந்தம், 'செந்திலாண்டவன் மகிமை, 1965.)

28 ச. சூரிய நாராயணண் [ப.ஆ]; திருச்செந்தூர்க் கோயிலும் செந்திக் காத்தான் செட்டிக்குடும்ப வரலாறும், ப. 6

29 No. 26 of 1912. இக்கல்வெட்டில் திருச்செந்தூர்க் கோயில் இறைவன் பெயர் சுப்பிரமணிய படாரர் எனக்குறிக்கப்பட்டுள்ளது

## இரண்டாம் இயல்

**பக்கம் 6**

1 புறநானூறு, பாடல் 55, அடிகள் 18-19.
''வெண்டலைப் புணரி அலைக்குஞ் செந்தில் நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறை''

2 அகநானூறு, முற்குறிப்பு.

3 கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்திய வரலாறு, (முதல்பகுதி) மு.ரா. பெருமாள் (மொ.பெ.ஆ), ப,5.

4 திருநாவுக்கரசர் தேவாரம், திருமறைக் காடு, திருத்தாண்டகம்4

**பக்கம் 7**

5 கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, அ.நூ., இரண்டாம்பகுதி, ப. 250.

6 ஆய்வாளர் குளோதியை 9-8-78 அன்று திருச்செந்தூரில் பேட்டி கண்டறிந்த செய்தி.

7 ஆதி சங்கரர், அ,நூ.பா. 7
மஹாம்போதிதீரே மஹாபாப சோரே முநீந்த்ரா நுகூலே ஸுகந் தாக்ய சைலே! குஹாயாம் வஸந்தம் ஸ்வபாஸா வஸந்தம் ஐநார்த்திம் ஹரந்தம் சிரயாமே குஹம்தம்''

8 No. 26 of 1912. கி பி. 862இல் வரகுணபாண்டியன் காலத்தில்- இக் கோயிலில் நாள் வழிபாடும் திருவிழாக்களும் சிறப்பாக நடைபெற்றன. இவ்வூரைச் சுற்றியுள்ள கொற்கை, நல்லூர், சாலியத்து ஊர், வரகுணமங்கலம், தியம்பக மங்கலம், இறைவாலி

மங்கலம், ஆலம் பட்டம், மானவீரப் பட்டினம், கட்டாறை மங்கலம், பரைசுமங்கலம், மாறமங்கலம், அவனிபசேகரமங் கலம், கீரனூர், சடங்கவிகுறிச்சி, கடுங்கோமங்கலம் முதலிய ஊர்கள் வழிபாட்டிற்குரிய பொருட்களை உதவி வந்தன.

(நன்றி: திரு. நடனகாசிநாதன், தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை.)

9. No 27 of 1912.

பக்கம் 8

10. No. 28 of 1912.

11. R. Caldwell, A Political and general History of the District of Tinnevelly, p 67.

12. I bid, appendix I, p a. 282. இக்கோயிலுள்ள தங்கச்சீபலியில் குலசேகரப் பெருமாள் பெயர் உள்ளது.

13. திரு. முத்தையாப் பட்டர் தம் முன்னோரது ஏட்டுச்சுவடிகளி லிருந்து படி எடுத்துக் கொடுத்த குறிப்பு.

பக்கம் 9

14. J.M. Somasundaram, Tiruchendur I Edn, P. 35. சுவாமிகள் சிலையுள்ள தூணில் கோபுரச் சிற்பமுள்ளது.

15 Ibid. தேசிக மூர்த்தி சுவாமிகளின் சமாதி காந்தீசுரத் திலுள்ளது.

பக்கம் 10

16. ஆ. சொக்கலிங்கம், ஆலயங்களின் உட்பொருள் விளக்கம், ப.65.

17. இத்திருக்கோயில் மணியம் முத்தாண்டி ஐயரைப் பேட்டி கண்டறிந்தது.

பக்கம் 11

18. J.M. Somasundaram, Tiruchendur, I Edn, P 38

19. காசி சுவாமிகள்: இவர் கோயில் திருப்பணி செய்த ஐவருள் இரண்டாமவர். இயற் பெயர் தெரிந்திலது. காசிக்குச் சென்று வந்ததால் இப் பெயர் பெற்றார் என்பர். இவரது சிலை வள்ளியம் மன் கோயில் முன்னுள்ளது. இவரது சமாதி நாழிக்கிணற்றுக்குத் தென்புறம் கடற்கரையிலுள்ளது. கோயிலருகே இலுப்பைத் தோப்பு அமைத்தவர்.

20. இக்கோயிலின் எழுந்தருளும் மூர்த்திகள் நால்வருள் ஒருவர் இவரைச் 'செயந்தி நாதர் என்றும் அழைப்பர். இவரை மூலவரின் பிரதிபிம்பம் எனலாம். ஏனைய எழுந்தருளும் மூர்த்திகள்: ஆறுமுக பெருமான் (சண்முகர்), குமரவிடங்கப்பெருமான், அலைவாயுகந்த பெருமான் (அலைவாயமர்ந்த பெருமான் என்றும் கூறுவர்).

2├. மௌன சுவாமி: கி.பி. 1897 ல் வசந்தமண்டபத்தைக் கட்டி முடித்தார். சண்முக விலாசத்தைப் புதுக்கினார். இவர் காசி சுவா மியின் துணைவர். கி பி. 1907இல் மூலவர் பிம்பம் பின்னப்பட்டது கி.பி. 1909-ல் கும்பாபிடேகத்திற்காக மௌனசுவாமி ரூ 15117/-

அஞு9 காணிக்கைஈந்தார். 19-4-1909 அன்று மறைந்தார். நாழிக் கிணற்றுக்குத் தெற்கேஇவர்சமாதி உள்ளது. தேரும்கொடிமரமும் அமைத்தார் என்பர் கிபி. 1877இல்மேலக்கோபுரத்தைப்புதுப்பித் தார்.

**பக்கம் 13**

மூலவருக்குப் போற்றிமாரால் சமைக்கப்படும் போற்றி மடைப் பள்ளியும், ஆறுமுகருக்கு முக்காணியரால் சமைக்கப்படும் மடைப்பள்ளியும், வேங்கடாசலப் பெருமாளுக்குச் சீவைணவ ஆச் சாரியாரால் சமைக்கப்படும் மடைப் பள்ளியும் தனித்தனியாக உள்ளன.

**பக்கம் 14**

23. பாண்டியன் மகளது குதிரை முகத்தை இவ்வூர் வெயிலுகந் தம்மன் வாங்கிக் கொண்டாள் என்பர். வெயிலுகந் தம்மன் கோயி லில் குதிரை முகச் சிலை உள்ளது.

24. கொடிமரக்காப்பியம், ப. 3. இவ்வேட்டினை ஆய்வாளர் சி. நாராயணய்யர் வீட்டிலிருந்து பெற்றுர். 'திருச்செந்தூர்க் கோயில் கொடி மரக் கதை' என்ற பெயரில் க. ஜெகமோகன் பதிப் பித்துள்ளார்.

**பக்கம் 16**

25 ஆய்வாளருக்கு பீடங்களின் மேலுள்ள இடைவெளியைக் குறிப்பிட்டுக் காட்டியவர் இக்கோயில் விதாயகர் திரு. எஸ். வேம்புசாஸ்திரி.

26 ந. கல்யாணசுந்தரம், ஆறுமுகசுவாமி வரலாறும் திருச் செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகோயில் திருப்பணியும். ப.11.

ஆறுமுகசுவாமிகள் கி.பி. 1865 ஆம் ஆண்டு கடையத்தில் பிறந்தார். கி.பி. 1910 ஆம் ஆண்டு முதல் 1940 வரை. திருச்செந்தூர்க் கோயிலில் திருப்பணி செய்தார் கோயிலில் பழுது பட்ட வெள்ளைக்கல் தூண்களை அகற்றி அழகிய கருங்கல் தூண்களை அமைத்தார். கருங்கல் தளம் அமைத்தார். மதில் சுவர்களைக் கட்டினுர்.

திம்மராசபுரம், மகிழம்மாள்புரம், தளவாய்புரம் ஆகிய ஊர்களைக்கோயிலுக்காக விலைக்கு வாங்கினுர். கி. பி. 1934இல் கோபுரப் பதுமைகளைப் புதுப்பித்தார். திருப்பணி உண்டியல் ஒன்றைத் தனியாக ஏற்படுத்தித் தனிக்கணக்கினைத் தொடங்கினுர் 75ஆம்வயதில் 7.6.1940 அன்று இறைவன் திருவடி சேர்ந்தார். நாழிக்கிணற்றுக்குத் தெற்கே இவரது சமாதி உள்ளது. இவரது சிலைகள் செப்புக்கொடிமரத்திற்கு அருகிலுள்ள சிறிய கோபுரத்தின் வடபுறமும், சித்த மருத்துவ மனையிலும் உள்ளன.

**பக்கம் 17**

27 ச. முத்துக்குமாரசாமி, திருச்செந்தூர் வள்ளி மணுளன் கோயில் வரலாறு. ப 39

28 Suresh B. Pillai, Introduction to the study of Temple Art, p-61,

29 மு. முத்தையாப்பட்டர் குறிப்பு.

30 ஆய்வாளர் திரு. வேம்பு சாஸ்திரிகளைப் பேட்டி கண்டறிந்தது.

31 பகழிக் கூத்தர், அ.நூ, பா 97
இருதிரையினிற் சந்தனக் கொடி மரத்தினையிழுத்துவரும் எருமை யேற்றை"

பக்கம் 19

32 சுற்றுக்கோயில்கள் வருமாறு: 1. வள்ளியம்மன் குகை. தூண்டுகை விநாயகர் 3. சுவர்ணசாத்தா 4. சிவக்கொழுந்தீசுவரர் 5. அமிர்த குணவிநாயகர் 6. அனந்தசாஸ்தா 7. சொக்கர் 8 ஆட்கொண்ட விநாயகர் 9. மரகதவல்லி 10. முத்தாரம்மன். 11. அரசாள்வார் 12. உச்சினிமாகாளி 13. வெயிலுகந்தம்மன் 14. சபாபதிவிநாயகர் 15. தலையூன்றிச் சாத்தா 16. குன்றுமேலய்யன் 17. பிரணவேசுவரர் (ஓம நல்லூர்) 18. பிரசன்ன சித்திவிநாயகர் 19. கச்சிகொண்ட விசய பாண்டீசுவரர் (குலசேகரன்பட்டினம்) 20. இடும்பன் 21. விநாயகர் கோயில் (நாசரேத்) 22 இடிந்தகரையிலுள்ள கோயில் (நன்றி இரா. கணபதி, பேஷ்கார், திருக்கோயில், திருச்செந்தூர்)

பக்கம் 20

33 H. Sarkar, "A Pandya Rock cut cave at Manappadu on Pearl fishery coast, "Damilica", Journal of the Tamilnadu State Dept of Archaeology, December, 1970, P, 82

34 திரு K.S. இராமானந்த சாஸ்திரி, திருச்செந்தூர், ப.8.

35 கதை கூறியவர் அமலிபுரத்தைச் சார்ந்த திரு. பெஞ்சமின்.

36 ஜே. லேயோ சிம்மராய பண்டிதர், பரதகுல பாண்டியர் பழமை, பாடலினடிகள்:
"முந்தும் பரத்தி குறத்திமாமி முழுக்குகைச்சி
இந்தச் சிறுக்கியையோ சிவகாமி யென்(று) ஏத்துவதே."
அந்நூலின் ப. 94 அடிக்குறிப்பு 133இல் பரத்தியாகிய சுப்பிரமணியருடைய குலஸ்திரி தெய்வ யானைக்குச்சொந்த மாமி (சிவகாமி) என்றுள்ளது.

37 ஆய்வாளர் 10.5.78 அன்று நாடோடிக்கதை ஆய்வாளரான டாக்டர் ஹண்டுவைக் கேட்டறிந்தது

பக்கம் 21

38 வெற்றிமாலை, அ.நூ, பாக்கள் 102-107
39 மேலது, பா-473
40 க. ஜெகமோகன் [ப-ஆ], அ நூ, ப.
41 சி. நாராயணய்யர் கூறியது.

பக்கம் 22

42 வெற்றிமாலை, அ.நூ, பா, 407
43 பட்டினப்பாலை, அடிகள் 99-100
"தீது நீங்கக் கடலாடியும்,
மாசு போகப் புனல்படிந்தும்"

44 ச. முத்துக்குமாரசாமி, அ.நூ, ப. 8

45 ஆவணிப் பெருவிழாச் சொற்பொழிவில் கேட்ட செய்தி தீட்சிதர் வசந்த மண்டபத்திலிருந்து பாடினார் என்பர் சிலர்.

பக்கம் 23

46 தத்துவங்கள் 96- இம்மண்டபத்தில் 96 தூண்களிருப்பதால் இப்பெயர் பெற்றது.

பக்கம் 24

47 நன்கொடையாளர் சிறப்பு நாட்களிலும் திருவிழாக் காலங்களிலும் தங்குவதால் கோயில் வருமானம் இழப்புக் குள்ளாகிறது. குடில்களைப் பசுவிற்கு ஒப்பிட்டுச் செயல் அலுவலர் நகைச் சுவைப்படக் கூறியதாவது: பசுவின் முன் பகுதி திருக்கோயிலுக்கும், பால்சுரக்கும் பின்பகுதி நன்கொடையாளருக்கும் உரிமையாக உள்ளன.

## மூன்றும் இயல்

பக்கம் 29

1 திரு. முத்தையாப்பட்டர், திருச்செந்தூர் முருகன் வழி பாட்டு முறை, ப.

2 கதை கூறியவர் திரு தி.வ. கல்யாண சுந்தரம், ஆசிரியர், திருநெல்வேலி.

3 திரு. க. இராசாராம், திருச்செந்தூர்.

பக்கம் 31

4 இதற்குச்சான்றான கல்வெட்டு தங்கக்கொடி மரத்தருகில் உள்ளது.

5 ச. சூரிய நாராயணன், அ.நூ, ப.7

6. ச. தண்டபாணி தேசிகர், அ. நூ., ப. 49.

பக்கம் 32

7 Elements of Hindu Iconography. Vol II, Part II p. 425

8 K-M- Duraisamy, "An iconographical study of subrahmanya" (M. A 1973 Dissertation)

பக்கம் 33

9 ம. அ. முருகேசன், "திருச்செந்தூர்", திருக்கோயில், பிப்ரவரி, 1975, சென்னை. ப. 37.

10 J. M. Somasundaram, A History of Tamil Literature, P.369

11 கே. என். ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி (மொ. பெ) காசியப சில்ப சாஸ்திரம், ப. 31.

12 ஸ்ரீ குமாரர், சிற்பரத்தினம், இருபத்திரண்டாவது அத்தியாயம், பக் 155-156.

13 கச்சியப்பர், அ. நூ, யுத்தகாண்டம், மீட்சிப்படலம், பா. 32.

"ஆமயம் முதலிய ஐந்து கந்திகள்
மாமலர் மஞ்சனம் அமிர்தம் வான்துகில்
தூமணி விளக்கொடு தூபம் கண்ணடி
சாமரை ஆதிகள் அமரர் தந்திட"

